# இலங்கையில் தப்லீக் ஜமாஅத்தும்,

# அதற்கெதிரான போராட்டங்களும் ஓர்ஆய்வு!

## மௌலவி பாஸில், ஏ.எல்.பதுறுத்தீன் ஷர்க்கி,

அகில இலங்கை ஜம்இய்யத்துல் உலமா சபையின் வெளியீட்டில் வெளிவந்த "செரன்தீப் கண்ட சான்றோர்கள்" பகுதி-1 இன்று 20. 02 -2022 மணி 5:15க்கு ஒரு அன்பர் மூலமாக என் பார்வைக்கு வந்தது!,

இந்நூலை அகில இலங்கை ஜம்இய்யத்துல் உலமா சபையின் முன்னாள் பொதுச்செயலாளர் எம்,எம்,ஏ, முபாறக் தொகுத்திருக்கின்றார்,

இந்நூல் அவசரத்தில் தொகுக்கப்பட்டதால் ஒரே தகவல் மாறுபட்டதாக.சில இடங்களில் காணப்படுகின்றது ,இன்னும், கிடைத்த தகவல்களின் உண்மைத் தன்மையை ஆராயாமல் ஓரக் கண் பார்வையால் எழுதப்பட்டிருப்பது புத்தகத்தின் மதிப்பையும், நம்பகத் தன்மையையும் சந்தேகிக்க வழி செய்கின்றது.

தனக்குக் கிடைத்த தகவல்களில் ஏதும் தவறுகளை வாசகர்கள் சுட்டிக்காட்டினால் திருத்திக் கொள்வதாக ஆசிரியர் முன்னுரையில் குறிப்பிட்டிருபதை வரவேற்கத்தக்கது,

இலங்கையில் வாழ்ந்து மறைந்த மூத்த உலமாக்கள், ஷைகுமார்கள், ஸாதாத்மார்கள் உள்ளிட்ட பலர் தவிர்க்கப்பட்டிருப்பதிலும், இயக்கம் சார்ந்தவர்களுக்கும் , நெருங்கியவர்களின் அபிமானிகளுக்கும்

முன்னுருமை வழங்கியிருப்பதும் ஆசிரியரின் மனப் பதிவுகளை வெளிப்படுத்துகின்றது.

இலங்கையில் வாழ்ந்த சான்றோர்களின் உண்மையான வரலாறுகளை காய்தல் உவர்தலின்றி நடுநிலைப் பார்வையில் தொகுக்கப்பட வேண்டியது காலத்தின் அவசியத் தேவையாகும், இந்த வகையில் இது ஒரு கன்னி முயற்சியாகும், இதன் மூலமும் முக்கியமான தகவல்கள் ஆவணப் படுத்தப்பட்டிருப்பது பயனுள்ளதாகவும் இருக்கின்றது.

இந்த முயற்சியில் அஹ்லுஸ்ஸுன்னத் வல்ஜமாஅத்தை பிரதிநிதித் துவப்படுத்தும் அமைப்புக்களும், ஆர்வலர்களும் களத்தில் இறங்கி நமது சானறோர்களின் சரிதைகளைத் தொகுத்து வெளியிடுவதில் அக்கறை காட்ட வேண்டியது காலத்தின் கட்டாயமும், அவசியமுமாகும்,

ஸரன்தீப் கண்ட சான்றோர்கள் என்ற புத்தகத்தில், அஷ்ஷைக் ஸூபி அப்துல் காதர் காதிரி என்ற தலைப்பில் ஒரு கட்டுரை இடம் பெற்றிருக்கின்றது, அதில் அன்னாரைப் பற்றிய சரித்திரத்தை முழுமையாகத் தவிர்த்து விட்டு அவர்கள் பேரில் அபாண்டத்தையும், அவமரியாதையும் அள்ளி வீசியிருப்பது புத்தகத்தை எழுதியவரினதும், அதை வெளியிட்ட அ.இ.ஜ.உ.சபையினதும் அழுக்கடைந்த மனதை அப்பட்டமாக பறை சாற்றுகின்றது.

சங்கைக்குரிய ஷைகுநாயகம் ஷைகு அப்துல் காதிர் ஸூபி, நூரி, காதிரி நக்ஷ பந்தி காஹிரி கத்தஸல்லாஹு ஸிர்ரஹுல் அஸீஸ் அவர்களின் வாழ்க்கைக் குறிப்பை முழுமையாக இரட்டடிப்புச் செய்தவர்கள் , அன்னாரை புத்தகத்தில் இடம்பெறச் செய்ததின் உள்நோக்கம் அன்னாரைக் கொச்சைப்படுத்தி தப்லீக் ஜமாஅத்தை

நியாயப்படுத்துவதாகும் என்பதை மந்தப்புத்தியுள்ளவனும் எளிதில் மதிப்பிடுவான்.

ஆதலால், நூலாசிரியரினதும், அகில இலங்கை ஜம்இய்யத்துல் உலமா சபையினரினதும் கபட நாடகத்தை தோலுரித்துக் காட்டவேண்டியது அன்னாரின் உண்மைச் சீடர்களாகிய எமது பாரிய பொறுப்பு மட்டுமல்ல !, தற்காலத்தில் உள்ளவர்களுக்கு எதார்த்தத்தை விளங்கிக் கொள்வதற்குரிய மார்க்கமுமாகும் என்று நம்பி முழு விளக்கத்தையும் முடியுமான வரை தொகுத்துத் தர விளைகின்றேன்.

## இலங்கையில் தப்லீக்ஜமாஅத்

தப்லீக் ஜமாஅத் இலங்கையில் 1952ம் ஆண்டு அறிமுகமானது, தப்லீக் ஜமாஅத்தை இந்தியாவிலிருந்து கொண்டு வந்தவர்கள் முதன்முதலில் கொழும்பு சம்மாங்கோடு பள்ளிவாசலுக்கே வந்தார்கள்,அப்போது ஷைகுனா ஸூபி ஹளறத் நாயகம்வர்கள் சம்மாங்கோடு பள்ளிவாசலில் பிரதம இமாமாக இருக்கின்றார்கள்;

கசங்கிய ஆடைகளும், ஆடைகளை மாராப்பில்கட்டி, அமாமாராப்பை தோளில் சுமந்துகொண்ட விநோதமும்,உலமாக்களை முழுமையாகத் தவிர்த்துக் கொண்டு பள்ளிவாசல் நிருவாகிகளையும், வசதிபடைத்த தொழிலதிபர்களையும், பாமரர்களில் பராக்கிரமானர்களையும் குறிவைத்து வேட்டையாடுவதையும் உற்றுக் கவனித்தார்கள் ஷைகுனா ஸூபி நாயகம்!

சில நாட்களின் பின், இக்கூட்டத்தின் நடவடிக்கையின் பாசாங்கும், நயவஞ்சகத்தனமான அணுகு முறையும் இவர்களுக்கு சந்தேகத்தை ஏற்படுத்தியது ; தப்லீக் ஜமாஅத் டில்லியிலிருந்து வந்திருப்பதால் இவர்கள் பற்றிய உண்மையை அங்குள்ளவர்கள் மூலமாகவே அறிந்து

கொள்ள முடியும் என்று முடிவு செய்த ஷைகு நாயகமவர்கள் இந்தியாவின் மகாராஷ்டா மாநிலம் நாக்பூரிலுள்ள ஜாமிஆ இஸ்லாமியா அரபுக் கலாசாலையில் நிறுவனரான தனது நண்பர் முப்தி யஃகூப் ஸாஹிப் அவர்களைத் தொடர்பு கொண்டு விளக்கம் கேட்டார்கள்;

இக் காலப்பகுதியில் ஷைகு நாயகமவர்கள் ஒரு கனவு கண்டார்கள்.கரைபுரண்டு ஓடும் பாரிய வெள்ளத்தில் மக்கள் சாரிசாரியாக அடித்துச் செல்லப்படுகின்றார்கள், அவ்வாறு அடித்துச் செல்பவர்களை தான் தனித்து நின்று போராடி காப்பாற்றுவதாக அக்கனவு அமைந்திருந்தது,

தப்லீக் ஜமாஅத்தின் வருகையும், அதில் மக்கள் கவரப்பட்டு வேகமாக அதில் சேர்வதும் , மக்கள் அதன் மூலமாக வழிகெட்டு ஈமானை இழந்து செல்லப்போகின்றார்கள், மக்களை இதிலிருந்து காப்பாற்ற வேண்டும் என்று அல்லாஹ்வால் தனக்கு உணர்த்தப்படுவதாகவும் , இதுவே கனவின் பலன் என்றும் ஷைகு நாயகமவர்கள் உறுதியாக நம்பினார்கள், இதற்குள் நாக்பூரிலிருந்து தப்லீக் ஜமாஅத் பற்றிய முழு விளக்கமும் கிடைத்தது!

கிடைத்த உருதுவிலிருந்த புத்தகத்தையும், அதில் மேற்கோள் காட்டப்பட்ட தப்லீக் தலைவர்களின் உருது நூற்களையும் வரவழைத்து ஒப்பிட்டுப் பார்த்து போது ஷைகு நாயகத்தின் சந்தேகமும் , தான் கண்ட கனவின் பொருளும் சந்தேகத்திற்கு இடமின்றி உறுதியானது.

**Part-2**

முப்தி யஃகூப் ஸாஹிப் கிப்லா அவர்கள் தப்லீக் ஜமாஅத் பற்றிய முழுத் தகவல்களையும் உள்ளடக்கிய பல உருது நூற்களையும், ஃ

பத்வாக்களையும் ஷைகுனா ஸூபி ஹளறத் நாயகத்திற்கு அனுப்பி வைத்திருந்தார்கள்,

ஷைகுனா ஸூபி ஹளறத் நாயகம வர்களுக்கு அரபு, உருது, பாரிசி மொழிகளில் ஆழமான அறிவு இருந்தது, அனைத்தையும் படித்தபின், தப்லீக் தலைவர்மௌலவிஇல்யாஸின் குருமார்களின் நூற்களை யும் வரவழைத்து ஒப்பு நோக்கி ஆராய்ந்து பார்த்தார்கள்,

தப்லீக் ஜமாஅத் பற்றிய குற்றச்சாட்டுக்கள் யாவும் நிஜம் என்பதை தெட்டத் தெளிவாக விளங்கியபின், கொழும்பில் அப்போதிருந்த கண்ணியத்திற்குரிய உலமாக்களிடத்தில் முழு விளக்கத்தையும் தக்க ஆதாரத்தோடு தப்லீக்ஜமாஅத்தின் உண்மை முகத்தை விளக்கி தோலுரித்துக்காட்டினார்கள்;

தப்லீக் ஜமாஅத்தின் உண்மை முகத்தை புரிந்து கொண்ட உலமாக்கள் தப்லீக்ஜமாஅத்தைத் தடைசெய்ய வேண்டும், தவறினால் மக்கள் வழிகெட்டுப் போய்விடுவார்கள் என்று ஒருமனதாகத் கூறினார்கள். இவ்வாறு முழு ஊக்கத்தோடு கூறியவர்களுள் அப்போது கொழும்பு பெரிய பள்ளிவாசல் கதீப் மௌலவி, அப்துர்ரஸ்ஸாக் ஜமாலி முக்கியமானவராகும்,

மௌலவி அப்துர்ரஸ்ஸாக் ஜமாலி கொழும்பைச் சேர்ந்தவர், செல்வாக்கான குடும்பத்தைச் சேர்ந்தவர், இவரின் ஆதரவு ஷைகுனா ஸூபி ஹளறத் நாயகத்து உத்வேகத்தையும் ,உவகையையும் ஏற்படுத்தியது. அப்போது கொழும்பிலும் , இலங்கையின் அநேகமான நகரங்களிலும், முக்கிய ஊர்களிலும் இந்தியாவைச் சேர்ந்த உலமாக்களே பள்ளிவாசல்களில் இமாமாக இருந்தனர், தவிர, வர்த்தகர்களாகவும் பலர் ஆங்காங்கு இருந்தனர்,

அப்போது இலங்கையிலிருந்த இந்திய, இலங்கை உலமாக்களிடத்தில் ஷைகுனா ஸூபி ஹளறத் நாயகம வர்களைப்பற்றிய நல்லெண்ணமும் , உயற்மதிப்பும் இருந்தது;

ஷைகுநாயகமவர்களின் தந்தை கம்பனி சின்ன அஹ்மது ஆலிம் ஆவார்கள், இவர்கள் புகழ்பெற்ற தோல்வியாபாரியாக விளங்கினார்கள், பரம்பரையாக இத்தொழிலைச்செய்து வந்த இவர்களுக்கு இந்தியாவின் பலமாநிலங்களிலும் பல கம்பெனிகள் இருந்தன, C.A.K. கம்பனி என்ற பெயரில் இயங்கிவந்த இவர்களின் கம்பனித் தோலுக்கு லண்டனில் நல்ல மதிப்பு காணப்பட்டது !,

தோல் வியாபாரத்தில் பல கம்பனிகள் வைத்துத் தொழில் செய்து வந்ததனால் இவர்களின் குடும்பம் " *கம்பனியார்* *குடும்பம்"* என்று பிரபலமானது! இன்றுவரை இதே பெயரில்தான் அக்குடும்பம் அழைக்கப்படுகின்றது;

கம்பனி சின்ன அஹ்மது ஆலிம் அவர்கள் சிறந்த ஆலிமாகவும், தொழிலதிபராக வரும், வள்ளலாகவும் விளங்கினார்கள், காயல்பட்டினத்தில் காதிரியாதரீக்கத்தின் கேந்திரமாக விளங்குகின்ற "மஹ்லறாவை தனது சொந்த நிலத்தில் சொந்த செலவில் கட்டினார்கள்,

தந்தைக்குப் பின் ஷைகுனா ஸூபிஹளறத் நாயகமவர்கள் மஹ்லறாவை பொறுப்பெடுத்து செயலாளராக இருந்து வழிநடத்தி வந்தார்கள், தவிர, ஷைகு நாயகமவர்கள் அக்காலத்தில் ஷைகுல் அக்பர் முஹ்யத்தீன்இப்னு அரபி என்று அழைக்கப்பட்ட ஹைதராபாத் ஸூபி ஹளறத் நாயகம் கத்தஸல்லாஹு ஸிர்ரஹுல் அஸீஸ் அவர்களின் கலீபாவாகவும் விளங்கினார்கள்,

சங்கைக்குரிய அப்துல் கரீம் ஹளறத்தவர்களின் விருப்பத்திற்குரிய மாணவராகவும் இருந்ததோடு பொதக்குடி அந்நூறூல் முஹம்மதியா மத்ரஸாவில் உஸ்தாது ஆகவும் சங்கைக்குரிய அப்துல்கரீம் ஹளறத்அவர்களால் பணியமர்த்தப்பட்டு பல ஆண்டுகள் கடமை செய்தார்கள்.

ஷைகுனா ஸூபி ஹளறத் நாயகம வர்கள் அறிவிலும், ஆத்மீகத்திலும், குடும்ப செல்வாக்கிலும் , தன்னலம் கருதாது சேவை செய்யும் மனப்பாங்குள்ளவர்களாகவும் விளங்கினார்கள், தனக்குத் தெரிந்த உண்மைகளை எடுத்துக்கூறுவதிலும், தவறைச் சுட்டிக்காட்டுவதிலும் துணிச்சலாக செயல்படும் இயல்பு சிறுவயது முதல் அவர்களிடம் காணப்பட்டது!,

இந்த பின்னணியில் தான் இலங்கையில்,குறிப்பாக கொழும்பிலிருந்த உலமாக்கள் மத்தியில் ஷைகுனா ஸூபி ஹளறத் நாயகமவர்களுக்கு உயற்மதிப்பும் காணப்பட்டது !, கொழும்பில் பள்ளிவாசல்களிலும், வர்த்தக நிலையங்களிலும் கடமை செய்து வந்த உலமாக்கள் ஆரம்பத்தில் தப்லீக் ஜமாஅத்தை எதிர்க்க வேண்டும் என்று ஒருமனதாகக் கூறியவர்கள் பின்னர் ஒவ்வொருவராக பின்வாங்கிச்செல்லத் தொடங்கினார்கள்;

இதற்குப் பிரதான காரணம், தப்லீக் ஜமாஅத்தின் நிறுவனர் மௌலவி இல்யாஸ் வகுத்த வியூகம் தான் ! தப்லீக் ஜமாஅத் எங்கு சென்றாலும் முதலில் உலமாக்களைச் சந்திக்கக் கூடாது ! வர்த்தகர்கள் , செல்வாக்குள்ள வர்களைச் சந்தித்து இப்பணியில் அவர்களை முழு வீச்சில் ஈடுபடுத்த வேண்டும் , தப்லீக் கின் பொறுப்பும் அவர்களிடமே ஒப்படைக்க வேண்டும், இவ்வாறு செயல்பட்டால், உலமாக்கள் தானாக முன்வந்து இப்பணியில் ஈடுபடுவார்கள் என்று அவர் கூறியது *"மல்பூஜாத்தில்* " பதிவு செய்யப்பட்டுள்ளது!

மௌலவி இல்யாஸின் திட்டப்படி, உலமாக்கள் பள்ளிவாசல் நிருவாகிகளாலும், வர்த்தகரர்களாலும், சண்டியர்களாலும் கட்டுப்பாட்டுக்குள் கொண்டுவரப்பட்டனர், சத்தியம் விளங்கியும் விலங்கிடப்பட்டவர்களாக இருந்ததால் மெல்ல மெல்ல ஷைகுனா ஸூபி நாயகத்தை விட்டும் தூரமாகத் தொடங்கினர்,

உலமாக்களின் மனமாற்றத்தைக் கண்ட ஷைகு நாயகம்மனம் தளராமல் தப்லீக் ஜமாஅத்தின் போலி வேஷத்தை களைந்து அதிலிருந்து மக்களைக் காப்பாற்றுவதில் மனவுறுதியோடு இருந்தார்கள்,

ஒருநாள் நண்பர் அப்துர்ரஸ்ஸாக் ஜமாலியை கொழும்பு பெரிய பள்ளிவாசலுக்குச் சென்று உரையாடிய போது அவர்பேச்சில்தளர்ச்சியை அவதானித்தார்கள்,, நீங்கள் கொழும்பை பிறப்பிடமாகக் கொண்டவர், செல்வாக்கான குடும்பத்தையும் சேர்ந்தவர் எதற்காக பின்வாங்க வேண்டும்? என்று கூறிய போது, உங்களோடு சேர்ந்து நாங்களும் தப்லீக் ஜமாஅத்தை எதிர்த்தால், தொழிலையும் இழந்து சமுகத்திலிருந்து ஓரம்கட்டப்படுவோம் என்று கூறினார்,

மௌலவி அப்துர்ரஸ்ஸாக் ஜமாலியின் பேச்சால் ஏமாற்றமடைந்த ஷைகுனா ஸூபிஹளறத் நாயகமவர்கள்" உண்மையை எடுத்துக்கூறி தப்லீக் கின் மோசடியிலிருந்து மக்களைக் காப்பாற்ற உலமாக்களாகிய நீங்கள் முன்வராவிட்டாலும் தனித்து நின்று நான் போராடுவேன் என்று நெஞ்சுரத்தோடு கூறிவிட்டு நகர்ந்தார்கள்;

உலமாக்களின் அசமந்தமும், உலகத்திற்காகவழிகேட்டுக்கு சோரம் போகும் அவலத்தையும் எண்ணி மனம் வெதும்பினார்கள். தொழில்

நிமித்தமாக கடமை செய்யும் உலமாக்களின் பரிதாபத்தை எண்ணி வேதனைப்பட்டார்கள்;

உலமாக்களில் மிகமிக சொற்பமான வர்களின் மறைமுக ஆதரவில் முழுவீச்சில் முப்தி யஃகூப் ஸாஹிப் கிப்லா அவர்கள் அனுப்பி வைத்த "ஜராதீமுல் வஹாபிய்யா ஃபீ ஜமாஅத்தித் தப்லீகிய்யா" என்ற உருது நூலை தமிழாக்கி" தப்லீக் ஜமாஅத்தில் வஹாபிஸத்தின் விஷக்கிருமிகள்" என்ற பெயரில் அச்சிட்டு வெளியிட்டார்கள், தீவிரபிரச்சாரத்திலும் இறங்கினார்கள்.

மேற்படி புத்தகமும் ஷைகுநாயகத்தின் தீவிர பிரச்சாரமும் தப்லீக் ஜமாஅத்தின் மேலிடத்திற்கு கலக்கத்தை ஏற்படுத்தியது

Part ( 3 )

தப்லீக் ஜமாஅத்தின் நிறுவனர் மௌலவி இல்யாஸ் தேவ் பந்தில் கல்விகற்றவர், தேவ் பந்து ஷைகுமார்களிடம் நெருங்கிய உறவைப் பேணியவர், அவர்களின் அபிமானத்தையும் பெற்றவர்; தேவ்பந்திகளின் வரலாறு இருநூறு ஆண்டுகளைத் தாண்டி நிற்கின்றது;

இந்தியாவுக்கு வஹாபிஸத்தை அறிமுகம் செய்த இஸ்மாயீல் திஹ்லவி, இவரின் ஷைகு செய்யித் அஹ்மத் ரேபரலவி ஆகியோரை வழிக்காட்டியாகக் கொண்டவர்களை தேவ்பந்திகள் அழைக்கப்படுகின்றனர், இவர்கள் முஸ்லிம்கள் மத்தியில் குழப்பத்தை ஏற்படுத்துவதற்காக பிரிட்டிஷாரால் பணம் கொடுத்து நியமிக்கப்பட்ட முகவர்களாவார்கள்.

இஸ்மாயீல் திஹ்லவி குழப்பமான பல நூற்களை எழுதியுள்ளார், அவற்றுள் "தகவியத்துல் ஈமான்" "ஸிறாத்தே முஸ்தகீம்," "எக்றோஜி" உள்ளிட்டவை முக்கியமானவை. மேற்படி நூலில் வஹ்ஹாபிகளின் வழிகெட்ட கொள்கைகளை எழுதியதோடு உயிரிலும் மேலான கண்மணி றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை தரம் தாழ்த்தி யும் எழுதியிருக்கின்றார்;

இஸ்மாயீல் திஹ்லவியின் நூல் வெளிவந்த போது முழுஇந்தியாவிலிருந்தும் எதிர்ப்புக்கள் கிளம்பின,இந்த நூற்களில் குப்ரியத்தான கருத்துக்கள் நிறைந்துள்ளதாக குற்றச்சாட்டுக்கள் எழுந்தன, இவற்றிற்கு எதிராக பல நூறு நூற்களும் வெளிவந்தன;

சங்கைக்குரிய ஆலிமுல் அறூஷ் அல்லாமா மாப்பிள்ளை ஆலிம் றஹ்மதுல்லாஹி அலைஹி அவர்கள் தங்களுடைய மஙானியில் பின்வருமாறு எழுதுகின்றார்கள்,

"கியாமத்து நாளில் இவ்வாறு பரிந்துரை செய்யும் உரிமை இன்னாருக்குத் தான் என்று குறிப்பாக்குவது கூடாது என்று வஹ்ஹாபியுடைய சீடர்களான , வஹ்ஹாபி மத்ஹபைச் சேர்ந்த மௌலவி இஸ்மாயீல் திஹ்லவி, முஹம்மது அலி றாம்பூரி ஆகியோரின் விளக்கம் தவறானதாகும் "

மஙானி சட்டக்கருவூலம் பக்கம் : 24

அல்லாமா ஆலிமுல் அறூஷ் மாப்பிள்ளை லெப்பை ஆலிமவர்கள் குறிப்பிடுபவர்கள் ஸெய்யித் அஹ்மத் ரேபரலவியின் கலீபாக்களாவார்கள்.

அல்லாமா ஆலிமுல் அறூஷ் மாப்பிள்ளை லெப்பை ஆலிம் றஹ்மத்துள்ளாஹி அலைஹி அவர்கள் குறிப்பிடும் வஹாபி மத்ஹபைச் சேர்ந்தவர்களின் வழிகெட்ட கொள்கைகளைப் சோதிப்பதற்காக உருவாக்கப்பட்ட கேந்திர இடம்தான் தேவ்பந்து மத்ரஸாவாகும்.

மௌலவி இல்யாஸின் தந்தைவழிப்பாட்டன் செய்யித் அஹமத் ரேபரேலவியோடு நல்லுறவைப் பேணியவர் என்று தீனிதஃவத் என்ற நூல் கூறுகின்றது,

இஸ்மாயீல் திஹ்லவியின் "தக்வியத்து ஈமான் என்ற நூல் குப்றியத்துக்கள் நிறைந்த ஆபாசக்களஞ்சியம் என்று பாக்கியாத்துஸ்ஸாலிஹாத்தின் நிறுவனர் அஃலாஹஸறத் அப்துல் வஹ்ஹாப் கிப்லா உள்ளிட்ட பல மூதறிஞர்களின் ஒப்பத்துடன் கொடுத்த மார்க்கத் தீர்ப்பு "தப்ஹீமுல் முங்தர்ரீன்" என்ற பெயரில் நூலாகவும்,, பிரசுரமாகவும் அல்லாமா ஆலிமுல் அறூஸ் நாயகம் வர்கள் வபாத்தாகுவதற்கு முப்பது ஆண்டுகளுக்கு முன்பு வெளியிடப்பட்டது.

மௌலவி இஸ்மாயீல் திஹ்லவியால் இந்தியாவில் ஏற்பட்ட குழப்பத்தையும், அதற்கேதிராக உலமாக்கள் வெகுண்டெழுந்த வரலாற்றையும் விலாவாரியாக சென்னை ஜமாலியா மத்ரஸாவின் முன்னாள் அதிபர் யூஸுப் கோகன் விலாவாரியாக விளக்கிய தகவல்கள் "ஆர்க்காடு நவாப் வாலாஜி" என்ற உருது நூலில் எழுதப்பட்டுள்ளது!, இந்நூல் மிகப் பெறுமதியான அரியபல தகவல்களைப் பொதிந்த களைஞ்சியமாகும்.

இவ்வாறு தேவ்பந்தின் மூத்த ஷைகுமார்களின் குப்றியத் நிறைந்த கொள்கைகளுக்கு ஷைகுனா ஸூபிஹஸறத் நாயகம் பிறப்பதற்கு

நூறு ஆண்டுகளுக்கு முன்பே இந்தியாவின் தலைசிறந்த உலமாக்களால் தீர்ப்புக்கள் கூறப்பட்டுள்ளன என்பது ஈண்டு கவனிக்கத்தக்கதாகும்.

இந்தியாவில் தேவ்பந்திகள் மூலமாக வஹாபிஸத்தை வளர்க்கவும் பரப்பவும் பிரிட்டிஷார் போட்டதிட்டம் உலமாக்களின் தீவிர பிரச்சாரத்தால் பிசுபிசுத்துப்போனது; இது பிரிட்டிஷாருக்குக் கவலையைக் கொடுத்தது! அதனால் மாற்றுத்திட்டத்தை தேடினார்கள், அந்தத் திட்டம் தான் "தப்லீக் ஜமாஅத்தாகும்;

Part -4

தப்லீக் ஜமாஅத் என்ற புதிய இயக்கத்தை தோற்றுவிக்க வேண்டிய அவசியம் பிரிட்டிஷாருக்கு ஏன்ஏற்றபட்டது? அதற்காக மௌலவி இல்யாஸை ஏன் தேர்ந்தெடுத்தனர்? என்பதை தெளிவாக அறிந்து கொள்வதற்கு முன், தேவ்பந்திகளின் குழப்பங்களையும் , அதனால் ஏற்பட்ட விபரீதங்களை யும் பற்றி அறிந்திருத்தல் அவசியமாகும்.

இந்தியாவில் முதன்முதலில் வஹாபிஸத்தை அறிமுகம் செய்தவர் மௌலவி இஸ்மாயீல் திஹ்லவி என்பதும், அவர் எழுதிய "தக்வியத்துல் ஈமான்" என்ற நூல் இப்னு அப்துல்லாஹ் நஜ்தியின் "கிதாபுத் தௌஹீதின்" தழுவல் என்பதும் தெரிந்ததே!

மௌலவி இஸ்மாயீல் திஹ்லவி தனது மேற்படி நூலின் மூலமாக அனைத்து முஸ்லிம்களையும் காபிர், முஷ்ரிக் என்றாகியதோடு, றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களுக்கு நிகரான ஒருவர் வரமுடியும் என்றும் கூறினார்;

இவரின் இக்கூற்றின் படி, எவரேனும் வேறு ஒருவர் " காத்தமுன் நபிய்யீன்" உள்ளிட்ட வேறு சிறப்புப் பண்புகளையும் பெற முடியும் என்றாகி விடுகின்றது;

அஹ்லுல் ஸுன்னத் வல்ஜமாஅத் உலமாக்கள் குறிப்பாக அல்லாமா, முஹம்மது பழ்லுல் ஹக் கைறாபாதி றஹ்மத்துள்ளாஹி அலைஹி அவர்கள் உள்ளிட்டோர் இக்கூற்றுக்கு எதிராக எழுத்தாலும், பேருரைகளாலும் கடுமையான எதிர்ப்பையும், கண்டனத்தையும் தெரிவித்தனர்;

விடயம் இத்தோடு முற்றுப் பெறவில்லை, தேவ்பந்தின் நிறுவனர் மௌலவி காஸீம் நானோத்தவி என்பவர் ஒருபடி மேலே சென்று இவ்வாறு கூறினார்,

"பாமர மக்களின் கருத்தில் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் " காத்தமுன் நபிய்யீன்" என்பதன் தெளிவான பொருள்,அன்னார் இறுதி நபி என்பதாகும், ஆனால், காலத்தால் முந்துவதாலோ, பிந்துவதாலோ தனி விஷேஷமில்லை என்பது புத்ஜீவிகளுக்கு விளங்கும்.

ஆதாரம்: தஹ்தீறுன்நாஸ்: பக்,2,3

மேலும் இதே நூலில் , நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களுக்குப் பின், மற்றுமொரு நபி உண்டானார்கள் என்று வைத்துக்கொண்டாலும் கூட , நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் "காத்தமுன் நபிய்யீன்"என்பதில் எதுவித வித்தியாசமும் ஏற்படாது!

ஆதாரம்: தஹ்தீறுன் நாஸ்: பக்: 12-13

ஹி:1240, ஈஸவி: 1854ல் வெளிவந்தது,

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களுக்குப் பின், மற்றுமொரு நபி வரமுடியாது என்பது முஸ்லிம் சமுகத்தின் ஏகோபித்த முடிவாகும், ஆனால், மௌலவி காஸீம் நானோத்தவி வெளிப்படையாகவே இதை மறுக்கின்றார்,

இவரின் இக்கூற்றின் தாக்கம் மீர்ஸா குலாம் காதியானியில் வெளிப்பட்டது, காதியானி காஸீம் நானோத்தவியின் இக்கூற்றை பல்வேறு கட்டங்களிலும் உறுதிப்படுத்தக் கூறியுள்ளான் என்பது கூர்ந்து கவனிக்கத்தக்கது,

தேவ்பந்தின் மற்றுமொரு குருபீடம் மௌலவி றஷீத் அஹ்மத் கொங்கோஹி ஆவார், இவர் ஹி: 1304, ஈஸவி1884ல் பறாஹீனேகாதிஆ என்ற நூலை எழுதி மௌலவி கலீல் அம்பேட்டவியின் பெயரில் வெளியிட்டார், இதில் கொங்கோஹியின் மதிப்புரையும் , பலமான கையெழுத்தும் காணப்படுகின்றன,

மேற்படி நூலில் , ஏராளமான தவறுகள் காணப்படினும், கீழ்காணும் கூற்று கூர்ந்து கவனிக்கத்தக்கதாகும்.

ஷைத்தான, மலக்குல் மௌத்தின் நிலையைக்கவனித்துவிட்டு றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம வர்களுக்குப் பூமியில் விசாலமான அறிவு இருக்கின்றது என்று தவறான கியாஸாலும்,திட்டவட்டமான ஆதாரமில்லாமலும் நிரூபிப்பது ஷிர்கில்லாமல் ஈமானின் எந்தப்பகுதியைச் சேரும்?,

ஷைத்தான் , மலக்குல்மௌத்தின் விசாலமான அறிவு தெளிவான ஆதாரத்தினால்நிரூபணமாகியுள்ளது, றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் விசாலமான அறிவுக்கு திட்டவட்டமான தெளிவான ஆதாரம் என்ன இருக்கின்றது?

பறாஹீனே காத்திஆ பக்கம்: 51

மேற்படி சொற்றொடரின் மூலமாக றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் அறிவை இப்லீஸின் அறிவை விட குறைவு என்று மட்டந்தட்டுவதற்கு கீழ்தரமான ஒரு முயற்சி மேற்கொள்ளப்பட்டிருக்கின்றது,

மேற்படி கூற்றில் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களுக்கு விசாலமான அறிவு இருப்பதாகவாதிப்பது ஷிர்க்! அதே விடயத்தை ஷைத்தானுக்கு உறுதிப்படுத்துவது சுத்தத் தௌஹீத் !,

என்னே! ஈமான்!

மற்றுமொரு தேவ்பந்தின்குருபீடம் அஷ்ரப் அலி தானவி ஆவார், இவர், ஹி:1319-ஈஸவி-1901ல் எழுதிய "ஹிப்ழுல் ஈமான்" என்ற நூல் மக்கள் பார்வைக்கு வந்தது!

இந்த நூலில் பின்வருமாறு எழுதுகின்றார்,

"றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களுக்கு மறைவான அறிவு பற்றிய சட்டத்தை எப்படி அறிந்து கொள்வது ? ஸைத் என்பவரின் கூற்று சரிதான் என்றிருந்தால் , அவரிடம் கேட்க வேண்டிய அம்சம் இதுதான்,

"இந்த மறைவான அறிவின் நோக்கம் சிலமறைவானதா? அல்லது முழுமையானதா?சில மறைவான அறிவுகள் என்பதுதான் கருத்தாயின் , அதில் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களுக்கு என்ன விஷேஷமிருக்கின்றது?

இப்படியான மறைவான அறிவு ஸைது, அம்று , எனினும், சகல குழந்தைகள் , பைத்தியக்காரன் எனினும், அனைத்து உயிரினங்கள், மிருகங்களுக்கும் கூட இருக்கத்தான் செய்கின்றது

ஆதாரம் :, ஹிப்ழுல் ஈமான் : பக் , 8

தேவ்பந்தி குருமார்களின் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களைத் தர்ம்தாழ்த்தும் சாக்கடைக் கருத்துக்களைக் கேட்டுக்கொண்டும், பார்த்துக் கொண்டும் ஒருமுஸ்லிமால் எப்படி நிம்மதியாக இருக்க முடியும்?

அஹ்லுஸ்ஸுன்னத் வல்ஜமாஅத் உலமாக்கள் தேவ்பந்து குருமார்களுக்கு கடிதம் மூலம் இவை பற்றி விளக்கம் கேட்டனர், இதற்கான தெளிவான பதிலைக் கூறுங்கள் ! அல்லது தவ்பாச் செய்து மீளுங்கள்!, என்று பல முறை அறிவுறுத்தினர்; இவை தொடர்பாக பல நூல்களும் வெளிவந்தன, தேவ்பந்து குருமார்கள் எதற்கு அசையாமல் மௌனம் காத்தனர்,

இந்தக் கட்டத்தில் அஃலா ஹளறத் இமாம் அஹ்மத் றிழா கான் பரேலவி றஹ்மத்துள்ளாஹி அலைஹி அவர்கள் களத்தில் குதித்தார்கள்,

காஸீம் நானோத்தவியின் தஹ்தீறுன்நாஸ் வெளி வந்து மூன்று ஆண்டுகள்கழித்தும்,பராஹுனே காதிஆ வெளிவந்து 16 ஆண்டுகளுக்குப்பின்பும், ஹிப்ழுல் ஈமான் வெளிவந்து ஓராண்டுக்குப்பின்னும், "அல்மு ஃதகதுஅல்முஸ்தனத்" என்ற நூலின் ஓரக்குறிப்பில் ,

மீர்ஸா குலாம் அஹ்மத் காதியானி உள்ளிட்ட மேற்படி கூற்றுக்களைக்கூறிய மௌலவி காஸீம் நானோத்தவி, மௌலவி றஷீத் அஹ்மத் கொங்கோஹி, மௌலவி கலீல் அஹ்மத் அம்பேட்டவி, மௌலவி அஷ்றாப் அலிதானவி உள்ளிட்டோரின் கூற்றுக்களினடிப்படையில் அவர்களின் மீது குப்றுக்கான ஃபத்வாவை வெளியிட்டார்கள்;

இந்த ஃபத்வா தேவ்பந்தின் எந்த ஒரு தனி நபரை யும் குறி வைத்து எழுதப்பட்டதல்ல! அகிலத்தின் அருள் பிளம்பு அண்ணலம் பெருமானார் கண்மணி றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் கண்ணியத்தைப் பாதுகாப்பதற்காக வெளியிடப்பட்ட ஃபதாவாவாகும் .

ஹி,1324ல் இமாம் அஹ்மத் றிழா கான் றஹ்மத்துள்ளாஹி அலைஹி அவர்கள் "அல்மு ஃதமத் அல்முஸ்தனத்" என்ற நூலின் ஓரக்குறிப்பில் எழுதப்பட்டதை ஃபத்வாவாக வடிவமைத்து புனித மக்கத்துல் முகர்ரமா, புனித மதீனத்துல் முனவ்வறா", விலுள்ள உலமாக்களின் பார்வைக்கு கொண்டுவந்தார்கள்;

அவர்களுள் அதி கீர்த்தி பெற்று 35 உலமாக்கள் கையெழுத்திட்டு, காதியானி உள்ளிட்ட மேற்படி கருத்துக்களைக் கூறிய தேவ்பந்துஉலமாக்கள் யாவரும் எவ்வித சந்தேகமுமின்றி இஸ்லாத்தை விட்டும் வெளியேறியவர்கள் என்றும், இமாம் அஹ்மத்

றிழாகான் பரேலவி அவர்கள் இஸ்லாத்தைப் பாதுகாக்க அரும் பாடு பட்டுள்ளார்கள் என்றும் குறிப்பிட்டிருந்தார்க ள்,

மேற்படி ஃபத்வாவை "ஹுஸாமுல் ஹறமலன் ஆலா மன்ஹறில் குப்ரி வல்மைன் " என்ற பெயரில் ஹி: 1324ல் வெளியிட்டார்கள்.

புனித மக்கா மதீனா முப்தி களின் குப்றுப் ஃபத்வா வெளிவந்தபின் , தேவ் பந்து குரூபீடங்கள் செய்வதறியாது விழிபிதுங்கி நின்றன,

தேவ்பந்திகளை நம்பிய பிரிட்டிஷாருக்கும் இடிவிழுந்தாப் போல் ஆகிவிட்டது ! இதற்குப் பிறகும் தேவ்பந்தி குரூபீடங்களை முன்நிறுத்தி அவர்கள் பெயரால் முஸ்லிம் சமுகத்திற்குள் பிளவை ஏற்படுத்த முயற்சிப்பது எட்டாக்கனி என்று முடிவு செய்ததின் விளைவு தான் மௌலவி இல்யாஸின் மூலமாக தோற்றுவிக்கப்பட்ட "தப்லீக் ஜமாஅத்" இயக்கமாகும் .

Part -5

தப்லீக்க்வியத்துல் ஈமான் என்ற நூல் அல்குர்ஆனை விட மேலானது என்பது தேவ்பந்தி களின் அசைக்க முடியாத நம்பிக்கையாகும்.

தப்லீக் ஜமா அத்தின் நிறுவனர் மௌலவி இல்யாஸின் ஷெய்கும், தேவ்பந்திகளின் தலைவர்களும் வஹாபிகள்!

தேவ்பந்தின் மூலபிதாவான இஸ்மாயீல் திஹ்லவியின் வஹாபிக் கொள்கைகளை தந்திரமாக மக்கள் மயப்படுத்துவது தான் மௌலவி இல்யாஸின் திட்டமாகும்;

இத்திட்டத்தை வெளிப்படையாகக் கூறினால் மக்கள் இனம் கண்டு விரண்டு விடுவார்கள் என்பதை அனுபவரீதியாக நன்கு உணர்ந்த மௌலவி இல்யாஸ்

"தப்லீக்கின் நோக்கம் கலிமாவைப் போதிப்பதும் தொழுகைக்கு மக்களை அழைப்பதுமாகும்"

என்ற விஷத்தை தொழுகை,என்ற தேன் பாணியில் கலந்து பருக்கினார்,

தப்லீக்கின் நிறுவனர் மௌலவி இல்யாஸைப்பற்றியோ, அவருடைய தேவ்பந்து குருமார்களைப் பற்றியோ ஏதுமறியாத அப்பாவிகளாகத் தான் அப்போதைய பல உலமாக்கள் இலங்கையிலும், தமிழ் நாட்டிலும் இருந்தார்கள்;

ஆனால், வெலிகமையைவசிப் பிடமாகக் கொண்டிருந்த யாஸீன் மௌலானா மௌலவி அஷ்றப் அலி தானவியைப்பற்றி நன்கு அறிந்தவர், அவரின் உறவில் இருந்தவர், உருது மொழியை கசடற கற்றவர், அஷ்றப்அலிதானவியின் பிற்காலத்து நிலையையும் புரிந்தவர், அதே நேரத்தில்

ஷைகுனா ஸூபிஹளறத் நாயகத்தோடு அன்பு கலந்த மரியாதையும் வைத்திருந்தவர், தப்லீக்கின் கெடுதிகளைப் பற்றி அவர் வீட்டுக்கு இரண்டு காரில் ஆட்களைக் கூட்டிக்கொண்டிச்சென்று நேரில் ஸூபி நாயகமவர்கள் விளக்கியதைக் காதால் கேட்டவர்

இந்தப் பின்னணியில் முன்பின் யோசியாமல் தப்லீக்கிற்கு ஆதரவளித்தார்; மாத்தறை விவாதத்திலும் கலந்து கொண்டார்;

ஏனையவர்கள் உலமாக்களின் எண்ணிக்கையையும், தப்லீக்ஜமாஅத்தின் செல்வாக்குள்ள, பணச் செருக்குள்ளோரின் திருமுகத்தை மாறிமாறிப் பார்த்து உடல் மொழியைப் புரிந்து ஆதரவு வழங்கியவர்கள்;

இதுபற்றிய விளக்கம் பொருத்தமான இடத்தில் வரும் இன்ஷாஅல்லாஹ்!

ஷைகுனா ஸூபிஹளறத் நாயகம் கத்தஸல்லாஹு ஸிர்ரஹுல் அஸீஸ் அவர்கள் இலங்கையின் அப்போதைய கள நிலவரத்தைக் கவனத்தில் கொண்டு தப்லீக் கில் பிழை காணவில்லை,

இப்போதிருக்கின்ற உலமாக்களின் செல்வாக்கு செல்லரிக்கப்பட்டு தப்லீக்கின் வளர்ச்சிக்குப் பின், இப்போதிருக்கின்ற உலமாக்கள் வெயிலில் சுடுபட்ட காகிதப் புஷ்பங்களாகிவிடுவார்கள், அப்போது நமது சுயரூபத்தை மெல்ல மெல்லக் காட்டுவார்கள் , அதுவரை சாணக்கியமாக நடந்து கொள்கின்றனர் என்ற தப்லீக் கின் மூடிய மந்திரமாகும்.அச்சொட்டாக எடுத்து விளக்கினார்கள்;

தப்லீக்கின் இந்த கபட நாடகத்தை குறிப்பறிந்து கொண்ட ஷைகுனா ஸூபி நாயகமவர்கள் பின்னால் வரப்போகின்ற பேரழிவைப் பற்றி எச்சரித்து எதிர்வு கூறினார்கள்;

அது அதிகமானவர்களின் செவிப்புலனைத் தொடவில்லை,

ஷைகுனா ஸூபி ஹளறத் நாயகம வர்கள் அஞ்சிய தேவ் பந்து குருமார்களின் கொள்கைகளில்சிலதை ஆரம்பத்தில் குறிப்பிட்டிருந்தேன்நினைவிருக்கலாம்,

தக்வியத்துல் ஈமான்" என்ற அபத்தம் நிறைந்த நூலை பிரிட்டிஷ் அரசாங்கத்தினர் பல இலட்சம் பிரதிகளை பிரசுரித்து உருது மொழி தெரிந்த பகுதிகளில் பரப்பிவிட்டனர்; இதனை வாசித்த உலமாக்கள் வெகுண்டெழுந்தனர், அவர்கள் மூட்டிய "தீ" அதன் கடமையை செவ்வனே செய்தது!

இதனால் சுதந்திரப் போராட்டம் திசைமாறியது, பிரட்டிஷார் நிம்மதி பெருமூச்சு விட்டனர், பேரானந்தத்தால் நர்த்தனமாடினர்;

றஸூலுல்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களைக் கொச்சைப்படுத்தியும், ஒட்டு மொத்த முஸ்லிம்களையும் காபிர், முஷ்ரிக் என்று முத்திரை குத்தியும் இந்தியாவில் பெரும் பெரும் அதிர்வலைகளைத் தோற்றுவித்த இந்த ஆபாசக் களஞ்சியத்தைப் பற்றி மௌலவி இல்யாஸின் ஞான பீடம் மௌலவி றஷீத் அஹ்மத் கொங்கோஹி என்ன கூறுகின்றார் என்பதை நீங்களும் தான் கேளுங்களேன்;

தக்வியத்துல் ஈமான் என்ற நூல் உன்னதமான நூலாகும். அதனை தன்னிடம் வைத்துக் கொள்வதும், அதனைப் படிப்பதும் , அதன்படி *செயல்படுவதும்தான் இஸ்லாமாகும் (ஐனுல் ஈமான்).

ஆதாரம் - பதாவா றஷீதிய்யா, பக்கம் 41

திருக்குர்ஆனை நம்புவது தான் இஸ்லாம்! என்பதை அனைத்து முஸ்லிம்களும் நன்கு அறிவார்கள். திருக்குர்ஆனை வீட்டில் வைத்துக் கொள்வதும், அதனைப்படிப்பதும், அதன்படி அமல் செய்வதும், நன்மையும், பரகத்தும் பொதிந்தது என்பதில் எவ்வித ஐயமுமில்லை.

ஆனால், திருக்குர்ஆனைப் படிப்பதும், அதன்படி அமல் செய்வதும்ஐனுல் இஸ்லாம் (அதுவே இஸ்லாம்) அல்ல.!

எடுத்துக்காட்டாக,

ஒருவன் திருக்குர்ஆனை உண்மையான வேதம் என்று நம்புகின்றான். துரதிஷ்டவசமாக அவனிடம் திருக்குர்ஆன் இல்லையென்றால், அல்லது திருக்குர்ஆன் இருந்தும், அதனை ஓதப்படிக்க வில்லையென்றால், கண்டிப்பாக அவன் முஸ்லிம்தான்!, காபிரல்ல!

இவ்வாறே தொழுகை, நோன்பு உள்ளிட்ட திருக்குர்ஆனின் கட்டளைகளை நிறைவேற்றா விட்டால், அவன் திருக்குர்ஆனின்படி செயல்படாத வனாகவே கருதப்படுவான். அதனால், அவன் பாவியே! தவிர, காபிரல்ல! அவன் கண்டிப்பாக முஸ்லிம் தான்!

ஆனால், தேவ்பந்திகளுக்கு மத்தியில் தக்வியத்துல் ஈமான் விஷயத்தில் அவர்களின் அகீதா, "தக்வியத்துல் ஈமானை தன்னுடன். வைத்திருப்பதும், அதனைப் படிப்பதும், அதன்படி செயல்படுவதும். அதுவே இஸ்லாமாகும் எவனிடத்தில் தக்வியத்துல் ஈமான் என்ற நூல் இல்லையோ, அவன் முஸ்லிமல்ல!.

நூல் இருந்தும் படிக்காதவனும் முஸ்லிமல்ல!. அதன்படி செயல்படாதவனும் முஸ்லிமல்ல!" என்று இதன் பொருள் விரியும்

இவர்களின் இக்கூற்று தேவ்பந்திகளுக்கு மத்தியில், திருக்குர்ஆனை விட தக்வியத்துல் ஈமான் மதிக்கத் தக்கதாகவும், உயர்ந்ததாகவுமிருக்கின்றது என்பதை ஊர்ஜிதம் செய்துவிட்டது .

தேவ்பந்து பிரசவித்த தப்லீக் ஜமாஅத்தினர் ஒரு படி மேல் சென்றுள்ளனர். தக்வியத்துல் ஈமானில் சொல்லப்பட்டபடி செயல்படுகின்றனர். அத்தோடு தப்லீக்கின் நிகழ்ச்சி நிரலில் உள்ள நூற்களை திருக்குர்ஆனை விட முக்கியத்துவம் வாய்ந்ததாக கருதுகின்றனர் இந்தக்காட்சியை அண்றாடம் பள்ளிவாசல்களில் காணலாம்!

தப்லீக் டில்லி மார்க்ஸின் கண்மூடித்தனமான இந்த மௌட்டீகத்தை தேவ் பந்து மத்ரஸா வின் உயர்பீடம் கண்டித்தது! தவறைத் திருத்திக்கொள்ள அவகாசம் வழங்கியது!

தப்லீக்கின் டில்லி "ஹஸறத் ஜீ" மௌலானா ஸஃதுல்லாஹ் இதை காதில் வாங்கிக் கொள்ளாமல் தேவ்பந்து முப்தியைக் கண்டித்தார், திட்டித் தீர்த்தார், இந்த விவகாரம் இப்போது விகாரமாகி நாறிக் கொண்டிருக்கின்றது!

தேவ்பந்து வளர்த்த கடா மார்பை மட்டுமல்ல! முழு திரேகத்தையும் ருசித்து ருசித்து பதம் பார்க்கின்றது! வினை விதைத்தவன் வினை அறுப்பான்

ஸுபுஹுத் தொழுத பின் சூரியன் உதிக்கும் வரை ஓத வேண்டியவை எவை? என்பதை றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தெளிவாக சொல்லித் தந்துள்ளார்கள், அதனை தப்லீக்கின் "திக்றின் சிறப்பு" என்ற நூலில் தெளிவாகவே குறிப்பிடப்பட்டுள்ளது!

ஸுப்ஹுக்குப் பின் அதனை வட்டமாக இருந்து வருவோர், போவோரை கழுகுப் பார்வையால் அவதானித்து க் கொண்டு

வாசிப்பதை கிளிப்பிள்ளை போன்று கேட்கவே செய்கின்றனர், அது அவர்களின் இதயத்தைத் தொடுவதில்லை;

திக்றின் சிறப்பில் கூப்பட்டவையையும், திருக்குர்ஆனையும் புறந்தள்ளிவிட்டு, அமல்களின் சிறப்புக்கள் என்ற நூலை கடமையான வணக்கமாக தினமும் வாசிக்கின்றனர். வேறு புத்தகங்களை வாசிப்பதை கண்டிப்பாகத் தடுக்கின்றனர்.

தப்லீக் ஜமாஅத்தினர் வாசிக்கின்ற புத்தகங்களில் இருக்கின்றபடி செயல்படுவதற்குஅதனை வாசிப்பதில்லை ! தங்களது ஜமாஅத் சிதறிவிடாமல் தினமும் உருவேற்றுவதற்காகவே வாசிக்கின்றனர்.

இது யாருடைய மார்க்கம் ?

இனறவன் மார்க்கமா ?

இல்யாஸி மார்க்கமா ?

இதுதான் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் காட்டிய தூய மார்க்கமா?

சிந்தியுங்கள்! ஈமானைப் பறி கொடுக்காதீர்கள் !

Part -6

ஷைகுனா ஸூபிஹளறத் நாயகம் கத்தஸல்லாஹு ஸிர்ரஹுல் அஸீஸ் அவர்கள் தப்லீக்கிற்கு எதிராக வெளியிட்ட முதல் நூல், "தப்லீக்கில் வஹாபிஸத்தின் விஷக்கிருமிகள்!

இந்த நூலில் இஸ்மாயீல் திஹ்லவியின் வழிகெட்ட சில கொள்கைகளையும், இக்கொள்கைகளை தப்லீக் நிறுவனர் மௌலவி இல்யாஸின் குருமார்கள் எவ்வாறு உறுதிப்படுத்தி வழிமொழிகின்றனர் என்பதையும் பின்வருமாறு விளக்கமாக எழுதுகின்றார்கள்,

1 - அல்லாஹ்வுக்குப் பொய் சொல்ல முடியும்.

"அல்லாஹ்வுக்குப் பொய் சொல்வது அசாத்தியம் என்பதை நாம் ஒப்புக் கொள்ள மாட்டோம்.

ஆதாரம்: எக்றோஜி பக்:145 (இஸ்மாயீல் திஹ்லவி)

இந்த குப்றியத்தான கருத்தை தேவ்பந்தின் குரூபீடமும், மௌலவி இல்யாஸின் 2வது குருவுமான கலீல் அஹ்மது அம்பேட்டி இவ்வாறு உறுதிப்படுத்துகின்றார்.

"அல்லாஹுத்த ஆலாவுக்குப் பொய் சொல்ல முடியும் என்ற பிரச்சினையை புதிதாக இப்போது எவரும் கூறவில்லை; முன்னோர்களிடையே இதில் அபிப்பிராய பேதம் உண்டு!,

ஆதாரம் :, பராஹீனே காதிஆ: பக்: 2

அல்லாஹ்வுக்குப் பொய் சொல்ல முடியும் என்ற கொள்கை மு.்.தஸிலாக்களுக்குரியது , பொய் என்பது வடுவுள்ள பண்பு , அல்லாஹ்வின் பண்புகள் யாவும் நிறைவானவை , குறையுள்ள பண்புகள்,மற்றும் செயல்களை விட்டும் அல்லாஹ் தூயவன் என்பது அஹ்லுல் ஸுன்னத் வல்ஜமாஅத்தின் அகீதாவாகும்.

எனவே, அல்லாஹ்வுக்குப் பொய் கூற முடியும் என்ற கூற்று குப்றை ஏற்படுத்தக்கூடியது என்பதில் எவ்வித சந்தேகமுமில்லை;,

2- மறைவான விடயங்களை அறிந்து கொள்வது அல்லாஹ்வின் விருப்பத்திற்குரியது, எப்போது நாடுவானோ அப்போது விசாரித்துக் கொள்வான், இது அல்லாஹ்வின் கருமமாகும்.

தக்வியத்துல் ஈமான். பக்கம்:, 16

"எப்போது விரும்புகின்றானோ அப்போது தெரிந்து கொள்வான்" என்ற சோற்றொடர் அவனுடைய அறிவில் அறியாமை உள்ளது என்பதை புலப்படுத்தும்,

அல்லாஹ்வின் அறிவு பூர்வீகமானது என்பதை இச்சொற்றொடர் மறுப்பதாகவும், அறியாமையை ஊர்ஜிதப்படுத்துவதனாலும் இக்கருத்து குப்றாகும்.இக்கருத்தை சரிகண்டவர் காபிராகி விடுவான்.

3- அல்லாஹுத்த ஆலா காலம் , இடம் , திசைகளை விட்டும் தூயவன் என்று கூறுவதும், மறுமையில் திசையின்றி காணமுடியும் என்பதும், பித்அத்தும், வழிகேடுமாகும்

ஆதாரம்: எக்றோஜி பக்கம்: 45,36 (இஸ்மாயீல் திஹ்லவி)

அல்லாஹ்வுக்கு இடம், மேல், கீழ் உள்ளிட்ட எந்தத்திசையும் கிடையாது என்பது அஹ்லுஸ் ஸுன்னத் வல்ஜமாஅத்தின் அகீதாவாகும். அல்லாஹ்வுக்கு இடம் ,, திசைகளைக் குறிப்பவன் காபிராகி விடுவான் .

தேவ்பந்திகளின் அல்லாஹ்வைப் பற்றிய குப்றியத்தான கருத்துக்கள் ஏராளமாக இருக்கின்றன;

அல்லாஹு சுப்ஹானஹுவத ஆலாவைப் பற்றிய மேற்கண்ட கொள்கைகளை இலங்கையில் தப்லீக் கை ஆதரித்த எந்த ஆலிம்களும் ஏற்க வில்லை; அவையாவும் குப்றியத்தானவை என்றுதான் கூறுகின்றனர்,

இதே கருத்தை இலங்கையில் வஹாபிஸத்தை அறிமுகப்படுத்திய தர்வேஷ் அப்துல் ஹமீத் பக்றி என்பவர் முன்வைத்த போது வெகுண்டெழுந்து எதிர்த்தனர், பின்னர், அதே குப்றியத்தான கருத்தை தப்லீக் ஜமாஅத்தின் மேலிடமும் கூறுகின்றது என்று கூறிய போது சப்புக்கட்டுக்கட்டி சமாளிக்கின்றனர்,

ஏன் இந்த வேறுபாடு? உண்மையில் இவர்கள் இஸ்லாத்தைப் பேசினார்களா?, அல்லது , சுற்றியிருப்பவர்களின் திருப்திக்காகவும், தனது சுகபோகத்திற்காகவும் மார்க்கம் பேசினார்களா?,

நாங்கள் அஷ்அரியாக்கள் என்றும், இப்னுத்தைமியாவின் கொள்கைகளை எதிர்ப்பவர்கள் என்றும் மார்தட்டும் ஷரீஆ பேசும் முல்லாக்கள் இதுவிடத்தில் வாய்மூடியிருப்பதுதான் ஷரீஆவா? இது சரிதானா?

தப்லீக் ஜமாஅத்திற்கு முட்டுக் கொடுத்துக் கொண்டு நாங்கள் தான் அஷ்அரியா அகீதாவை பாதுகாக்கும் காவலர்கள் என்று வாய்கிழிய உரத்துக் கூறுபவர்கள் தப்லீக் தலைவர்களான தேவ்பந்தி குருமார்களின் மேற்படி கூற்றுக்கள் குப்றியத்தானவை என்பதை வெளிப்படையாக கூறத் தயக்கம் காட்டுவது ஏன்?

இந்த கூற்றுக்கள் குப்றை ஏற்படுத்துப வை என்பதை அப்போதும் மத்ரஸா வில் போதித்தனர், இப்போதும் போதிக்கிற்றனர்,

தப்லீக் தலைவர்களை ப்பாதுகாக்க குப்றியத்தை ஏற்கவும் நியாயப்படுத்தவும், மதிக்கவும் இப்போது துணிந்தவர்களுக்கும் , ஜாஹிலியாக்காலத்தில் வாழ்ந்தவர்களுக்குமிடையில் உள்ள வேறுபாடுதான் என்ன?

தப்லீக்கை ஆதரித்தால் அவர்களின் உறவாடல், நேசம் உங்களை எதிர்காலத்தில் வழிகெடுக்கும் என்ற அச்சத்தினால் தானே ஷைகுனாஸூபி ஹளறத் நாயகமவர்கள் தப்லீக்கில் சேரக்கூடாது என்று எச்சரித்தார்கள்.

தேவ்பந்தி குருமார்களின் எழுத்தில் கண்மணி நபிகள் நாயகம் றஸூலேகரீம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை தரம்தாழ்த்திக் கூறுவது முக்கியமான கொள்கையாகக் காணப்படுகின்றது !,

நெஞ்சில் நயவஞ்சகம் புகுந்துள்ள ஒவ்வொருவரின் பேச்சிலும் , நடத்தையிலும் இந்த இழிவான குணம் காணப்படும்,

ஜாஹிலியாக் காலத்தில் வாழ்ந்த காபிர்களும் , நயவஞ்சகர்களும் நெஞ்சில் கண்மணி றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் மீதுள்ள வஞ்சகத்தினாலும், கெட்ட எண்ணத்தினாலுமே வழிகெட்டு நரகம் புகுந்தனர்;

இதே குணம் ஒவ்வொரு நயவஞ்சகனின் உள்ளத்திலும் இருக்கின்றது என்பதன் வெளிப்பாடு தான் ஸலவாத், மௌலித் உள்ளிட்டவையில் இருக்கும் வெறுப்பாகும்.

இப்போது தப்லீக் ஜமாஅத்தினர்களிடமும், அவர்களுக்கு ஆதரவளித்து ஓரம் கட்டப்பட்டுள்ளவர்களிடமும் இதன் தாக்கம் இருக்கின்றதா? இல்லையா?

அதானுக்கு முன்னால் ஸலவாத் கூறுவது ஸுன்னத் என்று மத்ரஸாவில் ஓதிக்கொடுக்கப்படுகின்ற பத்ஹுல் முஈனில் இருப்பதை காலம்காலமாக ஓதிக் கொடுத்துக் கொண்டே பல நூற்றாண்டுகளாக சொல்லப்பட்டு வந்த ஸலவாத்தை நிறுத்த ஃபத்வா வழங்கிய ஷரீஆ தெரிந்த முல்லாக்கள் யார்?

இந்த நன்மையான காரியத்தை நிறுத்திய கயவர்கள் தப்லீக் கைச் சேர்ந்தவர்களும், ஆதரிப்பவர்களும் தானே! அதானுக்கு முன் ஸலவாத் கூறுவதை முதலில் எதிர்த்தவன் நஜ்தி வஹ்ஹாபி அல்லவா?, இந்த வஹ்ஹாபியின் கேடுகெட்ட கொள்கை தப்லீக்கில் எப்படி வந்தது?,

தப்லீக்கை ஆதரித்த பாவத்தால் இதை தட்டிக்கேட்கும் திறனையிழந்து பேடியாயிருக்கும் ஆலிம்களை என்ன வென்பது? இந்த அவலம் வரக்கூடாது என்று தானே ஷைகுனா ஸூபி ஹள்றத் நாயகம்வர்கள் தப்லீக்கில் சேரக்கூடாது !, என்று எச்சரித்தார்கள்.

அல்லாஹ்வைப் பயந்து நெஞ்சில் கையை வைத்து கேளுங்கள்! ஈமானின் ஈரம் இருந்தால் மனம் உறுத்தும் .

தொடரும்.....

Part -7

## தேவ்பந்திகள் கூறும் கேடுகெட்ட கொள்கைகளைப் பாருங்கள்!

அல்லாஹ்வின் மகத்துவம் மிகப் பெரியதாகும், அனைத்து நபிமார்களும் , வலிமார்களும் அல்லாஹ்வுக்கு முன்னால்,அற்ப அணுவை விடவும் குறைந்தவர்கள் .

தக்வியத்துல் ஈமான் பக்கம்: 55

மேற்கண்ட வாக்கியத்தில் அனைத்து நபிமார்களும் என்பதில் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களும் அடங்குவார்கள் என்பதைக் கவனத்தில் கொள்க!

நாம் உறுதி கொள்ள வேண்டும், படைக்கப்பட்ட ஒவ்வொரு பொருளும் அது சிறியதோ ,பெரியதோ அல்லாஹ்வுக்கு முன்னால், தோட்டியையும் விடத் தாழ்ந்ததே!

தக்வியத்துல் ஈமான் பக்: 14

மேற்கண்ட வாக்கியத்தில் ஒவ்வொரு படைப்பும் என்பதில் அனைத்து நபிமார்களும் ,நபிகள் நாயகமும் உள்ளடங்குவார்கள்; காரணம்,பெரியதோ,சிறியதோ என்ற சொற்றொடர் இதனை வெளிப்படுத்துகின்றது.

"தோட்டியை விட" என்ற வாக்கியத்தின் படி, நபிகள் திலகம் உள்ளிட்டவர்களைவிட அல்லாஹ்வுக்கு முன்னால் தோட்டி உயர்ந்தவன்; தோட்டி என்றால், சக்கிலியன் என்பது பொருள்,

மேலும் கூறுகின்றார், நானும் ஒருநாள் மரணித்து மண்ணோடு மண்ணாகி விடுவேன்.

தக்வியத்துல்ஈமான்:, பக்: 81

நபிமார்களின் புனித உடலை மண் தின்பதை அல்லாஹ் ஹறாமாகாகியுளாளான் என்று றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறியுள்ளார்கள்,

இந்த வகையில், றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் புனித ரௌலாவில் பூரணமான ஹயாத்தோடு இருக்கின்றார்கள் என்று அஹ்லுஸ் ஸுன்னத் வல்ஜமாஅத்தினர்கள் நம்புகின்றனர்.

ஆகவே இவ்வாறெல்லாம் கூறுவது குப்றாகும்.

"மனிதர்கள் ஒருவருக்கொருவர் சகோதரர்கள் ,எவர் பெரியவரோ அவர் பெரிய சகோதரர்,அவருக்கு பெரிய சகோதரருக்குரிய மரியாதையைக்கொடுக்க வேண்டும்.

தக்வியத்துல் ஈமான் பக்: 60

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் நமது மூத்த சகோதரர் போன்றவர் என்றும், மூத்த சகோதரருக்குரியளவு மரியாதை தான் கொடுக்க வேண்டும் என்றும் அழுத்தம் திருத்தமாக கூறுகின்றார்.

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை மிகமோசமாக தரம் தாழ்த்தி கூறிய இந்த வாக்கியம் குப்றாகும்;

"தொழுகையில் ஷைய்கு அவர் போன்ற பெரியார்கள் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களானாலும் சரிதான் இவர்களுடைய ஞாபகம் வருவதாவது மாடு, கழுதையுடை உருவத்தை ஞாபகப்படுத்தில் மூழ்குவதை விடவும் எத்தனையோ மடங்கு கெட்ட தாகும்.

ஸிறாத்தே முஸ்தகீம்: பக்: 97 ( இஸ்மாயீல் திஹ்லவி)

இதே பக்கத்தில் எழுதுகின்றார்,

ஜினாச் செய்கின்ற நினைப்பும் தனது மனைவியுடன் சேர்க்கை செய்கின்ற நினைப்பும் நல்லது, ஷைய்கு அல்லது அவரைப் போன்ற மற்றப் பெரியார்கள் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களானாலும் சரியே இவர்களின் பக்கம் கவனத்தைத் திருப்புவதாகிறது தனது மாடு, கழுதையுடைய உருவத்தில் மூழ்குவதை விடவும் கெட்டதாகும்.

கீழ்தரமான இந்த வார்த்தைகள் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை தரம்தாழ்த்துபவை என்பதிலும், குப்றை ஏற்படுத்தும் என்பதிலும் யாராவது சங்கிதப்படுவார்களா?

"அநேக கருமங்கள் நல்லடியார்(நபிமார்)களுடைய முஃஜிஸாத்துக்கள் என கணிக்கப்படுகின்றன; இம்மாதிரியென்ன?, இதைவிட சக்தியிலும்,பரிபூரணத்திலும் மேலானதையும் சூனியக்காரர்களும் மந்திரவாதியும் செய்ய முடியும்.

மன்ஸிப் இமாமத்: 31 (இஸ்மாயீல். திஹ்லவி)

இந்தக் கூற்று நபிமார்களின் முஃஜிஸாத்துக்களை மட்டம்தட்டி கேவலப்படுத்துவதாக இல்லையா?

எனவே, இவ்வாறாக நபிமார்களைப்பற்றி தரம்தாழ்திக் கூறப்பட்ட அபத்தங்களை மக்கள் மத்தியில் தப்லீக் ஊடாக விதைக்கவே தப்லீக் ஜமாஅத் உருவாக்கப்பட்டுள்ளது என்று ஷைகுனாஸூபி ஹளறத் நாயகம் கத்தஸல்லாஹு ஸிர்ரஹுல் அஸீஸ் அவர்கள் கூறினார்கள்.

மௌலவி இல்யாஸின் மரியாதைக்குரிய தலைவர்களின் இக்கூற்றுக்கள் குப்றை ஏற்படுத்த வல்லவை என்பதில் தப்லீக்கை ஆதரித்த உலமாக்களில் எவருக்கும் அப்போது சந்தேகமில்லை ;

தப்லீக் என்ற. பெயரிலில்லாமல் வேறு தனிமனிதனில் யாராவது இவ்வாறு கூறியிருந்தால், நிச்சயமாக கண்டித்திருப்பார்கள்; வெகுண்டெழுந்து சண்டமாருத பேருரைகளை நிகழ்த்தியிருப்பார்கள்.

அப்படியாயின், இங்கு அவர்கள் வாய்மூடி கண்ணைப் பொத்தியதன் மர்மம் தான் என்ன? தப்லீக்கை தலைமையேற்று வழிநடாத்தும் சீமான்களின் ஆதரவு இவர்களின் கண்ணையும், கல்பையும் குருடாக்கி விட்டது .

உலமாக்கள் அல்லாஹ்வை மட்டும் அஞ்சுவார்கள்; அதனால் தான் சத்திய மார்க்கத்தை வாரிசாகப் பெறும் தகுதி அவர்களுக்கு வழங்கப்பட்டது ,

இந்தத் தகுதியை நிரப்பமாக ஷைகுனா ஸூபி ஹளறத் நாயகம் கத்தஸல்லாஹு ஸிர்ரஹுல் அஸீஸ் அவர்கள் பெற்றிருந்த காரணத்தால் எந்தவிதமான அச்சுறுத்தலுக்கும் அஞ்சாமலும் பணம்,பதவிகளுக்கு சோரம் போகாமலும் அல்லாஹ்வுக்காக துணிந்து களத்தில் போராடினார்கள்.

மக்களை வழிகேட்டிலிருந்து பாதுகாப்பவர் தான் ஷைகாவார், கண்ணியமிக்க ஸூபி ஹளறத் நாயகம் கத்தஸல்லாஹு ஸிர்ரஹுல் அஸீஸ் அவர்கள். தங்களுடைய கடமையை கச்சிதமாக நிறைவேற்றினார்கள், ஆனால்,

அப்போது இலங்கையில் புகழோடும் ,செல்வாக்கோடும் பல டசின் ஷைகுமார்கள் இருந்தார்கள் , அவர்களுக்கெல்லாம் மேற்படி இல்யாஸின் குருமார்கள் றஸூலுள்ளாஹ்வைப்பற்றி தரம் தாழ்த்திக் கூறியவை பெரிய விடயமாகக் கண்ணில் படவில்லை ;

தங்களை உலமாக்கள் , ஷைகுமார்கள் என்று விளம்பரம் போட்டு பேட்டா கட்டி வலம் வந்தவர்கள் தான் வழிகெட்ட குப்றியத்தான கொள்கைகளை மக்கள் மத்தியில் பரப்ப பணத்தாலும், பேருரைகளாலும் வரிந்து கட்டிக் கொண்டு செயல்பட்டார்கள்.

இப்போது நெஞ்சில் கையை வைத்து சொல்லுங்கள்! இப்போது புரையோடிப்போயிருக்கும் வழிகேட்டுக்கு வழிதிறந்து கொடுத்த காவலாளிகள் யார்?

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் வாரிசாக நின்று, வலக்கரத்தில் செங்கதிரையும், இடக்கரத்தில் தண்மதியையும் தந்திடினும் என்கொள்கை விடமாட்டேன் என்றுரைத்த நபிகள் நாயகத்தின் உண்மை வாரிசு யார் ?

இப்பொழுதாவது சிந்தியுங்கள்! ஜெயம்பெறுவீர்கள்.!

தப்லீக் ஜமாஅத்தின் நிறுவனரான மௌலவி இல்யாஸின் குருமார்கள் வழிகெட்ட வஹாபிஸத்தை ஆதரிப்பவர்கள், குப்ரியத்தான கொள்கைகளைக் கொண்டிருப்பவர்கள்;

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களை தரக்குறைவான வார்த்தைகளால் கேவலப்படுத்திய வர்கள், ஆகையால், தப்லீக்ஜமாஅத்தில் சேர்ந்தால், இந்தக்கொள்கைகளும், அசிங்கங்களும் மக்களில் தாவி வழிகெட்டுவிடுவார்கள் என்று அஞ்சியதனால்தான் தப்லீக்ஜமாஅத்தில் சேரக்கூடாது என்று ஷைகுனா ஸூபி ஹளறத் நாயகம் கத்தஸல்லாஹு ஸிர்ரஹுல் அஸீஸ் அவர்கள் பிரச்சாரம் செய்தார்கள்;

ஷைய்கு நாயகமவர்கள் தப்லீக் ஜமாஅத்திற்கு எதிராக முன்வைத்த குற்றச்சாட்டுக்களை தப்லீக் ஜமாஅத்திற்கு ஆதரவு வழங்கிய எந்த ஒரு ஆலிமாலும் மறுக்க முடியவில்லை;

அதே நேரம் அந்த குற்றச்சாட்டுக்களை ஏற்கவும் அவர்கள் தயாரில்லை; அப்படியிருந்தும் கண்மூடித்தனமாக ஆதரவு வழங்கினார்கள்;

தேவ்பந்தி குருமார்களின் மிகமுக்கியத்துவம் வாய்ந்த ஒருவர் தான் மௌலவி றஷீத் அஹ்மத் கொங்கோஹி !, இவர் மௌலவி இல்யாஸின் ஷைகாவார்,

இந்தியாவின் அஹ்லுஸ் ஸுன்னத் வல்ஜமாஅத் உலமாக்களில் பாக்கியாத்துஸ் ஸாலிஹாத்தின் நிறுவனர் அ‌ௗலா ஹளறத் அப்துல் வஹ்ஹாப் கிப்லா, ஆலிமுல் அரூஷ் அல்லாமா மாப்பிள்ளை லெப்பை ஆலிம் றஹ்மத்துள்ளாஹி அலைஹிம் உள்ளிட்டவர்கள் இஸ்மாயீல் திஹ்லவி வழிகெட்ட வஹாபிஸ மதத்தைச் சேர்ந்தவர்

என்றும் , அவரின் தக்வியத்துல் ஈமான் என்ற நூல் , ஈமானை அழிக்கும் குப்றியத் நிறைந்த நூல் என்றும் கூறியுள்ளனர்,

இவ்வாறான நூலைப் பற்றி றஷீத் அஹ்மத் கொங்கோஹி வழங்கும் நற்சான்றைக் கவனியுங்கள்!,

"தக்வியத்துல் ஈமான் என்ற நூல் மிகவும் விஷேஷமான உண்மையான நூலாகும்,மேலும், ஈமானை சீர்படுத்தக்கூடியதும், ஈமானுக்கு வலு சேர்க்கக்கூடியதுமாகும், குர்ஆன் ஹதீஸின் கருத்துக்கள் பூராவும் அதில் இருக்கின்றன.

பதாவா றஷீதிய்யா பக்கம்: 41

மேலும் கூறுகின்றார்,

" தக்வியத்துல் ஈமான் என்னும் நூல் மிகவும் நல்லது , ஷிர்க்கை

யும், பித்அத்தையும் மறுப்பதில் நிகரற்றது, அதிலுள்ள ஆதாரங்கள் முற்றிலும் திருக்குர்ஆன், ஹதீதுகளை கொண்டுள்ளன,

அதை வைத்திருப்பதும், பரப்புவதும்,அதன் படி அமல் செய்வதும் இஸ்லாம் தானாகும்

மேலும் எழுதுகின்றார், தக்வியத்துல் ஈமான் என்ற நூல் மிகச்சிறந்த நல்ல நூல் ,ஷிர்க்கையும் , பித்அத்தையும் மறுப்பதில் நிகரில்லாதது; அதிலுள்ள ஆதாரங்கள் குர்ஆன், ஹதீதுகளைக் கொண்டுள்ளன;

அதை வைத்திருப்பதும், அதைப் படிப்பதும், அதன்படி அமல் செய்வதும், இஸ்லாம் தானாகும்; மேலும் நற்கூலி கிடைக்கக் காரணமுமாகும்,

அதை வைத்திருப்பது குப்று என்று எவன் கூறுவானோ அவனே தான் காபிர், அல்லது பித்அத்கார பாஸிக்காக இருப்பான்.

பதாவா றஷீதிய்யா பக்கம் : 42

இதே பக்கத்தில் எழுதுகின்றார்,

"முத்தகீன்கள் தவிர்த்து வேறு எவரும் அல்லாஹ்வுடைய அவ்லியாக்களாக இல்லை " என்ற திரு வசனத்தின் படி , மௌலவி இஸ்மாயீல் திஹ்லவி வொலியாக இருக்கின்றார்

பதாவா றஷீதிய்யா பக்: 42

இவ்வாறு ஆபாசத் களஞ்சியமான தக்வியத்துல் ஈமானைப் பற்றியும், மௌலவி இஸ்மாயீல் திஹ்லவியை வொலி என்றும் நற்சான்று வழங்கும் றஷீத்அஹ்மத் கொங்கோஹியைப் பற்றி மௌலவி இல்யாஸ் கூறுவதைக் கேளுங்கள்!,

", ஹளறத் கொங்கோஹி இக்காலத்தில் நேர்வழி காட்டும் குத்பாகவும் , முஜத்திதாகவும் இருக்கும்.

மல்பூஜாத் பக்கம் 114 (உருது)

இந்தியாவில் முதன் முதலில் வஹாபிஸ வழிகேட்டை திறந்துவிட்ட இஸ்மாயீல் திஹ்லவியின் குப்றுகள் நிறைந்த ஆபாசக்களஞ்சியத்தைப் பற்றி பாராட்டிப்பேசிய றஷீத் அஹ்மத் கொங்கோஹி இக்காலத்தின் குத்பும் முஜத்திதும் என்று மௌலவி

இல்யாஸ் கூறுவதாயின், அவரின் கொள்கையில், பிரச்சாரத்தில் எந்தளவு இவர் ஈர்க்கப்பட்டுள்ளார் என்பதைக் கவனித்துப்பாருங்கள் !,

இந்திய வஹாபிஸத்தின் நாயகனைப் பாராட்டிய கங்கோஹியார் சஊதி வஹாபியைப் பற்றி என்ன கூறுகின்றார் என்பதையும் கவனியுங்கள்!,

"முஹம்மது இப்னு அப்துல் வஹாபை ஜனங்கள் வஹாபி என்று கூறுவார்கள், அவர் நல்ல மனிதர் ஹம்பலி மத்ஹபைப் பின்பற்றியவர் என்று கேள்விப்படுகின்றேன் , ஹதீஸின் பிரகாரம் அவர் அமல் செய்பவர் , பித்அத்தையும் , ஷிர்க்கையும் தடுத்துக் கொண்டிருந்தார் , ஆனாலும் அவரின் சுபாவத்தில் கடுமையும் உண்டு

பதாவா றஷீதிய்யா பக்கம் : 237

மௌலவி இல்யாஸின் குருவான றஷீத் அஹ்மத் கொங்கோஹி அவர்கள் வஹாபி நஜ்தியையும் , இஸ்மாயீல் திஹ்லவியையும் பாராட்டி எழுதியதை யும் , றஷீத் அஹ்மத் கொங்கோஹி தற்காலத்தில் குத்பும் , முஜத்திதுமாவார் என்றுமௌலவி இல்யாஸ் புகழ்ந்திருப்பதையும் படித்தீர்கள் !

அடுத்து, மௌலவி இல்யாஸுக்கும் வஹாபிகளுக்குமிடையிலுள்ள உறவையும் படியுங்கள்!

தொடரும்...

Part -9

மௌலவி இல்யாஸ் மன்னர் இப்னு ஸுஊதையும், பிரதம வஹாபிஸ காழியையும் சந்தித்து தப்லீக் கின் நோக்கத்தை அவர்களிடம் கொடுத்து உதவி கோரிய விடயத்தை அபுல் ஹஸன் அலி நத்வி தனது " தீனி தஃவத்" என்ற நூலில் பின்வருமாறு வரைகின்றார்

1938ம் ஆண்டு மௌலவி இல்யாஸ் காந்தலவி நான்காவது முறையாக ஹஜ்ஜுக்குச் செல்கின்றார், ஹிஜாஸில் இருக்கின்ற இந்திய வியாபாரிகளிடம் தப்லீக் கைப்பற்றி அறிமுகம் செய்து பணியைத் தொடங்கியதும், அரசரின் அனுமதியில்லாமல் இப்பணியில் ஈடுபட முடியாது என்று கூறி அவர்கள் பின்வாங்கினார்கள்;

இதனைத் தொடரந்து தப்லீக்கின் நோக்கத்தை அரபியில் எழுதியபின், அரசரிடம் முன்வைப்பதாக அங்கு முடிவு செய்யப்பட்டது;

1938 மார்ச்14 ந்திகதி மௌலவி இல்யாஸ் காந்தலவி ஹாஜி அப்துல்லாஹ் திஹ்லவி, ஷைகுல் முதவ்விபீன் , அப்துர்ரஹ்மான் மழ்ஹர் மௌலவி இஹ்திஸாமுல் ஹஸன் ஸாஹிப் ஆகியோருடன் அரசரைச் சந்திக்கச் சென்றார்கள்;

'ஜலாலத்துல் மலிக் 'மிகவும் மரியாதையுடன் தனது இருப்பிடத்திலிருந்து இறங்கி வந்து வரவேற்றார்; மேலும் தனக்குப் பக்கத்திலேயே கண்ணியமான இந்திய விருத்தாளிகளை அமர வைத்தார் ,

இவர்கள் " தப்லீக் உடைய நோக்கங்கள் எழுதப்பட்ட கடிதத்தை அரசரிடம் முன்வைத்தார்கள், அந்நேரத்தில் அரசர் ஏறத்தாள 40

நிமிடங்கள் வரை ஏகத்துவம், குர்ஆன், ஹதீஸ் மற்றும் ஷரீஅத் தைப்பின்பற்றுவது விடயமாக விரிவான 'பயான்' செய்தார்கள்;

பிறகு மிகவும் மரியாதையுடன் இருப்பிடத்திலிருந்து இறங்கி வந்து பிரியா விடை கொடுத்தார் ;

மௌலவி இஹ்திஸாமுல் ஹஸன் அவர்கள் 'தப்லீக்' குடைய நோக்கங்களை சுருக்கமாக எழுதி " ஷைகுல் இஸ்லாம் "றயீஸுல்குழாத் " அப்துல்லாஹ் இப்னு ஹஸனிடம் முன்வைத்தார்கள் ,மௌலவி இஹ்திஸாமுல் ஹஸன் அவர்களும் அவரிடம் தாமாகச்சென்றனர்,

அவர் மிகவும் கண்ணியப்படுத்தி ஒவ்வொரு விடயங்களையும் மிகவும் ஆதரித்தார்,மேலும், தான் அதனை ஆதரிப்பதாகவும்,உதவுவதாகவும் வாக்களித்தார்

ஆதாரம் தீனி த: ஃவத் .. தமிழ் மொழிபெயர்ப்பு : பக்: 117

(இந்த உருது நூலின் தமிழாக்கம் கொழும்பு மர்கஸில் இயங்கும் குல்லியத்து ரஷாதில் அரபிய்யா, வெளியீடாக 2017ல் வெளிவந்துள்ளது )

மேற்கண்டவையின் மூலம் தப்லீக் ஜமாஅத் வஹாபிகளின் அங்கீகாரத்தோடும் , ஒத்துழைப்போடும் துவங்கப்பட்டுள்ளது என்பது உள்ளங்கை நெல்லிக்கனி போன்று தெளிவாகி விட்டது;,

மௌலவி இல்யாஸையும், தப்லீக் திட்டங்களையும் சஊதி மன்னர் இப்னு ஸுஊதும் , காழிகுழாத்தும் மனப்பூர்வமாக ஆதரித்திருக்கின்றனர்,

இந்திய விருந்தாளிகளை அரசர் தனது இருப்பிடத்திலிருந்து இறங்கி வந்து வரவேற்று 40 நிமிடங்கள் தௌஹீத் விடயமாகும் பேசியிருக்கின்றார்,

பேச்சு வார்த்தை இனிதே நிறைவடைந்த மகிழ்ச்சியில் அரசர் இறங்கிவந்து விருந்தாளிகளை வழியனுப்பியியுமிருக்கின்றார்,

புனித மக்கா மதீனாவிலிருந்த ஸியாறங்களையும், புனித நினைவிடங்களையும் துவம்சம் செய்து ,அஹ்லுஸ்ஸுன்னத். வல்ஜமாஅத் உலமாக்களையும்,பெண்களையும். குழந்தைகளையும் ஈவிரக்கமின்றி கொண்டு குவித்த இப்னு ஸுஊதோடு மௌலவி இல்யாஸ் தப்லீக் திட்டத்தைக் கையளித்து அனுமதியையும் , பாராட்டையும், உதவிகளையும் பெற்றிருக்கின்றார்;

காட்டுமிராண்டித்தனமாக காட்டு தர்பார் செய்த இப்னு ஸுஊத் இவர்களுடன் பேசிய தௌஹீத் எதுவாக இருக்கும்?

அஹ்லுஸ்ஸுன்னத் உலமாக்களைத் தேடித்தேடி கொண்று குவித்த பாஸிஸவாதி இப்னு ஸுஊத் இருப்பிடம் விட்டு இறங்கி வந்து இவர்களை கண்ணியப்படுத்தினார் என்றால் , இவர்களுக்கிடையே எந்தளவு நட்பு இருந்திருக்க வேண்டும்?

இவர்களின் திட்டம் அவரை எந்தளவு கவர்ந்திருக்க வேண்டும்?

இந்தியாவில் இப்னு ஸுஊதின் அடாவடித்தனத்தை எதிர்த்து கடுமையான கண்டண ஊர்வலங்கள்,ஆர்பாட்டங்கள் நிகழ்த்தி மக்கள் கொந்தளிப்பாக இருந்த கால சூழலில் தான் மௌலவி இல்யாஸ்

இப்னு சுஊதைச் சந்திக்கின்றார், மன்னர் இப்னு ஸுஊதும் இல்யாஸுக்கு ஆதரவுக் கரம் நீட்டுகின்றார்;

மௌலவி இல்யாஸின் தப்லீக் திட்டம் அஹ்லுஸ்ஸுன்னத் வல்ஜமாஅத்தினடிப்படையில் இருந்திருக்குமா? அல்லது, வஹாபிகளின் முழு அபிலாசைகளைப் பூர்த்தி செய்யும் நயவஞ்சகத்திட்டமாக இருந்திருக்குமா? என்பதை முடிவு செய்வதற்கு அதிக நேரம் தேவைப்படாது.

.

ஹிஜ்ரி 600வரையில் முஃதஸிலாக்களின் கொள்கை , ஆட்சி அரபு நாடுகளில் கோலோச்சியது; கௌதுல் அஃழம் முஹ்யித்தீன் அப்துல் காதிர் ஜீலானி கத்தஸல்லாஹு ஸிர்ரஹுல் அஸீஸ் அவர்களின் பிரச்சாரத்தால் முஃதஸிலாக்கள் வீழ்ச்சிகண்டனர், பின்னர் படிப்படியாக இல்லாமல் போய்விட்டனர்,

கௌதுல் அஃழம் முகையத்தீன் அப்துல் காதிர் ஜீலானி கத்தஸல்லாஹு ஸிர்ரஹுல் அஸீஸ் அவர்கள் காதிரிய்யாத் தரீக்கை நிறுவினார்கள், அவர்களைத் தொடர்ந்து பல தரீக்காக்கள் தோற்றம் பெற்று கிளைவிட்டு வளர்ச்சியடைந்திருந்தன,

தரீக்காக்களின் எழுச்சியாலும், வளர்ச்சியாலும் அஹ்லுஸ் ஸுன்னத் வல்ஜமாஅத்தின் செயல்பாடுகள் வையகமெங்கும் மணம் பரப்பின, இதனால் முஸ்லிம்கள், ஈமானிய ஒற்றுமையுடனும், ஆத்மீக சகோதர வாஞ்சையோடும் வாழ்ந்து வந்தனர்,

இதைப் பொறுக்காத ஸியோனிஸவாதம் முஸ்லிம்கள் மத்தியில் குழப்பத்தை உருவாக்க திட்டமிட்டன;, அதற்காக வழிகெட்ட முஃதஸிலாக் கோட்பாட்டுக்கு புத்துயிரூட்ட திட்டமிட்டனர்;

அத்திட்டத்திட்டத்தில் முளைத்தது தான் வஹாபிஸமாகும், வஹாபிஸம் என்பது மு:ஃதஸிலாக்களின் மறுபிறவியாகும்,

வஹாபி நஜ்தி கூறுகின்றார், தன்னுடைய நோக்கம் நிறைவேறினால் , இன்றைய முஸ்லிம்கள் இன்றிலிருந்து 600 ஆண்டுகளுக்கு முன்பு முஸ்லிம்கள் இருந்த கொள்கையின் பக்கம் திரும்பி விடுவார்கள். வஹாபி நஜ்தி ஹி:1200ல் உள்ளவர் அதனால் 600 என்றார்,

மௌலவி இல்யாஸ் வஹாபிக்கு 100ஆண்டுகள் பிந்தியவர், அவர் கூறுகின்றார்,

நான் கூறுகின்றேன் இதுவரை அஸல் வேலை ஆரம்பமாகவில்லை; எப்பொழுது அஸல்வேலை ஆரம்பமாகுமோ அன்றைய முஸ்லிம்கள் இற்றைக்கு 700 ஆண்டுகளுக்கு முன்னுள்ள நிலைக்கு மீண்டு விடுவார்கள் .

ஆதாரம் மல்பூழாத்: பக்கம் :32

வஹாபி நஜ்தியும், மௌலவி இல்யாஸும் ஒரே எண்ணத்தில்,திட்டத்தில், இலட்சியத்தில் பயணித்துள்ளனர் என்பது தெட்டத் தெளிவாகிவிட்டது !,

தப்லீக் கின் திட்டத்தைப் பார்த்த மன்னர்இப்னு சுஊதும் வஹாபிஸ பிரதம நீதியரசரும் புளகாங்கிதமடைந்ததின் அந்தரங்கம் புரிகின்றதா?

ஹிஜாஸில் வஹாபிஸமும், இந்தியாவில் தேவ்பந்திஸமும் தங்களின் கொள்கைகளை வெளிப்படையாக வெளிப்படுத்தியதனால்

தான் உலமாக்களினதும் பொதுமக்களினதும் எதிர்ப்புக்கு முகம் கொடுக்க நேரிட்டு பெயரைக் கெடுத்துக் கொண்டனர்,

எனவே அந்த இருண்ட சூழல் மீண்டும் வரக்கூடாதென்பதற்காக தப்லீக்கின் பிரதான நோக்கத்தை மறைத்து, கலிமா,தொழுகை என்ற போர்வையைப் போர்த்தி சாணக்கியமாக வஹாபிஷத்தை பரப்புவது என்ற கெட்ட எண்ணத்தோடு மக்கள் முன் வருவது தான் அவர்கள் வகுத்த வியூகமாகும்;

அஸல் திட்டத்தை ஆரம்பத்தில் கூறினால் மக்கள் வெறுத்திடுவார்கள்,அதனால் ,மக்கள் மத்தியில் எதிர்ப்பும் அதிகமாகிவிடும், ஆகவே தான், மக்கள் சந்தேகப்படாமலும், வெறுக்காமல் இருபதற்காக வேண்டியே தப்லீக்கின் நோக்கம்

"கலிமா, தொழுகையைப் பற்றி போதிப்பது என்றும், கருத்து வேறுபாடான விடயங்களையும், மார்க்க சட்டங்களையும் பேசுவதில்லை என்றும் நிபந்தனை போட்டார்கள்,

மௌலவி இல்யாஸ் கூறுகின்றார்,

எவ்வாறான பிரசங்கங்களிலும்,எழுத்துக்களிலும் குழப்பத்தைத் தூண்டக்கூடிய வார்த்தைகள் வருதல் கூடாது, மேலும்,தீய எண்ணமும், தப்பபிப்பிராயமும் வளரக்கூடிய கொள்கைகளையும் வெளிப்படுத்தக் கூடாது.

ஆதாரம்: மக்தூபாத், பக்கம்: 143 .

வஹாபிஸ கொள்கைகளை மக்கள் வெறுக்கின்றார்கள், அந்த கொள்கைகளை வெளிப்படுத்தியதனால் தான் தேவ்பந்திகளுக்குள் எதிரான ஃபத்வாக்கள் வந்து மக்கள் தேவ்பந்தி ஷைய்குமார்களை ஓரம்கட்டினார்கள் :, அந்த ஆபத்தான நிலமை தப்லீக் ஜமாஅத்திற்கும் வரக்கூடாதென்பதற்காக மௌலவி இல்யாஸ் போட்ட வேலி தான் மேற்படி வாக்கயமாகும்.

தப்லீக் ஜமாஅத் பிரச்சினைக்குரிய வையைத் தவிர்த்து தொழுகையை கையில் எடுத்தவேஷம் தான் இலங்கையிலுள்ள உலமாக்களையும், பாமரர்களையும் ஏமாற்றியது!

தொழுகைக்கு அழைத்தல் என்பது தப்லீக்கின் அஸல் நோக்கமல்ல! அது ஆரம்பத்தில் உள்ளவர்களுக்காகக் கூறப்பட்ட அலங்கார வார்த்தையாகும் என்பதை அப்போது அவர்கள் விளங்கிக் கொள்ள வில்லை;

கலிமாவும் , தொழுகையும் தப்லீக்கின் திட்டத்தில் எந்த தரத்திலிருக்கின்றது என்பதை மௌலவி இல்யாஸ் வெளிப்படையாகவே கூறுகின்றார் கேளுங்கள்!

"நம்முடைய இந்த இயக்கத்தின் அஸல் நோக்கம் நபியவர்கள் கொண்டு வந்த அனைத்தையும் கற்றுக்கொடுப்பதா.கும், சுற்றித்திரிவதும், கஷ்த்து செய்வதும் அந்த நோக்கத்திற்கான ஆரம்பவழிகளாகும்,

மேலும், கலிமா தொழுகையைக்கற்றுக் கொடுப்பதும் , போதிப்பதும் அந்த நம்முடைய பூரண திட்டத்தில் ஆலிம், பே, தே, போன்றதாகும்

ஆதாரம்:மல்பூழாத் பக்கம்: 65

தப்லீக் கின் அஸல் நோக்கம் தொழுகைக்கு அழைத்தல் என்று மக்கள் நினைத்துக் கொண்டு செயல்படுவதை எண்ணி மௌலவி இல்யாஸ் வேதனைப்பட்டார்,

ஒருதடவை மௌலவி இல்யாஸின் நண்பரான ழஹீறுல் ஹஸன் (எம்.ஏ.அலிகார்) அவர்களைப் பார்த்து,

ழஹீறுல் ஹஸன்! எனது நோக்கத்தை யாரும் விளங்குகின்றார்களில்லை; மக்கள் இது தொழுகையைப்பற்றி ஏவக்கூடிய இயக்கம் என்று நினைத்துக் கொள்கின்றார்கள் ,

நான் சத்தியம் செய்து சொல்கின்றேன், இது* *ஒருபோதும்* தொழுகையைப்பற்றி ஏவக்கூடிய இயக்கமல்ல!*

ழஹீறுல்ஹஸன் (எனது நோக்கம்) ஒரு புதிய கூட்டத்தை உருவாக்க வேண்டும்

ஆதாரம்: தீனி த்ஃவத் பக்கம் : 206

தமிழ் மொழிபெயர்ப்பு: 257

தப்லீக்கின் அஸல் நோக்கம் தொழுகைக்கு அழைத்தல் என்பது கண்துடைப்பு க்காக கூறப்பட்ட ஏமாற்று முகமூடி என்பதை தப்லீக்கின் நிறுவனரே சத்தியம் செய்து கூறியிருக்கின்றார்,

என்பதை கூர்ந்து கவனியுங்கள்!

தொழாமல் பொடுபோக்காக இருக்கும் முஸ்லிம்களை தொழப்பழக்குவது, தீயகாரியங்களிலீடுபடும் துஷ்டர்களை நல் வழிப்படுத்துவது மக்கள் வராமல் வெறிச்சோடிக் கிடக்கும் பள்ளிவாசல்களை ஹயாத் தாக்குவது என்ற ஆரம்பக்கட்ட கோஷங்கள் மக்களை தப்லீக்கின் பக்கம் கவருவதற்கான ஏமாற்று வார்த்தைகள் என்பதை ஷைய்குனா ஸூபிஹளறத் நாயகம் கத்தஸல்லாஹு ஸிர்ரஹுல் அஸீஸ் அவர்கள் எவ்வளவு கூறியும் உலமாக்களின் காதில் கேட்கவில்லை:

தப்லீக் ஜமாஅத் வளர்ந்ததும் ஆரம்பத்தில் தப்லீக்கிற்கு ஆதரவு வழங்கிய உலமாக்கள் , ஷைகுமார்கள் கண்திறந்தார்கள், ஆனால், காரியம் கையை விட்டும் நழுவிச் சென்று விட்டது !

ஆரம்பத்தில் தப்லீக் ஜமாஅத்திற்கு ஆதரவு வழங்கியவர்கள் பிற்காலத்தில் கையறுந்த நிலையில் வேதனைப்பட்டதை நாம் நிதர்சனமாகக்கண்டோம்!

தப்லீக்ஜமாஅத்தின் நோக்கம் தொழுகைக்கு அழைப்பதல்ல என்றால் உண்மையான நோக்கம்தான் என்ன?,

தொடரும்....

part -10

வஹாபி நஜ்திக்கும், மக்கத்துல்முகர்ரமாவிலுள்ள கண்ணியமிக்க உலமாக்களுக்குமிடையில் ஓர் உரையாடல் நிகழ்ந்தது, அந்த உரையாடலில் கலந்து கொண்ட உலமாக்களில் ஒருவர் வஹாபியிடம் பின்வரும் கேள்வியைக் கேட்டார்,

நீர் கொண்டு வந்திருக்கும் இந்த மார்க்கம் முன்னோரிட மிகுந்து தொடர்ச்சியாக வந்ததா? அல்லது, தொடர்பின்றி வந்ததா?

என்னுடைய ஷைய்கு மற்றும் அவருடைய ஷைய்கு உள்ளிட்ட 600 ஆண்டுகள் வரையுள்ள அனைவரும் முஷ்ரிக்குகளாக இருக்கின்றனர்,என்று வஹாபி பதில் கூறினார், அப்படியாயின், உமது மார்க்கம் முன் தொடர்ச்சியில்லாததுஎன்று கூறிவிட்டு , இந்த மார்க்கத்தை எங்கிருந்து எடுத்தீர் என்று மீண்டும் கேட்டார்;

நபி ஹிழ்று அலைஹி ஸ்ஸலாமவர்களுக்குக் கிடைத்தது போன்று இல்ஹாமியத்தான வஹ்யின் மூலமாகப் பெற்றுக் கொண்டேன் என்று கூறினார், இப்படியான வஹி உமக்கு மட்டும் உரித்துடையதில்லையே! நீர் கூறுவது போன்று ஒவ்வொருவரும்தான்வாதிக்க முடியுமே! என்றுகூறி வஹாபியை வுயடைக்கச் செய்தார்.

இப்னு அப்துல் வஹ்ஹாப் நஜ்தி கூறிய அதே பாணியில் மௌலவி இல்யாஸும் கூறுவதைக் கவனியுங்கள்! "இந்தத்தப்லீக்கின் முறை எனக்குக் கனவில் வெளியாயிற்று ,"நீங்கள் மக்கள் பால் அனுப்பப்பட்ட சிறந்த சமுதாயமாக உள்ளீர்கள், நீங்கள் நல்லதை ஏவுகின்றீர்கள், தீயவற்றை விலக்குகின்றீர்கள், அல்லாஹ்வைக் கொண்டு ஈமான் கொள்ளவும் செய்கின்றீர்கள் "

என்ற திருமறை வசனத்தின் விளக்கம் எனக்குக் கனவில் கூறப்பட்டது,அதாவது, "நீங்கள் நபிமார்களைப் போன்று மக்களுக்காக வெளியாக்கப்பட்டுள்ளீர்கள் என்று.

ஆதாரம்: மல்பூழாத் பக்கம் : 40

இப்னு அப்துல் வஹ்ஹாப் நஜ்தியின் கூற்றும் , தப்லீக்கின் நிறுவனர் மௌலவி இல்யாஸின் கூற்றும்,

"தங்களின் போதனைகள் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் காலத்திலிருந்து தொடர்ச்சியாக வந்தது இல்லை என்பதை உறுதிப்படுத்துவதோடு

ஹிஜ்ரி 600ஆண்டிலிருந்து இவர்கள் காலம் வரையுள்ளவர்கள் அனைவரும் ஷிர்க் செய்து முஷ்ரிக்காகவும், காபிராகவும் ஆகிவிட்டார்கள் என்பதை ஐயம் திரிபின்றி இயம்புகின்றனர்;

இப்னு அப்துல் வஹ்ஹாப் நஜ்தி தனது சமுகத்திற்கு மத்தியில் நபியைப் போன்று தான் கணிக்கப்பட்டார், இந்த நோய் வஹாபிக்கு மட்டுமல்ல மௌலவி இல்யாஸுக்கும் , அவரின் ஷைய்குமார்களாகிய அஷ்ரப்அலி தானவி, றஷீத் அஹ்மத் கொங்கோஹி உள்ளிட்டவர்களின் மனதிலும் ஒழித்துக் கொண்டிருந்தது ,

மௌலவி இல்யாஸின் மனதில் கிடந்த நபித்துவ ஆசையை இப்போது படித்தீர்கள்! குருமார்கள் கூறுவதை இதோ கேளுங்கள்! மௌலவி றஷீத் அஹ்மத் கொங்கோஹி கூறுகின்றார்,

இக்காலத்தில் நேர்வழியும், ஈடேற்றமும் என்னைப் பின்பற்றுவதன் மூலமே தங்கியிருக்கின்றது.

ஆதாரம் :பதாவா றஷீதிய்யா : 17

மௌலவி இல்யாஸின் குருவான அஷ்ரப்அலி தானவி "அல்இம்தாத்" என்று ஒரு சஞ்சிகை வெளியிட்டுவந்தார், அதில் ஒருவர் பின்வருமாறு ஒரு கேள்வி கேட்டிருந்தார்,

நான்கனவில் "லாஇலாஹ இல்லல்லாஹு அஷ்ரப் அலி றஸூலுள்ளாஹி" என்று ஓதுகின்றேன், பின்னர் விழிப்பில் கனவில் கூறியது தவறு என்றுணர்ந்து ஸலவாத் கூறினேன், அப்போதும் என்நாவில் ,

அல்லாஹும்ம ஸல்லி ஆலா ஸெய்யிதினா வநபிய்யினா வமௌலானா அஷ்ரப் அலி " என்றே வருகின்றது ! இதற்கான விளக்கத்தைத் தாருங்கள்! அஷ்ரப் அலி இதற்கு இவ்வாறு பதில் பகர்கின்றார், "இந்த நிகழ்ச்சியில் உமக்கு சுபசெய்தி கூறப்பட்டுள்ளது ! நீர் எவர்பக்கமாகச் செல்ல விரும்புகின்றீரோ அவர் மார்க்கத்தைப் தொடர்ந்தவராக இருக்கும் "

மௌலவி அஷ்ரப் அலி தானவி மேற்படி கலிமாவிலும், ஸலவாத்திலும் தனது பெயரை நபியாகவும் றஸூலாகவும் கூறியதை எவ்வித மறுப்போ , வியாக்கியானமோ இன்றி முழு சம்மதத்தோடு ஏற்றுள்ளார்,

தானவியாரின் இந்த பதில் அறிஞர்கள் மத்தியில் மிகப் பெரிய எதிரிவினையை ஏற்படுத்தியது

அல்லாமா அப்துல் அலீம் ஸித்தீக்கி மீரட்டி றஹ்மத்துள்ளாஹி அலைஹி அவர்கள் அஷ்ரப் அலிதானவியிடம் இதற்கான விளக்கத் வேண்டி பலமுயற்சிகள் செய்தும் பலன் கிட்டாததனால்

ஃபர்ரத்தும் மின் கஸ்வரா" என்ற பெயரில் அவர்மீது குப்று ஃபத்வா வெளியிட்டார்கள்; இந்த ஃபத்வாவை " புலியைக் கண்டு ஓட்டம்", என்ற பெயரில் எங்களின் ஷைகுநாயகம் கண்ணியத்திற்குரிய ஸூபிஹளறத் நாயகம் கத்தஸல்லாஹு ஸிர்ரஹுல் அஸீஸ் அவர்கள் தமிழாக்கி பிரசுரித்து வெளியாக்கினார்கள்

.

மௌலவி இல்யாஸ் நபியைப் போன்றவர் என்ற எண்ணம் தப்லீக்கில் உள்ளவர்களின் மனதிலும் இருக்கவே செய்தது என்பதற்கு பின்வரும் நிகழ்வு தக்க சான்றாகும்,

மௌலவி இல்யாஸின் மரண செய்தியைக் கேள்விப்பட்டு மக்கள் டில்லி தப்லீக் மர்கஸில் திரண்டனர், அப்போது மக்களை ஓரிடத்தில் ஒன்று கூட்டுமாறு கூறப்பட்டு ஒருபயான் ஏற்பாடு செய்யப்பட்டது,

அந்த பயானை நிகழ்த்தியவர்,

"முஹம்மத் றஸூலே அன்றி இல்லை;அவருக்கு முன்னரும் , ரஸூல் மார்கள் திட்டமாகச் சென்றுவிட்டனர்; ....

3- 144

என்ற திரு வசனத்தைக் ஓதி விளக்கம் கூறப்பட்டது !

இந்த நிகழ்ச்சியைப் பற்றி எழுதுகின்ற அபுல் ஹஸன் அலி நத்வி இது பற்றிக் கூறுகையில், இந்த வசனத்தில் உள்ள விடயங்களைக் தவிர அந்த சந்தர்பத்திற்குப் பொருத்தமான விடயம் வேறுஎன்னதான் இருக்க முடியும்.

ஆதாரம்: தீனி தஃவத் தமிழ் மொழிபெயர்ப்பு :212

காத்தமுன்நபி முஹம்மதுர்ரஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் வபாத் தான பின், ஸித்தீக்குல் அக்பர்

றழியல்லாஹு அன்ஹு அவர்கள் மேற்படி திருவசனத்தை ஓதி ஸஹாபாக்களை ஆசுவாசப்படுத்தினார்கள்,

அந்த சந்தர்பத்தில் இத்திருவசனம் அங்கு பொருத்தமாக இருந்தது

மௌலவி இல்யாஸ் றஸூலோ ,நபியோ கிடையாது, பொதுவாக மரணத்தைச் பற்றி இறங்கிய திருவாசகத்தை அங்கு ஓதியிருந்தால் பொருத்தமாக இருக்கும் , அதைத் தவிர்த்து விட்டு மேற்படி திருவசனத்தை ஓதி ஹளறத் ஸித்தீக்குல் அக்பரின் செயலை ஒப்பாக்கி இல்யாஸைப்பற்றி அவர்கள் மனதிலிருந்ததை வெளிப்படுத்தினார்கள் என்பதே நிஜமாகும்.

நபித்துவ ஆசை இவர்களின் மனங்களில் மறைந்து கிடந்ததால் தான் தேவ் பந்தின் நிறுவனர் மௌலவி காஸீம் நானோத்தவி "காத்தமுன் நபிக்கு புதுவகையான பொருள் கூறி நபியவர்களுக்குப் நபி வரலாம் என்று மூடிய வாசலை திறந்து கொடுத்தார்;

நஊது பில்லாஹி மின்ஹா!

தப்லீக்கின் அசல் நோக்கத்தைப்பற்றி மௌலவி இல்யாஸ் கூறும்போது,

என்மனம் விரும்புகின்றது கல்வி ஞான போதனை தானவியுடையதாகவும் ,தப்லீக் நடை முறை என்னுடைய தாகவும் இருக்கட்டும்; இந்த வகையில் தானவியின் கொள்கை நாலாபக்கமும் பரந்துவிடும்.

தப்லீக் ஜமாஅத்தின் உண்மையான நோக்கம் இப்போது வெளிச்சமாகி விட்டது !

தானவி ஸாஹிபு றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் மறைவான அறிவை பேயன், பைத்தியக்காரன், குழந்தை , மிருகங்கள் உள்ளிட்டவை க்கு ஒப்பிட்டுப் கூறியதையும், இவ்வாறு கூறியதனால் இவரின் மீது புனித மக்கா, மதீனாவின் முப்தி கள் குப்று ஃபத்வா வெளியிட்டதை யும் ஏலவே கூறியுள்ளோம்;

அஷ்ரப் அலி தானவி "பிஹிஸ்தி ஸேவர்" என்ற பெயரில் ஒரு நூல் எழுதியுள்ளார் ; இதன் முதல்பாகத்தில் குப்று, ஷிர்க்கு, பித்அத் பற்றிய விளக்கத்தை எழுதியிருக்கின்றார்,

இந்த உருது நூலை திருச்சி அப்துர் ரஸூல் என்பவர் தமிழாக்கினார் , அது1967 ல் "சொர்க்க நகைகள்" என்ற பெயரில் வெளிவந்தது!

இந்த நூலை பார்வையிட்ட எங்களின் ஷைகுநாயகம் ஸூபிஹஸறத் கத்தஸல்லாஹு ஸிர்ரஹூல் அஸீஸ் அவர்கள் "சொர்க்க வகைகளா? அல்ல, அது "நரகவிலங்குகள் "என்ற பெயரில் அதன் தப்புக்களை விலாவாரியாக விளக்கி ஒரு சிறு நூலை வெளியிட்டு மக்களை எச்சரித்து விளிப்பூட்டினார்கள்,

இந்த நூலில் கூறப்பட்ட ஷிர்க் ,குப்று பித்அத் பற்றிய நகைப்பான விளக்கங்களை இன்ஷா அல்லாஹ் விரிவாக பின்னர் எழுதுகின்றேன்.

தப்லீக்கின் மேற்கண்ட திட்டங்களை தக்க ஆதாரத்தோடு ஷைய்குனா ஸூபிஹளறத் நாயகம் கத்தஸல்லாஹு ஸிர்ரஹுல் அஸீஸ் அவர்கள் கூறிய போது தான் தப்லீக் மேலிடம் கொதிக்கத் தொடங்கியது ,

தப்லீக் மீது சுமத்தப்பட்ட எந்த ஒரு குற்றச்சாட்டையும் நிறுவ திராணியற்ற தப்லீக் மேலிடம் தங்களின் தாழத்திற்கு ஆட்டம் போடும் ஆலிம்களை வாடகைக்கு அமர்த்தி சப்பைக்கட்டு கட்டி மக்களை ஏமாற்றி வழிகெடுக்க முயற்சித்தது !

இந்தக் கட்டத்தில் தான் தனித்து நின்று அத்தனை எதிர்ப்புக்களுக்குமத்தியிலும் கர்ஜிகாகத் தொடங்கினார்கள் கொள்கை வேங்கை ஷைய்குனா ஸூபி ஹளறத் நாயகம் கத்தஸல்லாஹு ஸிர்ரஹுல் அஸீஸ் அவர்கள்,

## Part -11

தப்லீக்ஜமாஅத்தின் நோக்கம் தொழுகைக்கு அழைப்பதல்ல! வழிகெட்ட தேவ்பந்திகளினதும், வஹாபிஸ வழிகெட்ட கொள்கைகளையும் தந்திரமாகப் பரப்புவதே அதன் நோக்கம் என்று சங்கைக்குரிய ஷைகு நாயகம் ஸூபி ஹளறத் கத்தஸல்லாஹு ஸிர்ரஹுல் அஸீஸ் அவர்கள் ஓயாமல் நாடு முழுவதும் பிரச்சாரம் செய்து வந்தார்கள்,

இந்த வகையில் 1961 செப்டம்பர் மாதம் கண்டி கெலிஓயா என்ற ஊருக்குச் சென்று தங்களின் முரீதீன்களின் வீட்டில் தங்கியிருந்து தனது பிரச்சாரத்தை செய்து கொண்டிருந்தார்கள்;

இதேமாதம், 29ந்திகதி கொழும்பு மர்க்கஸிலிருந்து வந்த தப்லீக் மேலிடம் கெட்டக் கும்பம்பற ஜூம்ஆப் பள்ளிவாசலுக்கு வந்தது, ஷைகுனா ஸூபி ஹளறத் நாயகமவர்களும் அன்று ஜூம்ஆவிற்கு அங்கு சென்றிருந்தார்கள்;

ஜூம்ஆவுக்குப் பின், ஒக்டோபர் 28,29ந்திகதிகளில் இதே பள்ளிவாசலில் தப்லீக் இஜ்திமா நடாத்துவது பற்றி அகில இலங்கை தப்லீக் அமீர் ஹனீபா ஹாஜியார் உரையாற்றினார்;

அவர் உரையில், "நன்மைக்கும்,தக்வாவிற்கும் ஒருவருக்கொருவர் உதவியாக இருங்கள்" என்று அல்லாஹுத்த ஆலா கூறுகின்றான், ஆகவே, தப்லீக் ஜமாஅத் நன்மையான,தக்வாவுக்குரிய செயல்களை ஏவுகின்றது, தீயவைகளைத் தடுக்கின்றது ஆகையால், நீங்கள் அனைவரும் தப்லீக் கின் பணியில் ஈடுபட்டு அதைப் பலப்படுத்த முன்வரவேண்டும் என்று வேண்டுகோள் விடுத்தார்;

ஹனீபா ஹாஜியாரின் உரையை அடுத்து பள்ளிவாசல் நிருவாகிகளின் வேண்டுதலின் பேரில் கண்ணியத்திற்கு ஷைய்குனா ஸூபி ஹளறத் நாயகம் அவர்கள் உரையாற்றினார்கள்.

அவர்கள் தனதுரையில்,, " ஹனீபா ஹாஜியார் அவர்கள் ஓதிய ஆயத்திற்கு அடுத்த தொடரில், பாவத்திற்கும், பகைமைக்கும் நீங்கள் ஒருவருக்கொருவர் உதவியாக இருக்க வேண்டாம் " என்று அல்லாஹுத்த ஆலா கூறுகின்றான்;

ஆகவே, வழிகெட்ட வஹாபிஸத்தை பரப்பும் உள்நோக்கத்தோடு வந்திருக்கும் தப்லீக் இயக்கத்தால் பகைமையும் விரோதமும் தான் வளருமே தவிர, நன்மையோ, தக்வாவோ வளரப்போவதில்லை;

தப்லீக்கின் தலைவர்களில் இன்னின்னார் இன்னின்ன நூற்களில் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை திட்டி எழுதியிருக்கின்றார்கள் ஆகவே, இந்த இயக்கத்தில் அஹ்லுஸ் ஸுன்னத் வல்ஜமாஅத் மக்கள் சேரக்கூடாது என்று இடித்துக் கூறினார்கள்;

எதிரும் புதிருமான இருவரின் உரையும் மக்கள் மத்தியில் கலக்கத்தை ஏற்படுத்தியது ; இந்த சூழலில் இருதரப்பாரும் இதே பள்ளிவாசலில்15 ,10 ,61ல் ஊர்மக்கள் முன்னிலையில் விவாதம் செய்து முடிவு செய்யலாம் என்று ஏகமனதாக முடிவு செய்து கலைந்தனர்;

இதற்கிடையில் தப்லீக் ஜமாஅத்தினர் 6,10,61ல் மேற்படி ஊர் பள்ளிவாசல் நிருவாகிகளை தன்னிச்சையாக சந்தித்து , எங்களிடம் உலமாக்களோ, கிதாபுகளோ இல்லை ஆகையால், 15ந்திகதி கூட்டத்தை நிறுத்திவிடுங்கள் ; நாங்கள் 05- 11- 61ல் கொழும்பில் மநாட்டை நடத்திக் கொள்கின்றோம் ;என்று கூறிவிட்டுச் சென்று விட்டனர்;

இந்த விடயத்தை மேற்படி பள்ளிவாசல் நிருவாகத்தினர் கண்ணியத்திற்குரிய ஷைகுனா ஸூபி ஹளறத் நாயகம் அவர்களுக்கு தபால் மூலம் அறிவித்தனர்,

கூட்டாக ஒப்பந்தம் செய்த தப்லீக் மேலிடம் ஸூபி ஹளறத் நாயகத்திடம ஆலோசிக்காமல் தன்னிச்சையாக முடிவெடுத்து இருப்பதையறிந்து இருகார்களில் தங்கள் முரீதுகள் சகிதம் 17- 10-61 அன்று பள்ளிவாசல் நிருவாகிகளைச் சந்தித்து " உண்மை நிலையை விளக்கி தப்லீக்கார்கள் விவாதத்தைத் தவிர்க்க எடுத்த ஏமாற்று வேலையே இதுவாகும் என்று கூறினார்கள்;

தப்லீக் மேலிடத்தின் இந்த ஏமாற்றும் நாடகத்தைப் புரிந்து கொண்ட கெட்டகும்பற பள்ளிவாசல் நிருவாகம் கண்டி மாநகரின் தப்லீக் ஜமாஅத் நிருவாகிகளை அழைத்து 19- 10 -61 அன்று பக்கத்து ஊரான வெலம்பொடை ஜும்ஆப் பள்ளிவாசலில் இருதரப்பாரும் கூடி விவாதம் நடத்தவே வேண்டும் என்று முடிவு செய்தனர்;

விவாத ஒப்பந்தத்தை தப்லீக் ஜமாஅத்தாரின் வேண்டுகோளின்படி கொழும்பு சம்மாங்கோடு பள்ளிவாசலில் 22-10-61 மூன்று மணிக்கு ஒன்று கூடி இருதரப்பாரும் விவாத ஒப்பந்தம் செய்வது என்றும், அதில் ஸூபி ஹளறத்தவர்களும், அகில இலங்கை தப்லீக் அமீரும் கையெழுத்திட வேண்டும் என்றும் முடிவு செய்யப்பட்டது ;

முடிவு செய்யப்பட்டபடி, 22-10-61அன்று 3மணிக்கு கொழும்பு சம்மாங்கோடு பள்ளிவாசலுக்கு சங்கைக்குரிய ஸூபி ஹளறத் நாயகமவர்களும், கண்டி தப்லீக் நிருவாகிகளும் சமூகமளித்திருந்தனர்;

அந்த கூட்டத்திற்கு கொழும்பு தப்லீக் ஜமாஅத்தினர்களோ, அகில இலங்கை தப்லீக் அமீர் அவர்களோ வருகை தரவில்லை; அகில இலங்கை தப்லீக் அமீர் எங்கே? என்று கேட்டதற்கு , வருகின்றார் என்று கூறினார்கள் ;

வருகின்றார் என்ற சொல்லை நம்பி கூட்டம் ஆரம்பமாகியும் கொழும்பு தப்லீக் நிருவாகிகளோ, அகில இலங்கை தப்லீக் அமீர் அவர்களோ வரவில்லை, அகில இலங்கை அமீர் எங்கே ? என்று மீண்டும் கேட்டதற்கு , அவர் மட்டக்களப்பு சென்றுவிட்டார், அவர்சார்பாக நாங்கள் இருக்கின்றோம் என்று கூறியவர்கள் பல்டியடித்து நாங்கள் 5ந்திகதி மாநாடு நடத்துகின்றோம், என்று கூறி

கதையளந்து இறுதியாக சம்மாங்கோடு பள்ளிவாசல் பேஷ் இமாமைத் தூண்டி கூட்டத்தை கலைக்க வைத்தார்கள்;

கூட்டத்திற்கு வந்த தப்லீக்காரர்கள் இதை சாட்டாக வைத்து ஒவ்வொருவரும் ஒவ்வொரு பக்கமாக நழுவிச் சென்றார்கள்; எந்தத் தீர்மானமுமில்லாமல் கூட்டம் ஏமாற்றத்தோடு கலைந்தது;

தப்லீக் ஜமாஅத்தினர் விவாதத்தை ஒத்திப் போடும் தீர்மானத்தை தன்னிச்சையாகவே எடுத்தனர்; 05-11-61ல் கொள்ளுப்பிட்டி ஜும்மா பள்ளிவாசலில் மாநாடு நடத்துவது பற்றி சங்கைக்குரிய ஸூபி ஹளறத் நாயகமவர்களுக்கு இறுதி வரை தெரியப்படுத்தவே இல்லை;

தப்லீக் மேலிடம் திட்டமிட்ட மேற்படி 5ந் திகதி மாநாடு விவாத மாநடல்ல! தப்லீக் மாநாடாகும்;அந்த மாநாட்டு பிரசுரம் அகில இலங்கை தப்லீக் ஜமாஅத்து மாநாடு நடத்துவது பற்றி தீர்மானிப்பதற்காக உலமாக்களையும் , அமீர்களையும் கொண்ட ஆலோசனைக் கூட்டம் என்று தான் எழுதப்பட்டிருந்தது;

தப்லீக் மாநாடு நடத்துவது பற்றிய ஆலோசனைக் கூட்டத்திற்கு கண்ணியத்திற்குரிய ஸூபி ஹளறத் நாயகமவர்கள் அழையா விருந்தாளியாக எப்படிக் கலந்து கொள்வது?

தப்லீக் ஜமாஅத்தினர்கள் ஒருதலைப் பட்சமாக ஏற்பாடு செய்திருந்த 05-11-61ந்திகதிய தப்லீக் மாநாட்டிற்கு இலங்கையில் அப்போதிருந்த கோட்டார், றிபாஈ, அரூஷியத்துல் காதிரியா ஷைகுமார்களும், ஷாதுலியா தரீக்காவின் கலீபாக்களும், மற்றும் அதிகமான தங்கள் மார்களும், இன்னும் நாட்டில் பிரபலமான உஸ்தாதுமார்கள்,

உலமாக்கள் உள்ளிட்ட பலரும் கலந்து கொண்டு , அவர்களாகவே கேள்விகேட்டு, தப்லீக் நல்ல இயக்கம் அதில் அனைவரும் சேரலாம் என்று ஏகமனதாக தீர்மானித்தனர்;

ஒருதலைப்பட்சமானவர்கள் கூடி வாதியில்லாமல் தீர்மானமெடுத்து அறிவிப்பது விவாதத்தின் தீர்வாகுமா? விவாதத்திற்கு அழைத்தவர்களும்,அதற்கான அவசியத்தை வலியுறுத்து கடின முயற்சி செய்தவர்களும் சங்கைக்குரிய ஸூபி ஹளறத் நாயகமவர்களாகும், விவாதத்திற்குப் பயந்து ஓடி ஒழிந்தவர்கள் தப்லீக் ஜமாஅத்தினர்கள் என்பது வெளிப்படையான உண்மை! இந்த இலட்சணத்தில் சங்கைக்குரிய ஸூபி ஹளறத் நாயகமவர்கள் 5ந்திகதி விவாதத்தில் கலந்து கொள்ளாமல் ஒழிந்து கொண்டார் என்பது கபடத்தனமான கூற்றில்லையா?

கண்டி கெலிஓயா கெட்டகும்பற பள்ளிவாசலில் நடந்தது தொடக்கம் 05-11-61 மாநாடு வரை நடந்த விடயங்களை "மக்களை மடையனாக்கும் 5ந்திகதி தப்லீஹ் மாநாடு!" என்றும், அருத்தமில்லாத 5ம்திகதி மாநாடும் பொருத்தமில்லாத பேருரைகளும் " என்றும் தலைப்பிட்டு பல்லாயிரம் நோட்டீஸுகள் அடித்து விநியோகித்து உண்மையை உலகறியச் செய்தார்கள் நெஞ்சுமிக்க ஷைய்குனா ஸூபி ஹளறத் நாயகமவர்கள்;

ஷைய்குனா ஸூபி ஹளறத் நாயகமவர்கள் 1954ம் ஆண்டு முதல் 1961ஆண்டுகளுக்குள் ,

1-தப்லீக் ஜமாஅத்தின் வஹாபிஸத்தின் விஷக்கிருமிகள்",

இல்யாஸின் தலைக்கு கொடிய வேதனை

(இந்தியாவிலுள்ள பிரபலமான 45 முப்தி களின் ஃபத்வா)

புலியைக் கண்டு ஓட்டம்

(மௌலானா அப்துல் அலீம் ஸித்தீக்கி அவர்களின் ஃபத்வா)

உள்ளிட்ட நூற்களையும் , மற்றும் பல சிறு பிரசுரங்களையும் தக்க ஆதாரங்களோடு பல்லாயிரம் நூற்களை பிரசுரித்து விநியோகித்தார்கள்,

மேற்கண்ட நூற்களில் குறிப்பிடப்பட்ட எந்த ஒரு குற்றச்சாட்டுக்களையும் மறுக்கத் திராணியற்றுப் போன அலங்கார ஆலிம்களும், ஷைய்குமார்களும் ,உலமாக்களும் தப்லீக் ஜமாஅத்தைப் பாதுகாக்க செம்பு தூக்கினார்கள்;

தப்லீக் ஜமாஅத்தின் தலைவர்கள் உயிரிலும் மேலான றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களைப்பற்றி தரங்கெட்ட வார்த்தைகளால் திட்டி எழுதியதை சுட்டிக்காட்டியும் கூட அவர்களின் குருதியில் உரோசம் துளிர்க்கவில்லை;

தப்லீக் ஜமாஅத்திற்கு வக்காலத் வாங்கி நின்ற வெலிகம ஸக்கரியா ஆலிம் வஹாபிகளுக்கு எதிராக புத்தகம் போட்டவர்

புத்தளம் மஹ்மூத் ஆலிம் "வஹாபிய மதக் கண்டனம்"(1956) என்ற நூலுக்கு மதிப்புரை வழங்கி வஹாபியை கடுமையாகப் சாடியவர், தவிர, 05-11-61அன்று தப்லீக் ஜமாஅத்திற்கு செம்புத்தூக்க கொழும்பு கொள்ளுப்பிட்டி ஜும்ஆப் பள்ளி வாசலில் ஒன்று கூடிய ஷைய்குமார்கள் , உலமாக்கள் உள்ளிட்ட அனைவருமே வஹாபிஸத்தை முழுமையாக எதிர்த்தவர்கள் தான்

தேவ்பந்தின் நாயகர் இஸ்மாயீல் திஹ்லவி வஹாபிஸ மதத்தைச் சார்ந்தவர் என்று அல்லாமா மாப்பிள்ளை லெப்பை ஆலிம் றஹ்மத்துள்ளாஹி அலைஹி அவர்கள் தங்களுடைய " மஙானி" யில் அழுத்தம் திருத்தமாகக் கூறியிருப்பதைப் பார்த்த பின்பும் கூட அவர்களின் வாரிசுகளும் , உலமாக்களும் மூரீதீன்களும் தப்லீக் ஜமாஅத்திற்கு ஆதரவு கொடுத்தர்களென்றால்,

இவர்கள் தப்லீக்கை நல்லதென்று தீர்மானித்தார்களா? அல்லது தப்லீக் கிடைக்கும் சுகபோகம் இனிமையானது என்று முடிவு செய்தார்களா?

தப்லீக் ஜமாஅத் இயக்கம் டில்லியிலிருந்து வந்தது , அதன் நிறுவனரோ, அந்த இயக்கத்தின் முக்கியஸ்த்தர்களோ இவர்களுக்கு எந்த விதத்திலும் அறிமுகமில்லாதவர்கள் , வஹாபிஸ கொள்கைகளை எதிர்க்கும் இவர்கள் தப்லீக் ஜமாஅத் வஹாபிஸத்தை பரப்ப முகமூடி அணிந்து வந்துள்ளது என்று உரத்துக் கூறிய போது ஏன் இவர்களின் செவிப்பறையைத் தொடவில்லை;?

சங்கைக்குரிய ஷைய்கு நாயகமவர்கள் மார்க்கத்திற்காகவும், றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் மஹப்பத்திற்காகவுமே தானே போராடினார்கள், ஏன் அந்த போராட்டம் இந்த ஷைய்குமார்களுக்கும், உலமாக்களும்கும் கசந்தது?

அன்று ஷைய்குனா ஸூபி ஹளறத் நாயகமவர்கள் கூறிய படி தப்லீக் ஜமாஅத் இலங்கையில் வழிகெட்ட வஹாபிஸத்தை ஒவ்வொரு பள்ளிவாசல்களிலும், வீடுகளிலும் இப்போது அரங்கேற்ற வில்லையா? தப்லீக்கிற்கு செம்பு தூக்கிய ஷைய்குமார்களின் தரீக்கிற்குள் புகுந்து குழப்பவில்லையா?

அவர்களின் முரீதுகளை அள்ளிச் சென்று அமீர்களாக்கி தரீக்கை அழிக்கும் கோடாலிக்காம்புகளாக மாற்ற வில்லையா?

இப்போது தவ்ஹீத் ஜமாஅத்தினர்கள் என்று பிரபலமாக இருப்போர் அனைவருமே தப்லீக் ஜமாஅத்திலிருந்து வார்த்தெடுக்கப்பட்டு வளர்ந்து வந்தவர்களில்லையா?

அற்ப ஆதரவுக்கும், சுகத்திற்கும் ஆதரவு கொடுத்தவர்களின் முட்டாள்தனத்தைப் பற்றி அவர்களின் தரீக்கில் எஞ்சயிருப்பவர்களின் மனக் குமுறல்கள் இப்போதும் காதில் ஒலித்துக் கொண்டே இருக்கின்றது!

ஆயினும் என்ன பயன் ? உண்மை இப்படியிருக்க அகில இலங்கை ஜம்இய்யத்துல் உலமா சபை கப்ஸா விடுகின்றது!

தொடரும்...

Part -12

தப்லீக் ஜமாஅத்தினரை எப்படியாவது பகிரங்க விவாதத்திற்குக் கொண்டுவர வேண்டும் என்பதில் ஷைகுனா ஸூபி ஹளறத் நாயகம் கத்தஸல்லாஹு ஸிர்ரஹுல் அஸீஸ் அவர்கள் முனைப்பும் காட்டிக்கொண்டே இருந்தார்கள்; அன்னாரினதும் அவர்களின் முரீதீன்களினதும் தொடர்ச்சியான வற்புறுத்தினால் வேண்டா வெறுப்பாக ஒருவாறு விவாதத்திற்கு தப்லீக் ஜமாஅத்தினர் ஒப்புக்கொண்டனர்;

இதன்படி, விவாத ஒப்பந்தத்தில் கைச்சாத்திடும் ஒரு மாநாடு மட்டக்களப்பு டவுண் பள்ளிவாசலில்20:10: 1963 2மணிக்கு ஏற்பாடாகியிருந்தது;

ஒப்பந்த மாநாட்டுக்கு காத்தான்குடி பட்டினசபைத் தலைவர் ஜனாப், எம்.ஐ.எம். காசீம் ஹாஜியார் தலைமை வகித்தார்;

## வாதிதரப்பில்:

.

1) வாதி: ஷைய்கு அப்துல் காதிர் ஆலிம் ஸூபி ஹளறத் ,
2) ஹாபீஸ் வீ .எம் .கே .முஹம்மது உமர் ஆலிம் (கண்ணாடி ஆலிம் காயல்பட்டினம்)
3) மௌலவி மீராசாஹிபு ஆலிம் .(ஏறாவூர்)
4) மௌலவி முஸ்தபா ஆலிம் (காத்தான்குடி பாலமுனை)
5) மௌலவி ஹனீபா ஆலிம் (ஏறாவூர்)
6) அல்ஹாஜ் ,ஜெய்னுலாப்தீன் (வர்த்தகர் ,காத்தான்குடி)

## பிரதிவாதி தரப்பில்,

1) ஜனாப், எம், ரீ, எம்.ஹனீபா ஹாஜியார், ( அமீர், அகில இலங்கை தப்லீக் ஜமாஅத்)
2) அல்ஹாபிழ், ரீ.எம்.கே. செய்யிதுஅஹ்மத் ((முத்து வாப்பா ஆலிம், காயல்பட்டினம்)
3) மௌலவி, ஆர் .என். ஸைபுத்தீன் சாஹிபு ( கொழும்பு)
4) அல்ஹாபிழ் , நஹ்வி, என்.எம்.கே.செய்யிது முஹம்மது நூஹ் ஆலிம் ( காயல்பட்டினம்)
5) மௌலவி ,முஹம்மது பஹ்ஜி ( அட்டாளைச்சேனை)
6) அல்ஹாபிழ், ஏ.கே.எஸ். செய்யித் அஹ்மத் (காயல்பட்டினம்.)

மேற்கண்ட 12 நபர்கள் மட்டுமே பேசவேண்டும், ஏனையோர் பேசக்கூடாது என்று கூட்டத்தில் முடிவு செய்யப்பட்டது;

விவாத ஒப்பந்த பிரதியை ஷைய்குனா ஸூபி ஹளறத் நாயகமவர்கள் ஏலவே தயாரித்து வைத்திருந்ததை சபையில் வாசித்துக் காட்டடப்பட்டது;

அப்பத்திரம் பின்வருமாறு அமைந்திருந்தது; பங்கு பற்றுவோர் :-

இம்மாநாட்டில் பங்குபற்றுவோர் அனைவரும் ஸுன்னத் வல்ஜமாஅத் கொள்கை யுடையோர்களாவார்கள்.

வாதி:- ஷைய்கு அப்துல் காதிர் சூபி அவர்களும் , அவர்களைச் சேர்ந்தோரும்,

வாதியின் வாதம் :-

தப்லீக் ஜமாஅத் ஸுன்னத் வல்ஜமாஅத்திற்கு விரோதமான வஹாபிக் கொள்கையுடையவர்களால் உருவாக்கப்பட்டது; அது வஹாபிக் கொள்கையைப் பரப்பும் நோக்கத்திற்காகவே உண்டாக்கப்பட்டது; இது விசயம் அவர்களின் நூல்களிலிருந்தே தெரிய வருகின்றது ; ஆகையால், நம் ஸுன்னத் வல்ஜமாஅத்து மக்கள்மக்கள் அதில் சேரக்கூடாது !

பிரதிவாதி:-

அகில இலங்கை தப்லீக் ஜமாஅத் அமீர் ஹனீபா ஹாஜியார் அவர்களும், அவர்களைச் சார்ந்தவர்களும்,

பிரதிவாதியின் வாதம் :-

தப்லீக் ஜமாஅத் வஹாபிகளால் உண்டாக்கப்பட்டதல்ல; வஹாபியக் கொள்கையைப் பரப்பும் நோக்கத்திற்காக உண்டாக்கப்பட்டதுமில்லை; ஆகையால், நம் ஸுன்னத் வல்ஜமாஅத் மக்கள் அதில் சேரலாம்,

## வாதிப்பவர்கள்:-

வாதி தரப்பில் 3 நபர்களும், பிரதிவாதி தரப்பில் 3 நபர்களும் ஆக மொத்தம் 6 நபரில் வாதி, பிரதிவாதியும் ஒருவராகக் கலந்து கொள்ளலாம்;

## இது தொடர்பாகக் காட்டக்கூடிய நூற்கள் :-

தப்லீக்ஜமாஅத்தை உண்டு பண்ணியவர்கள் வஹ்ஹாபிகள் ; அல்லது வஹ்ஹாபிகளில்லை; என்பதற்கு குர்ஆன், ஹதீது, ஸுன்னத் வல்ஜமாஅத் உலமாக்களால் எழுதப்பட்ட நூல்களிலிருந்தே ஆதாரம் காட்ட வேண்டும்.

## நீதிபதிகள்:-

வாதிதரப்பில் 2- நபர்களும், பிரதிவாதி தரப்பில் 2 -நபர்களும் தெரிந்து எடுக்க வேண்டும்; இந்த நால்வர்களும் மற்றமொருவரைத் தெரிந்து எடுக்க வேண்டும்; இந்த 5 நபர்களும் அரபி, உருது பாஷைகளை நன்கு தெரிந்தவர்களாக இருக்க வேண்டும்.

## மாநாட்டின் இடமும் காலமும்:-

இம்மாநாடு ..........ல்......ல் நடத்துவெதென்று முடிவு செய்து இதில் கைச்சாத்திடுகின்றோம்..

.................

ஒப்பம்

சங்கைக்குரிய ஷைய்குனா ஸூபி ஹளறத் நாயகமவர்கள் தயாரித்த விவாத ஒப்பந்த நகல் சபையில் வாசித்துக் காட்டப்பட்டு பிரதிவாதி தரப்பினரிடம் கருத்துக் கேட்கப்பட்டது ;

"தப்லீக் ஜமாஅத்தைப்பற்றிய விவாத மாநாடு" என்ற தலைப்பை மாற்றி "தப்லீக் இயக்கத்தைப் பற்றியும், அதை ஆட்சேபிக்கின்ற சூபி சாஹிபுடைய இயக்கத்தையும் பற்றிய விவாத மாநாடு" என்று தலைப்பிட வேண்டும் என்று கூறினார்கள்; இதனை ஆட்சேபித்த வாதி தரப்பினர் ,

சூபி ஹளறத்தவர்களுக்கு ஒரு தனி இயக்கம் கிடையாது! அவர்களுடைய கொள்கையைப் பற்றியோ , தரீக்கைப் பற்றியோ இதுவரை எவ்வித பிரச்சினையும் எழவில்லை; எதிர்காலத்தில் ஏதும் பிரச்சினைகள் இருப்பின், அதுபற்றி தனியாக ஒரு மாநாடு வைத்து ஆராயலாம் ; இதோடு அதைச் சேர்க்கக்கூடாது;

இப்போதுள்ள பிரச்சினை தப்லீக் ஜமாஅத்தைப்பற்றியது தான் , ஆகையால், " தப்லீக் ஜமாஅத் பற்றிய விவாத மாநாடு", என்று தான் தலைப்பிட வேண்டும் " என்று கூறினார்கள்; இருதரப்பாரும் தங்கள் தங்கள் வாதத்தை விட்டுக்கொடுக்காமல் ஒண்ணரை மணி நேரத்தை செலவிட்டார்கள்;

இறுதியாக, தப்லீக் ஜமாஅத் பற்றிய விவாத மாநாடு! என்று தான் தலைப்பிட வேண்டும் என்று அவைத்தலைவர் காசீம் ஹாஜியார் கூறினார், அதனை அனைவரும் ஏற்று முடிவு செய்யப்பட்டது. அஸர் தொழுகைக்குப் பின் மீண்டும் கூட்டம் கூடியது, இம்மாநாட்டில் கலந்து கொள்பவர்கள் அனைவரும் ஸுன்னத் வல் ஜமாஅத் கொள்கையுடையோராக இருக்க வேண்டும்", என்று வாதியின் கூற்றை பிரதிவாதி தரப்பினர் ஆட்சேபித்து",இவ்விவாதத்தில் கலந்து

கொள்பவர்கள் ஸுன்னத் வல்ஜமாஅத்தைச் சேர்ந்தவர்களாக இருக்க வேண்டும்" என்று திருத்தியமைக்க வேண்டும் என்றனர், அதனை வாதி தரப்பினர் ஏற்றுக் கொண்டார்கள்;

"தப்லீக் ஜமாஅத் ஸுன்னத் வல்ஜமாஅத் கொள்கைகைக்கு விரோதமான வஹ்ஹாபிக் கொள்கையை உடையவர்களால் , இது விசயம் அவர்களின் நூல்களிலிருந்து விளங்க வருகின்றது; ஆகையால், நம் ஸுன்னத் வல்ஜமாஅத் மக்கள் அதில் சேரலாகாது" என்று வாதியவர்கள் குறிப்பிட்டிருந்ததை பிரதிவாதி தரப்பினர் ஆட்சேபித்து

பின் வருமாறு கூறினார்கள்;

தப்லீக் ஜமாஅத் ஸுன்னத் வல்ஜமாஅத் கொள்கையுடையவர்களால் ஊக்குவிக்கப்பட்டது; அது பாவா ஆதம் அலைஹிஸ்ஸலாம் அவர்களால் ஆரம்பிக்கப்பட்டது என்றும், இப்பணியை ஊக்குவித்தவர்கள் ஸுன்னத் வல்ஜமாஅத்துக் கொள்கையுடைய வர்கள் தவிர, வஹ்ஹாபிகளல்ல! " என்று வாதம் செய்தனர்;

இவர்களின் இந்த வாதத்தை வாதி தரப்பினர் பின்வருமாறு மறுதழித்தனர்;

தப்லீக் ஜமாஅத் என்பது இன்றைக்கு 12,14 வருடங்களுக்கு முன் அதன் பெயரைக் கூட கேள்விப்பட்டதுண்டா? தப்லீக் ஜமாஅத் என்று ஆறு திட்டங்கள் வகுத்து புதிதாக தோண்றிய இந்த இயக்கத்தைப் பற்றி பரிசீலனை செய்வதற்காகத் தானே இங்கு கூடியிருக்கின்றோம்,

இந்த இயக்கம் டில்லியிலிருந்து வந்ததில்லையா? மௌலவி இல்யாஸ் இதனை உருவாக்க வில்லையா? என்று கேட்டனர்;

இதற்கு பிரதி வாதி தரப்பினர் எடக்கு முடிக்காக இவ்வாறு வாதம் செய்தனர்,

டில்லி தப்லீக்கைப் பற்றிப் பேசுவதாக இருந்தால் டில்லியிலேயே தான் பேச வேண்டும், இலங்கைத் தப்லீக்கில் வஹ்ஹாபியத் இருக்கின்றதா? என்று கேட்டனர்;

வாதி தரப்பினர்:

இலங்கைத் தப்லீக் டில்லி தப்லீக் கைச் சேர்ந்ததில்லை என்றா சொல்கின்றீர்கள்?

பிரதி வாதிகள்:

இலங்கைத் தப்லீக் டில்லி தப்லீக்கைச் சேர்ந்தது தான்; அதன் ஒரு கிளை தான்; இலங்கைத் தப்லீக்கில் வஹ்ஹாபியத் இருக்கிறதா? இல்லையே! ஒருசரக்கின் ஸாம்பிளைப் பார்த்து நல்லதென்றால், முழு சரக்கையும் நல்லதென்று சொல்ல வேண்டியதுதானே! என்றனர்,

வாதி:-

சாம்பிளைப்பார்த்து மொத்த சரக்கையும் நல்லதென்று எப்படிக் கூற முடியும்? சாம்பிளை சுத்தமாகக் காட்டவும், சரக்கு அவ்வாறில்லாமலிருக்கவும் செய்யலாம்,

ஆகையால், இலங்கைத் தப்லீக் டில்லி தப்லீக்கின் கிளைதான் என்றால் , டில்லி தப்லீக்கிலுள்ள கெடுதி இதிலும் வரத்தான் செய்யும் என்றார்.

இடையில் குறிக்கிட்ட தலைவர் காசீம் ஹாஜியார் ,

"கின்ஸீர் (பன்றிக்) கொழுப்பு சேர்க்கப்பட் பிஸ்க்கட் சீமை (லண்டனி)லிருந்து இலங்கைக்கு வந்தால் அது நல்லதாகி விடுமா? அதைத் தின்னலாமா? என்றார்.

இருதரப்பாரும் விட்டுக் கொடுக்காமல் விவாதித்து கொண்டிருந்ததை அவதானித்த பார்வையாளர்கள் நிதானமிழந்து கூச்சல் போடத்தொடங்கினர்:

இறுதியாக பிரதி வாதி தரப்பினர் இவ்வாறு திருவாய் மலர்ந்து செப்பினர்;

"தப்லீக் ஜமாஅத்தை உண்டு பண்ணியவர்கள் வஹ்ஹாபிகள் தான் நாங்கள் அவரைத்தான் நூற்றுக்கு நூறு பின்பற்றுகின்றோம் நீங்கள் எங்களை என்ன சொல்கிறீர்கள் ? என்று வாதியைப் பார்த்துக் கேட்டனர்;

வாதி :- நீங்களே இல்யாஸ் வஹாபி என்றும், அவரையே நீங்கள் நூற்றுக்கு நூறு பின்பற்றுவதாகவும் சொல்லும் போது, உங்களை இன்னார் தான் என்று நீங்களே முடிவு செய்து கொண்டீர்கள்! நான் உங்களைப் பற்றி என்ன சொல்ல வேண்டும்? என்றார்.

பிரதிவாதி தரப்பினர்:- எங்களைப் பற்றி நீங்கள் சொன்னால் என்ன? ஏன் பயப்படுகின்றீர்கள்? என்று ஆவேசத்தோடு ஒருவர் பின் ஒருவராக சுமார் அரை மணி நேரம் வரையும் கேட்டுக்கொண்டேயிருந்தனர்;

சூபி ஹளறத்தவர்கள் ஆத்திரப்பட்டு அவர்களின் வாயிலிருந்து நீங்களும் வஹாபிகள் தான் என்று கூறினால் அதை வைத்து கூட்டத்தை குழப்புவது தப்லீக் கார்களின் திட்டமாக இருந்தது !, இதை நன்கு புரிந்து கொண்ட சூபி ஹளறத் அவர்கள் நிதானமாக முன்கூறியதையே கூறிக்கொண்டிருந்தார்கள்;

இறுதியாக, நான் காழி (நீதிபதி)அல்ல! காழி இருப்பாராயின், நீங்களே ஏற்றுக் கொண்ட படியால், அதற்கு என்ன ஹுக்மு என்று அவர் தீர்ப்புக் கூறுவார் , நான் ஒன்றும் சொல்லத் தேவையில்லை" என்று கூறினார்கள். இத்தோடு மணி 6 ஆகிவிட்டது! இதன் பின், தலைவர் எழுந்துபின் வருமாறு கூறினார்.

"சூபி ஹளறத்தவர்களும் வஹ்ஹாபியத் வந்து விடக் கூடாது என்று தான் பயப்படுகின்றார்கள் ; நான் பார்த்த மட்டில் இலங்கைத் தப்லீக்கில் வஹ்ஹாபியத் இல்லை; ஆகையால், இப்போது இலங்கையில் நடக்கக்கூடிய தப்லீக் நடக்கட்டும்" என்று கூறி சபையைக் கலைக்கின்றேன் என்றுகூறி ஃபாத்திஹா ஓதி சபையைக் கலைத்தார் .

மட்டக்களப்பு ஒப்பந்த மாநாட்டில் நடந்த விடயம் இதுதான் !

இதற்கு தலைகால் வைத்து அகில இலங்கை ஜம்இய்யத்துல் உலமா சபை கதையளக்கின்றது, அ.இ.உ.சபையின் அறிக்கைக்கு தனியாக நமது பதில் வரும் இன்ஷா அல்லாஹ்!

மட்டக்களப்பில் நடந்தது விவாத மாநடல்ல! விவாத ஒப்பந்த மாநாடாகும்; இதை தப்லீக் ஜமாஅத்தினரும், மாநாட்டின் தலைவரும் நோக்கத்தை மறந்து செயல்பட்டுள்ளனர்; வலிந்து இழுத்து வரப்பட்ட தப்லீக் ஜமாஅத்தினர் எப்படியாவது விவாத ஒப்பந்தத்தில் கைச்சாத்திடாமல் கூட்டத்தை குழப்பிவிட்டு நழுவிப் செல்வதிலேயே கண்ணும் கருத்துமாக இருந்தனர்;

இருதரப்பாரையும் ஒப்பந்தத்தில் கைச்சாத்திட வைக்க வேண்டிய தலைவர் அவர்கள் திடீரென காழியாகி தன் கடமையைச் செய்யாமல்

விவாதம் நிகழாமலேயே தீர்ப்புக்கூறி விட்டு கூட்டத்தைக் கலைத்தார்;

தப்லீக் ஜமாஅத்தினர் விவாதத்திலிருந்து நழுவி ஓடினாலும் கொள்கையில் உறுதியும், மக்கள் வழிகெட்டுச் செல்லக்கூடாது என்பதில் அதிக அக்கறையும் கொண்ட துணிவுமிக்க ஞான சூரியனான ஸூபி ஹளறத்தவர்கள் தப்லீக் ஜமாஅத்தினரை விரட்டிக் கொண்டே இருந்தார்கள்

தொடரும்...

## Part -13

தப்லீக் ஜமாஅத்தின ர்களை எவ்வாறாவது பகிரங்க விவாத மேடைக்குக் கொண்டு வந்து தப்லீக்கின் முகமூடியைக் கிழித்து அதன் வஹாபிஸத்தின் அவலட்சணமான அகோரத்தை வெளிச்சம் போட்டுக் காட்ட வேண்டும் என்பதில் ஷைகுனா ஸூபி ஹளறத் நாயகம் கத்தஸல்லாஹு ஸிர்ரஹுல் அஸீஸ் அவர்கள் அதி தீவிரம் காட்டிக் கொண்டிருந்தார்கள்;

ஆரம்பத்தில் கண்டி , கெலிஓயா , கெட்டகும்பறஜும்ஆப் பள்ளி வாசலில் 15-- 10 -- 1965ல் விவாத மாநாட்டை நடாத்துவதற்கு முயன்றார்கள்; தப்லீக்கார்களின் தில்லுமுல்லால் அது கைநழுவியது;

இரண்டாவதாக மட்டக்களப்பு டவுண் ஜும்ஆப்பள்ளிவாசலில் 29 -- 10 -- 1962ல் விவாத ஒப்பந்த மாநாடு கூடி விவாத ஒப்பந்தத்தில் கைச்சாத்திடாமலே நேரத்தைக் கடத்தி விட்டு கூட்டத்தைக் கலைத்தார்கள்;

மூன்றாவதாக மாத்தறை கோட்டக்கொடை ஜும்ஆப் பள்ளிவாசலில் ஒரு விவாதம் 8 -- 8 -- 1965ல் நடந்தது!

இந்த விவாதத்தை நடாத்துவதற்கு முழு ஏற்பாட்டையும் மாத்தறையைப் பிறப்பிடமாகவும், கொழும்பை வசிப்பிடமாகவும் கொண்ட ஷைகுனா ஸூபி ஹளறத் நாயகமவர்களின் முரீதுகளான சில மாணிக்க வர்த்தகர்களாகும்;

இவ்விவாத மாநாட்டிற்கு வெலிகம ஜமாலியா, செய்யித் யாஸீன் மௌலானா, இதே ஊரைச் சேர்ந்த ஜாலியா செய்யித் எஹ்யா மௌலானா உள்ளிட்டோர் தப்லீக்ஜமாஅத்தின் சார்பாகக் கலந்து கொள்ள இருப்பதாக கேள்விப்பட்ட செய்தி ஷைகுனா ஸூபி ஹளறத் நாயகமவர்களுக்கு மிக்க வேதனையை ஏற்படுத்தியது;

தங்களுடைய முரீதீன்கள் சகிதம் வெலிகம சென்ற ஷைகு நாயகம் ஸூபிஹளறத்தவர்கள் மேற்படி இருவரையும் சந்தித்து " தப்லீக்கின் உண்மை முகத்தை விளக்கிக் காட்டியதோடு , அதில் நீங்கள் கலந்து கொள்வது உங்களுக்குத் தகுதியில்லை;

உங்கள் பாட்டனாராகிய உயிரினும் மேலான றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களைப் பற்றி தாறுமாறாக ஏசிப்பேசியவர்களை நல்லவர்கள் என்று உங்கள் வாயால் நீங்களே ஒப்புதல் கொடுக்கலாமா? என்று கூறியதும்;

தப்லீக் விவாத மாநாட்டில் கலந்து கொள்வதில்லை என்று கூறிவிட்டு பின்னர் அவர்கள் கலந்து கொண்டது ஷைகுனா அவர்களுக்கு பெருத்த ஏமாற்றத்தையும், அதிர்ச்சியையும், கவலையையும் கொடுத்தது!

இந்த விவாத மாநாடு திட்டமிட்ட படி, 8 -- 8 --'65 அன்று 10 மணியளவில் அல்ஹாஜ் M.M.M ஸியாஉத்தீன் ஆலிம் ,J.P. தலைமையில் மாத்தறை கோட்டக்கொட ஜும்ஆப் பள்ளி வாசலில் ஆரம்பமானது!

## வாதி தரப்பில்,

1) அல்ஹாஜ் ஷைய்கு அப்துல் காதிர் ஸூபி ,நூரி,
2) மௌலவி, பாஸில், A.L.முஹம்மது கௌஸ் பாகவி.
3) மௌலவி , S.L.M. ஹனீபா காஸிமி
4) K.M.மௌலவி, ஜமால் முஹம்மது நூரி.
5) மௌலவி, அல்ஹாஜ் முஹம்மது நயீம்
6) மௌலவி P.M.அப்துல் கரீம் ஆலிம் .

## பிரதி வாதி தரப்பில் ...

1) மௌலவி, ஜாலியா, செய்யித் யாஸீன் மௌலானா,
2) மௌலவி ஜமாலியா செய்யித் எஹ்யா மௌலானா
3) மௌலவி, அல்ஹாஜ், H.L. அப்துல் ஹமீது ஆலிம் பஜ்ஜி ( அதிபர், பஹ்ஜத்துல் இப்றாஹீமியா, காலி)
4) மௌலவி , A.S. ஷம்சுத்தீன் ( அதிபர், நபூரியா, மஹறகம)
5) மௌலவி, ஹாபிழ், T.M.K. செய்யித் அஹ்மத் (முத்துவாப்பாஆலிம்)
6) மௌலவி , M.T. அப்துஸ்ஸமத்,பஜ்ஜி (அதிபர், தீனியா மத்ரஸா , பாணந்துறை)

7) மௌலவி, அபுல் ஹஸன் (பேஷ் இமாம் சம்மாங்கோடு பள்ளி, கொழும்பு)
8) மௌலவி, A.முஹம்மது பஹ்ஜி
9) மௌலவி, A. அப்துர் ரஹ்மான் பஹ்ஜி.
10) மௌலவி S.M.I நிஸார்.
11) மௌலவி, A.L. முஹம்மது காஸீம்.

## நீதிபதிகளாக ,

மௌலவி,H.L. அப்துல் ஹமீது பஜ்ஜி

மௌலவி, A.L. முஹம்மது கௌஸ் பாகவி

ஜனாப், அல்ஹாஜ் M.I.M. காஸீம் (தலைவர், பட்டின் சபை , காத்தான் குடி.,)

உள்ளிட்டோர் தெரிவு செய்யப்பட்டனர்.

## வாதியின் உரை

விவாதத்தின் ஆரம்பத்தில் வாதியானஷைகு அப்துல் காதிர் ஸூபிஹழறத் அவர்கள் தனது வாதத்தை பின்வருமாறு முன்வைத்தார்கள்:-

இப்போது நம் மத்தியில் அறிமுகமாகியிருக்கும் தப்லீக் ஜமாஅத் இயக்கம் வஹாபிஸ கருத்துக்களைப் பரப்புவதற்காக வந்த இயக்கமாகும்; இதன் ஸ்தாபகரும், அவரின் குருமார்களும் வஹாபிகளாவார்கள்;

இவர்களின் கெட்ட வஹாபிக் கொள்கைகளை அவர்களின் நூற்களில் எழுதாயிருக்கின்றார்கள்;

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள விட இப்லீஸுக்கு அதிகம் அறிவு உண்டு என்றும், நபியவர்கள் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்குத் தெரிகின்ற அறிவைப் போல பேயன், பைத்தியக்காரன், மதளை,மிருகங்களுக்கும் கூட தெரியும் என்றும்;

நபியவர்கள் அற்ப அணுவுக்குக் கூட சமமாக மாட்டார்கள் ;, அன்னார் செம்மானை( சங்கிலியனை) விட குறைந்தவர்கள் என்றும்;

அன்னாரின் நினைவு தொழுகையில் வருவது கழுதை மாட்டினுடைய நினைப்பில் மூழ்குவதை விடவும் கெட்டது என்றும்;

அன்னார் மௌத்தாகி மண்ணோடு மண்ணாகிவிட்டார்கள் என்றும்;

நபியவர்கள் தேவ் பந்து மத்ரஸா வில் உருது கற்றார்கள் என்றும்; இன்னும் பலவாறு அவர்களின் நூற்களில் எழுதியிருக்கின்றார்கள் என்றும் கூறி அவர்களின் நூற்களிலிருந்து பக்கத்தோடு வாசித்து க் காட்டி அவையில் முன்வைத்தார்கள்.

இவ்வாறெல்லாம் கூறியவர்களின் சீடர் தான் தப்லீக்கின் ஸ்தாபகர் மௌலவி இல்யாஸ் ஆவார், இவர்களை தனது ஷைகுமார்கள் என்று ஏற்றுக் கொண்டுள்ளார்; இவர்களை வலி, குத்பு , என்றும் இன்னின்ன நூற்களில் கூறியிருக்கின்றார்;

மௌலவி இல்யாஸின் தப்லீக்கினுடைய நோக்கம் தொழுகைக்கு அழைப்பதில்லை என்று சத்தியம் செய்து கூறியிருக்கின்றார்; தனது நோக்கம் தனது குருமார்களின் கொள்கையைப் பரப்புவதே என்று அவர் வாயாலேயே கூறியிருக்கின்றார்;

ஆகவே, இந்த இயக்கத்தில் சேராதீர்கள்! அவ்வாறு சேர்ந்தால், உங்களுடைய ஈமானுக்கு ஆபத்து ஏற்படும் , குறைந்தது அதன் ஸ்தாபகர் இல்யாஸையும், அவரின் குருமார்களான கொங்கோஹி, தானவி, அம்பேட்டி, நானுத்தவி இவர்களையெல்லாம் முஸ்லிம்கள் , நல்ல மனிதர்கள் என்றாவது மனதில் நம்பிக்கை மனதில் வரும் ;

இவர்கள் அனைவரும் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை ஏசியவர்கள், றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை ஏசியவன் காபிர்; காபிர் என்று சொல்லத் தயங்கியவனும் காபிர் என்றால் , இவர்களை முஸ்லிம் என்றும், நல்லவர் என்றும் சொன்னவர்கள் யாராகும்?

இதனாலேயே இதில் சேரக்கூடாது! என்று கூறுகின்றோம் என்று கூறினார்கள்,

## பிரதி வாதியினர் :-

இல்யாஸின் உஸ்தாதுமார்கள் வஹ்ஹாபிகளாக இருந்ததினால் இல்யாஸ் வஹ்ஹாபியாக ஆகிவிடுவாரா? அவரால் உண்டாக்கப்பட்ட இயக்கத்தில் சேரக்கூடாதா? அலியுல் ஜுபாயி வஹ்ஹாபி முஃதஸிலாவாக இருந்தும், அவரின் மாணவர் அபுல்ஹஸன் அஷ்அரியுடைய கொள்கையை ஸுன்னத் வல் ஜமாஅத்து மக்கள் பின்பற்றியிருக்கின்றார்களில்லையா? என்றனர்.

## வாதி தரப்பினர்:-

இமாம் அஷ்அரி அவர்கள் வஹாபியிடம் படிக்கத்தான் செய்தார்கள்; அவரை தனது குருவாக ஏற்று அவர் கொள்கையை சரி காணவில்லை; அவரின் கொள்கை சரியல்ல என்று கூறினார்கள்

ஆதாரம்: துஹ்பத்துல் முரீது பக்கம் : 62

இல்யாஸ் வஹ்ஹாபிகளிடம் படித்தார், அவர்களை நல்லவர்கள் என்று அவர்களின் கொள்கைகளை சரிகண்டு அவர்களை தனது குருவாக்கி அவர்களிடம் மூரீதானார்; அவர்களை வலி, குத்பு என்றும் கூறினார்; அவர்களைப் பின்பற்றினார்; வஹாபியைப் பின்பற்றியவர்களும் வஹ்ஹாபியேதான்!

இல்யாஸின் குருமார்கள் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களைத் திட்டி ஏசி அவர்களின் நூற்களில் எழுதியிருக்கின்றார் கள்; அந்த நூற்கள் யாவும் இதோ எங்களிடம் இருக்கின்றன;

இவ்வாறு எழுதியதனால் இவர்கள் காபிர்கள் என்றும், இவர்களைக் காபிர் என்று சொல்லத் தயங்கிய வரும் காபிர் என்றும் மக்கா மதீனாவிலுள்ள உலமாக்கள் ஃபத்வாக் கொடுதுள்ளார்கள் ,அந்த ஃபத்வா நூலுக்கு "ஹூஸாமுல் ஹறமைன்" என்று பெயர், இந்த நூலும் இதோ இருக்கின்றது என்று கூறினார்.

## பிரதி வாதி தரப்பினர் :-

மக்கா பதீனாவிலுள்ள உலமாக்களேதான் இவர்களை முஸ்லிம்கள் என்றும், நல்லவர்கள் என்றும் ஃபத்வாக் கொடுத்திருக்கின்றார்களே! என்று கலீல் அஹ்மத் அம்பேட்டியால் எழுதப்பட்ட "அல்முஹன்னது"

என்ற நூலிலிருந்து, ஷெய்கு ஸஈது பாபஸீல் என்பவர்களால் எழுதப்பட்ட ஃபத்வாவை சபையில் முன்வைத்து வாசித்துக் காட்டினார்கள்!

## வாதி தரப்பினர்:-

" அல்முஹன்னது " என்பது கள்ளப் ஃபத்வா! கலீல் அஹ்மது அம்பேட்டி என்பவரே கேள்வியும் கேட்டுஅப்படியானால் நீங்கள் நல்லவர்கள், முஸ்லிம்கள்தான் என்று அவரே பதிலும் எழுதி இந்தியா, தேவ் பந்து உலமாக்களின் ஒப்பத்தோடு மக்கா மதீனா உலமாக்களின் கையொப்பம் என்று கூறி அவரே கற்பனை செய்து எழுதி வைத்துள்ளார் என்று கூறினார்.

## பிரதிவாதி தரப்பினர் :-

இல்யாஸ் வஹ்ஹிபியோ , காபிரோ ஆகட்டும்; அவர் மௌத்தாகி விட்டார் , இலங்கையில் நடக்கின்ற தப்லீக் கில் வஹ்ஹாபியத் இருக்கின்றதா? என்று கேட்டனர்;

## வாதி தரப்பினர் :-

அதைப்பற்றி இங்கு பிரச்சினை இல்லை; தப்லீக் ஜமாஅதை உண்டாக்கியது வஹ்ஹாபியத்தைப் பரப்புவதற்காகத் தான் என்றால், அது எங்கு நடந்தாலும் வஹாபியத் பரவத் தான் செய்யும் என்று கூறினார்.

## பிரதிவாதி தரப்பினர்

நேரமாகிவிட்டது ! மாநாட்டை முடித்து விடுங்கள்! என்றும், மக்கள் முடிவு சொல்லி விட்டுப் போங்கள் " என்று கூச்சல் போட்டுக்கொண்டு ஆளுக்கொரு பக்கமாக ஓடிவிட்டார்கள். இலங்கை மாத்தறை விவாத மாநாட்டில் நடந்தவை இவைதாம்!

மட்டக்களப்பு விவாத ஒப்பந்த மாநாட்டிற்கு வந்த தப்லீக் ஜமாஅத்தின் சார்பான ஆலிம்கள்

"தப்லீக் ஜமாஅத்தின் நோக்கம் தொழுகைக்கு அழைப்பதல்ல!, வஹ்ஹாபாகளின் கொள்கையை திரைமறைவில் கட்டம் கட்டமாகப் பரப்புவது தான் என்றும், இல்யாஸின் குருமார்கள் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை மிகத் தரக்குறைவாக ஏசியவர்கள் என்றும் , இவ்வாறு அவர்கள் கூறியதால் புனித மக்கா,, மதீனாவின் உலமாக்கள் இவர்களைக் காபிர்கள் ஃபத்வா வழங்கியுள்ளார்கள் என்றும் கண்ணியத்திற்குரிய ஷைய்குனா ஸூபிஹளறத் நாயகம் கத்தஸல்லாஹு ஸிர்ரஹுல் அஸீஸ் அவர்கள் அடித்துக் கூறிய போதும் அதை மறுக்க முடியாமல்,

இல்யாஸ் வஹாபி என்பதை நூற்றுக்கு நூறு வீதம் என்கின்றோம் என்று ஒப்கொண்டவர்கள், கூட்டத்தைக் குழப்பவும் மக்களின் கண்ணில் மண்ணைத் தூவவும் அவர்கள் கையில் எடுத்தது

"இலங்கைத் தப்லீக்கில் வஹாபியத் இருக்கின்றதா" என்ற சுலோகமாகும்.

இதே தந்திரத்தையும், சுலோகத்தையும் தான் மாத்தறை விவாத மாநாட்டிலும் தூக்கினார்கள்;

விவாதத்தின் கருப்பொருள் "தப்லீக்கஜமாஅத்தின் நிறுவனரும், அவரின் குருமார்களும் வஹாபிகளாவார்கள்;

தொழுகைக்கு அழைத்தல் என்பது தப்லீக் ஜமாஅத்தின் குறிக்கோளலல்ல என்று சத்தியம் செய்தும், தனது நோக்கம் தன்னுடைய குருமார்களின் கொள்கைகளைப் பரப்புவது தான் என்றும் இல்யாஸே கூறியுள்ளார்: ஆகவே , தப்லீக்கில் சேரக்கூடாது; சேர்ந்தால் ஈரானுக்கு ஆபத்து ஏற்படும்! என்பதாகும்.

இதனை தப்லீக் சார்பாக வந்தவர்களோ, தீர்ப்புக்கூற வந்த தப்லீக் சார்பான நீதிபதிகளோ சற்றும் கவனத்தில் கொள்ளாது தப்லீக் ஜமாஅத்தை டில்லி தப்லீக், இலங்கைத் தப்லீக் என்று வேறுபடுத்தி;

டில்லித் தப்லீக்கில் வஹாபிஸம் உண்டு தான்!, இல்யாஸும் அவர் குருமார்களும் வஹாபிகள் தான் என்பதை ஏற்றுக்கொண்டு விட்டு ;

"இலங்கைத் தப்லீக்கில் வஹாபிஸம் இருக்கின்றதா? இல்லையே!, நீங்கள் அச்சப்படுவது போன்று இலங்கைத் தப்லீக்கில் வஹாபிஸம் வந்தால், அப்போது நாங்களும் சேர்ந்து எதிர்ப்போம், தடுப்போம் என்றார்கள்.

இவர்கள் மார் தட்டிய போல் நடந்து கொண்டார்களா? இலங்கைத் தப்லீக் எப்பொழுதாவது டில்லித் தப்லீக் கை விட்டு சுயாதீனமாக இயங்கியதா? இல்லையே!,

வஹ்ஹாபிஸத்தை எதிர்த்த உலமாகாகள் தப்லீக் ஜமாஅத் வஹாபிஸத்தைப் பரப்புவதை உள்நோக்கமாகக் கொண்டு வேஷம்

போட்டு வந்துள்ளது என்று இடித்துக்கூறிய போது உண்மையைத் தெளிவாக விளங்கியும் தப்லீக் ஜமாஅத்தை ஆதரிக்க அல்லது தப்லீக் ஜமாஅத்திற்கு முட்டுக் கொடுக்க முன்வந்ததின் மர்மம் என்ன?

Part -14

தப்லீக் ஜமாஅத் இலங்கையில் 1952ம் ஆண்டு கால்பதித்து ஆறு மாதங்களுக்குள் ஷைகுனா ஸூபி ஹளறத் நாயகம வர்கள் தப்லீக் ஜமாஅத்தின் வண்டவாளங்களை மக்களுக்கு எடுத்துக்கூறத் தொடங்கிவிட்டார்கள்;

1953 ஆண்டளவில் "தப்லீக் ஜமாஅத்தின் வஹாபிஸத்தின் விஷக்கிருமிகள்" என்ற நூலை வெளியிட்டார்கள்; அதைத் தொடர்ந்து பல உருது ஃபத்வாக்களை தமிழாக்கி வெளியிட்டார்கள்;

தப்லீக் ஜமாஅத்திற்கு எதிராக கண்ணியத்திற்குரிய ஷைகுனா ஸூபி ஹளறத் நாயகம் கத்தஸல்லாஹு ஸிர்ரஹுல் அஸீஸ் அவர்கள் முன் வைத்த எந்த ஒரு குற்றச்சாட்டுக்களையும் மட்டக்களப்பு விவாத ஒப்பந்த மாநாட்டிலும் சரி, மாத்தறை விவாத மாநாட்டிலும் சரி அகில இலங்கை தப்லீக் ஜமாஅத்தின் அமீராலோ, தப்லீக் ஜமாஅத்திற்கு முட்டுக் கொடுக்க முன் வந்த வாடகை உலமாக்களாலோ மறுக்க முடியவில்லை;

மாறாக, இலங்கைத் தப்லீக், டில்லி தப்லீக் என்று வேறுபடுத்தி இலங்கைத் தப்லீக்கில் வஹாபிஸம் இல்லை என்றும், டில்லித் தப்லீக்கில் வஹாபிஸம் உண்டு என்பதை முழுமனதுடனும் ஒப்புக்கொண்டும் முஃமின்களின் ஈமானில் வழிகேட்டை வாரி இறைத்துக் கொண்டனர்.

இலங்கையிலுள்ள தப்லீக்ஜமாஅத் டில்லி தப்லீக் ஜமாஅத்திற்கு அந்நியமானதா? என்று விவாதத்தில் கேட்டதற்கு இல்லை டில்லியின் கிளைதான் என்று ஒப்புக் கொண்டனர்;

தப்லீக்கின் நிறுவனர் மௌலவி இல்யாஸும் அவர் ஷைகுமார்களும் வஹாபிகள் என்பதை ஏற்றுக்கொள்ளும் நீங்கள் எதற்காக அவர்களின் பெயர்களை உச்சரிக்கும் போது றஹ்மத்துள்ளாஹி அலைஹி என்று ஒன்றுக்குப் பத்துத்தடவை உச்சாரம் செய்தீர்கள் ? என்ற கேள்விக்கு பேந்துதலே விடையாக இருந்தது!

தேவ்பந்தி ஷைகுமார்கள் அதாவது , மௌலவி இல்யாஸின் குருமார்கள் கண்மணி றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை கீழ்த்தரமாக ஏசி திட்டி எழுதியதனதால் புனித மக்கா மதீனா முப்திகளும், பாரத நாட்டின் முப்திகளும் காபிர்கள் என்று ஃபத்வா வழங்கியதை எடுத்துக்காட்டிய போது அதை மறுக்க முடியாமல் விழிபிதுங்கி நின்ற வாடகை உலமாக்கள் எப்படியாவது தப்லீக் ஜமாஅத்தை பாதுகாக்க வேண்டும் என்ற மேலிடத்து உத்தரவை நிறைவேற்றுவதில் கண்ணும் கருத்துமாகவே இருந்தார்கள்;

மாத்தறை விவாதத்திற்கு தப்லீக் ஜமாஅத்தின் சார்பில் வந்த வாடகை உலமாக்களுக்கு மார்க்கத்தைவிடவும், மக்களின் ஈமானுக்கு கேடு வரப்போகின்ற தென்பதை விடவும், தப்லீக் மேலிடத்தின் உத்தரவு அவர்களுக்கு முக்கியமானதாகத் தென்பட்டது!

மாத்தறை மாநாட்டில் தப்லீக்கின் சார்பில் கலந்து கொண்ட உலமாக்களின் அந்தரங்கத்தை ஆராய்ந்து பார்த்தால் , அவர்களில் எவரும் சுயமாகவோ, மனச்சுத்தியோடோ கலந்து கொள்ளாமல்

நிர்பந்தத்தாலும் , காழ்ப்புணர்வினாலும் கலந்து கொண்டதை கண்டு கொள்ள முடியும்.

மட்டக்களப்பு ஒப்பந்த மாநாட்டிலும், மாத்தறை விவாத மாநாட்டிலும் தப்லீக் சார்பாகப் கலந்து கொண்ட காயல்பட்டினத்து உலமாக்கள் ஷைகுனா ஸூபி ஹளறத்தவர்கள் மீதுள்ள தங்களுடைய குரோதத்திற்குப் பழி தீர்க்க வந்தவர்கள் என்பது நிதர்சனமாகும்.

காயல்பட்டினத்தில் அரசியல் காரணமாக ஊர் இரண்டு பட்ட போது ஸாவியாவை கேந்திரமாகக் கொண்ட ஒரு பிரிவினர் ஜூம்ஆப் பள்ளிவாசலுக்கு அண்மித்ததாக ஒருபள்ளியைக்கட்டி புதிய ஜூம்ஆவை அதில் 01,04- 1955ல் ஆரம்பித்தனர்;

புதிதாக ஆரம்பிக்கப்பட்ட ஜூம்மா செல்லாது என்று மஹ்லறத்துல் காதிரியா அரபுக் கலாசாலையின் அதிபர் கண்ணியத்திற்குரிய முப்தி அஹ்மது முஹ்யத்தீன் ஆலிம் ஹளறத் அவர்கள் ஃபத்வா எழுதினார்கள்;

புது ஜூம்மா செல்லுபடியாகும் என்று ஸாவியாவில் இயங்கி வந்த அல்பாஸியத்துஸ் ஸாதுலியாஹ் அரபுக்கலாசாலையின் அதிபர் மௌலவி ஷாஹுல் ஹமீத்(ஸாவன்னா ஆலிம்) அவர்கள் ஃபத்வா எழுதினார்கள்;

இருதரப்பாரும் உலமாக்களின் அங்கீகாரத்தைப் பெறுவதற்காக இலங்கை வந்தனர்;அக்காலத்தில் காயல்பட்டினத்தில் முக்கியமான பல ஆலிம்கள் கொழும்பிலும், இலங்கையின் ஏனைய பகுதிகளிலும் இமாம்களாகவும், வர்த்தகர்களாகவும் இருந்தனர்;

இக்கால கட்டத்தில் மஹ்லறாவின் செயலாளர் பதவியை வேறு நபரிடம் ஒப்படைத்து விட்டு ஷைகுனா ஸூபி ஹளறத் நாயகமவர்கள் இலங்கை வந்து விட்டார்கள்; மஹ்லறாவின் நிருவாகத்திலேற்பட்ட மனக்கசப்பினால் ஷைகு நாயகம் மஹ்லறாவின் தரப்பாரிடமிருந்து சில காலம் ஒதுங்கியிருந்தார்கள்;

இந்த சூழலில் புது ஜும்மா ஆகாது என்று மஹ்லறாவின் முப்தி அஹ்மது முஹ்யத்தீன் ஆலிம் ஃபத்வா எழுதினார்கள்; இவர் ஷைகுனாவின் நெருங்கிய உறவினராக இருந்த போதிலும் சில மனக் கசப்பால் தூரமாக இருந்தார்கள்;

புது ஜும்ஆவை ஆதரித்து ஃபத்வா எழுதியவர் ஷைகுனாவின் முரீதான முப்தி ஷாஹுல் ஹமீது ஆலிம் ஆவார் ; புதிய ஜும்ஆவின் உருவாக்கத்தில் வரிந்து கட்டிக்கொண்டு களத்தில் நிற்பவர்கள் ஷைகுனாவின் ஆதரவு அணியினர்; புது ஜும்ஆவை ஆதரிக்கும் முக்கிய பிரமுகரின் இடத்தில்தான் கொழும்பில் தங்கியுமிருந்தார்கள்;

காயல்பட்டினத்தில் ஊர்செல்வாக்கிலும் , அறிவுத் திறமையிலும், ஷைகுனாவின் ஆதரவு இரு தரப்பாருக்கும் இன்றியமையாததாக இருந்தது; கள சூழலில் புது ஜும்ஆவை ஷைகுனா ஆதரிப்பார்கள் என்று தான் இருதரப்பாரும் நம்பினார்கள்;

சத்தியத்தின் காவலராய்த் திகழ்ந்த ஷைகுனா அவர்கள் புது ஜும்மா செல்லுபடியற்றது என்ற ஃபத்வாவுக்கு ஆதரவாக கையெழுத்திடுவதற்கு முன், தனதிடத்தை வேறு இடத்திற்கு இரகசியமாக மாற்றிக் கொண்டு புது ஜும்மா செல்லுபடியற்றது என்ற ஃபத்வாவில் கையெழுத்திட்டார்கள் ;

ஷைகுனாவின் இம்முடிவு புது ஜும்ஆவை ஆரம்பித்தவர்களுக்கு பேரதிர்ச்சியாகவும் , பேரிடியாகவும் அமைந்திருந்தது! இதுவரை தனது முரீதாக இருந்த "ஸாவன்னா" ஆலிமும் , அபிமானிகளும், ஆதரவாளர்களும் விரோதிகளானார்கள்; தற்காலிகமாக பிரிந்து நின்ற மஹ்லறா அணியினர் நெருக்கமானார்கள்;

நடுநிலை வகித்தோர் ஷைகுனாவின் மார்க்கத்தில் சத்தியம் தவறாத நேர்மையையும், தன்னலம் கருதாத இறையச்சத்தையும் கண்டு வியந்து மதித்தனர். புது ஜும்ஆவை ஏற்பாடு செய்தவர்கள் 1958 - ஹிஜ்ரி1337ல் அல்ஜாமிவுல் அஸ்ஹர் என்ற பெயரில் ஒரு பள்ளியைக்கட்டினார்கள், இப்பள்ளிவாசல் ஊரை இரண்டாகப் பிரிக்கும் குரோத நோக்கில் கட்டப்பட்டதனால் கட்டிய ஆண்டையும் நோக்கத்தையும் குறிக்கும் விதத்தில் "மஸ்ஜிதுல் ழிறார்" என்ற பெயரே பொருத்தமாகும் என்று இடித்துரைத்தார்கள்;

ஷைகு நாயகமவர்கள் தப்லீக் எதிர் பிரச்சாரத்தை 1954ல் பகிரங்கமாக ஆரம்பித்து விட்டார்கள்; புது ஜும்மாவின் ஃபத்வாவிற்கு 1955ல் கையெழுத்திட்டார்கள், இதனால் அதுவரை ஆதரவாக இருந்தவர்கள் ஷைகு நாயகத்தைப் பழிவாங்க தப்லீக்கை கருவியாக்கிக் கொண்டனர்;

காயல்பட்டினத்தின் புது ஜும்மாவின் சூட்டின் கனல் தகதகத்துக் கொண்டிருக்கும் சூழலில் தான் தப்லீக் ஜமாஅத்தின் போராட்டமும், மாத்தறை விவாத மாநாடும் நடக்கின்றது;

காயல்பட்டினத்து அரசியல் பிரிவினையாகி பிரிவினை புது ஜும்மாவில் கால்பதித்து பின்னர் ஷைகுனாவை பழிவாங்கும் நாகமாக விஸ்வரூபம் எடுத்தது;

காயல்பட்டினத்தில் மிகச் சிறு குழுவாக இருந்த ஷாதுலியாத் தரீக்கத்தைச் சேர்ந்தவர்கள் செல்வாக்கு இல்லாதவர்களாகவும், ஓரக்கண் பார்வையுடையவர்களாகவுமே இருந்து வந்தனர்; ஊர்பிரிவினை இவர்களை ஊக்கப்படுத்தியது ; வாய்ப்பைப் பயன்படுத்தி , புது ஜும்ஆவுக்கு உரமேற்றி பிரிவினையை தங்களின் வளர்ச்சிக்கும், மேலாதிக்கத்திற்கும் உரமாக்கிக் கொண்டு முன்னேறினர்;

ஷைகுனா ஸூபி ஹளறத் நாயகமவர்கள் காதிரியா ஷைகாக இருப்பதும், புதிய ஜும்ஆவை கடுமையாக எதிர்த்ததும், இலங்கையில் ஷாதுலியத் தரீக்கத்தினர் தப்லீக்கை ஆதரித்ததற்கும், புது ஜும்ஆவை ஆதரித்த காயல்பட்டினத்து உலமாக்களும், இலங்கை உலமாக்களும் விவாதத்தில் கலந்து கொண்டதற்குப் பின்னணிக் காரணிகளாகும்.

மட்டக்களப்பு ஒப்பந்த மாநாட்டிலும், மாத்தறை விவாத மாநாட்டிலும் கலந்துக் கொண்ட தப்லீக் அணியினரில் புது ஜும்ஆவுக்கு பலமான ஆதரவு அளித்தவர்களில் கொழும்பிலும், மட்டக்களப்பிலும் அதிக செல்வாக்கோடு விளங்கிய சொழுக்கார் கம்பனியின் ஆதிக்கம் காணப்பட்டது; வெலிகமையிலிலுள்ள உலமாக்களான யாஸீன் மௌலானா, எஹ்யா மௌலானா, ஸக்கரிய்யா ஆலிம் உள்ளிட்டோரில் தைக்கா ஷுஐப் ஆலிம் அவர்களின் செல்வாக்கு பலமாக இருந்தது;

இக்காலப்பகுதியில் தைக்கா ஷுஐப் ஆலிம் அவர்கள் கொழும்பில் கீர்த்திமிக்க மாணிக்க வர்த்தகராக விளங்கியதோடு, தப்லீக் ஜமாஅத்தின் இருப்புக்கு வாரி வழங்கிய முக்கிய காப்பாளராகவும் திகழ்ந்தார்கள்; அப்துஸ்ஸமத் ஆலிம் பஜ்ஜி அவர்கள் பாணந்துறை தீனியா மத்ரஸாவில் அதிபராக இருந்தார்கள்; இம்மத்ரஸாவின் நிருவாகி தப்லீக் ஜமாஅத்தின் உயர்மட்ட அமீராக விளங்கியவர்

என்பது குறிப்பிடத்தக்கது; நீதிபதிகளில் ஒருவராக விளங்கிய அப்துல் ஹமீது ஆலிம் பஹ்ஜி அவர்கள் ஷாதுலியாத் தரீக்கை பின்னணியாகக் கொண்டவர்,

காயல்பட்டினத்தில் உள்ளவர்களுள் மஹ்லறாவை அண்டியிருப்பவர்களும், ஷைகு நாயகத்தின் குடும்ப உறவினர்களும் தோல் வியாபாரத்தில் ஈடுபட்டுவந்ததனால் இலங்கையில் அவர்கள் கால்பதிக்கவில்லை;

இலங்கையில் பள்ளிவாசல்களில் இமாம்களாகவும், வர்த்தகர்களாகவும் இருந்தவர்களில் அதிகமானவர்கள் புது ஜும்ஆவை ஆதரித்த காயல்பட்டித்தைச் சேர்ந்தவர்களும், அவர்களின் செல்வாக்கிற்கு உட்பட்டவர்களுமாவார்கள் என்பதும் முக்கியமாகக் கவனிக்கப்பட வேண்டிய விடயமாகும்;

சத்தியத்தை விளங்கியவர்களும், ஷைகுனாவில் அபிமானம் கொண்ட காயல்பட்டினத்தைச் சேர்ந்தவர்கள் ஷைகுனாவுக்கு வெளிப்படையாகவும், மறைமுகமாகவும் ஆதரவளித்தனர்.

"ஊர் இரண்டுபட்டால் கூத்தாடிக்குக் கொண்டாட்டம்" என்ற வகையில் தப்லீக் ஜமாஅத்து அமைப்பினர் தங்களுக்கு சாதகமாக அடித்த காற்றைப் பயன்படுத்தி தூற்றிக்கொண்டுள்ளனர்;

ஆக, இலங்கையில் தப்லீக்கால் ஊண்றுவதற்கு மார்க்கம், சத்தியம், மனசாட்சி, உள்ளிட்டவையை கொலை செய்துவிட்டு காழ்ப்புணர்வு, குரோதம் உள்ளிட்டவையால் பாய்ச்சப்பட்ட சாக்கடையே பிரதானமான காரணமாகும்,

தொடரும்.....

# Part -15

இலங்கையில் தப்லீக் ஜமாஅத்தின் மேலிடமும், அவர்களால் ஏற்படுத்தப்பட்ட வாடகை உலமாக்களும் தப்லீக் ஜமாஅத்திற்கு எதிராக ஷைகுனா ஸூபிஹளறத் நாயகமவர்களால் முன்வைக்கப்பட்ட குற்றச்சாட்டுகளை மறுக்க முடியாமல் திண்டாடியதோடு, குற்றச்சாட்டுகளும்,அதற்கெதிரான ஃபத்வாக்களும் பலமானவை என்பதை தெட்டத் தெளிவாக புரிந்து விட்டனர்;

ஆயினும், உண்மையை ஒப்புக்கொள்ளவோ, தப்லீக் ஜமாஅத்தின் நடவடிக்கைகளை நிறுத்தவோ முடியாமல் திக்கு முக்காடிக் கொண்டிருந்தார்கள்;

ஷைகுனா ஸூபி ஹளறத் நாயகமவர்கள் நாடு முழுவதுமாக தனியாளாகச் சுற்றுப் பயணம் செய்து தீவிர பிரச்சாரத்தில் ஈடுபட்டுக் கொண்டிருந்தார்கள்; ஷைகுனாவின் துணிச்சலான தீவிர பிரச்சாரத்தினால் பாதிப்படைந்த தப்லீக் மேலிடம் சதித்திட்டங்களை தீட்டத் தொடங்கினார்கள்,

அதன் மூலம் தப்லீக்கின் மீதுள்ள குற்றச்சாட்டுக்களை மறைக்கவும், ஷைகுனா ஸூபிஹளறத் நாயகத்தின் நற் பெயரைக் கெடுக்கவும் பின்வரும் பல நாசகார வேலைகளில் தப்லீக் மேலிடம் ஈடுபட்டது;

1. ஷைகு நாயகம் கொழும்பு றிபாய் தைக்காவுக்கு அண்மித்ததாக ஸூபி மன்ஸிலில் அமைத்து திக்ரு மஜ்லிஸை நடத்தியும், முரீதீன்களுக்கும் ஏனையவர்களுக்கும் ஆத்மீக போதம் செய்து கொண்டுமிருந்தார்கள்; இதைத்தடுக்க பொலீஸில் பொய்யான

குற்றச்சாட்டுக்களைக் கூறி முறைப்பாடு செய்து தொல்லைகள் கொடுத்தார்கள்,

2. கொழும்பு கொள்ளுப்பிட்டி ஜும்மா மஸ்ஜிதில் 05- 11- 1961ல் தப்லீக் மாநாட்டைத் கூட்டி அதற்கு ஷைகுநாயகத்திற்கு அழைப்புக் கொடுக்காமல் அவர்களாகவே தப்லீக் ஜமாஅத் நல்ல அமைப்பு என்றும் , அதில் சேரலாம் என்றும் தீர்மானம் நிறைவேற்றிவிட்டு,

மேற்படி மாநாட்டை விவாத மாநாடாக சித்தரித்து ,அந்த விவாத மாநாட்டிற்கு ஸூபி ஹளறத் அவர்கள் வருகை தர மறுத்து ஒழித்துக் கொண்டார் என்றும், விவாத மாநாட்டிற்கு வந்த உலமாப் பெருமக்கள் தப்லீக் ஜமாஅத்தில் எல்லோரும் சேரலாம், அது காலத்திற்குத் தேவையான நல்ல இயக்கம் என்றும்,

ஸூபி ஹளறத் அவர்கள் தேவையில்லாத துஷ்பிரச்சாரத்தில் ஈடுபடக்கூடாது என்று இச்சபை ஏகமனதாக தீர்மானம் நிறைவேற்றியிருப்பதாகவும் நோட்டீஸ் அடித்து வெளியிட்டு ஷைகுனாவின் பிரச்சாரத்தை திசை திருப்பவும், மக்களை அவர்களுக் எதிராக தூண்டுவதற்கும்; அவர்களின் நற்பெயருக்குக் களங்கம் கற்பிக்கவும் சதி செய்தனர்;

தப்லீக் ஜமாஅத்தின் இச்சதியை அம்பலப்படுத்தி சுடச்சுட " மக்களை மடையனாக்கும் 5 ம் திகதி தப்லீஹ் மாநாடு" என்ற பெயரிலும், "அருத்தமில்லாத 5ம் திகதி மாநாடும், பொருத்தமில்லாத பேருரைகளும் !" என்ற பெயரிலும் பல்லாயிரம் பிரசுரங்களை பல முறை பிரசுரித்து தப்லீக் ஜமாஅத்காறர்கள் செய்த தில்லுமுல்லுகளையும், சதிகளையும் உரக்கக் கூறி ஊரறியச்செய்தார்கள்;

(3-) 23. - 10-. 1963 ம் வருடம் மட்டக்களப்பு டவுண் ஜும்ஆப்பள்ளி வாசலில் விவாத ஒப்பந்த மாநாடு நடந்தது, இம்மாநாட்டுக்கு வந்த தப்லீக் ஜமாஅத்தினர் வீண்குழப்பங்களையும் , குதர்க்கங்களையும் ஏற்படுத்தி நேரத்தைக் கடத்தி ஒப்பந்தம் நடக்காமலும், விவாதம் நடக்காமலும் செய்து விட்டு "இலங்கைத் தப்லீக்ஜமாஅத்தில் வஹாபிஸம் கிடையாது, ஆகையால் அதனைத் தொடர்ந்து நடத்தலாம்", என்று ஏற்கனவே தீர்மானித்தபடி, தான்தோண்றித்தனமான தீர்மானத்தை நிறைவேற்றி கூட்டத்தைக் கலைத்தனர்; பின்னர், " தப்லீக் சேவையின் சந்தேக சர்ச்சைகள் பற்றிய முடிவு; தப்லீக் பணி பற்றிய கருத்து" என்ற தலைப்பில் நோட்டீஸ் வெளியிட்டு உண்மைக்கு மாறானவிடயங்களை எழுதி வெளியிட்டனர்; தப்லீக் கார்களின் இந்த சதியையும், பொய்யையும் அம்பலத்தி "ஒப்பந்தமாநாடு குதர்க்க மாநாடாகாது போனதற்கு நன்றி ! என்ற பெயரில் நடந்த உண்மைச் சம்பவத்தை விளக்கி நோட்டீஸ் வெளியிட்டு தப்லீக்கின் பொய் முகத்தை வெளிச்சம் போட்டுக்காட்டினார்கள்.

(4) 8- 8- 1965 ம் ஆண்டு மாத்தறையில் விவாதம் நடந்தது! விவாதத்தில் மூன்று நீதிபதிகள் இருந்தனர்; விவாதத்தைத் தொடாமலேயே கூட்டத்தைக் குழப்பிவிட்டு ஆளுக்கொரு பக்கமாக தலைதெறிக்க ஓடிய தப்லீக் முல்லாக்கள் "தப்லீக் ஜமாஅத்துவிவாத மாநாடு மாத்தறை" என்ற பெயரில் பொய்யான விளக்கங்களை எழுதி நோட்டீஸ் வெளியிட்டார்கள்;

மேலும், விவாத மாநாட்டில் கலந்து கொண்ட மூன்று நீதிபதிகளில் ஒருவரான மௌலவி, பாஸில்,A.L.M.கௌஸ் பாகவி ஹளறத் அவர்களின் ஒப்பத்தைத் களவாடி தப்பும் தவறுமான பொய்யான விளக்கங்களையும், தீர்மானங்களையும் எழுதி வெளியிட்டார்கள்;

தப்லீக் ஜமாஅத்தின் திருட்டுத்தனமான இச்சதியை அம்பலப்படுத்தி உடனுக்குடன் "விவேகமில்லா விவாத மாநாடும் வீணான தீர்ப்புகளும்!, என்ற பெயரில் முழு விளக்கத்தையும் எழுதி சிறு நூலாக அச்சிட்டு வெளியிட்டார்கள்;

(5) தப்லீக் ஜமாஅத்திலுள்ள காடையர்களை ஏவி ஷைகுனா ஸூபி ஹளறத்தவர்களை வழியில் இடைமறித்து இம்ஸிப்பது, தொல்லைகள் கொடுப்பது உள்ளிட்ட தரங்கெட்ட வேலைகளைச் செய்து அவர்களின் மனத்துணிவை பலவீனப்படுத்தியும்,, மற்றவர்கள் மூலம் நெக்குவாரப்படுத்தியும் நெருக்கடிகளை ஏற்படுத்தினார்கள்; தப்லீக் ஜமாஅத்தின் இவ்வாறான கிறுக்குத்தனங்கள் ஷைகுனா ஸூபி ஹளறத் நாயகமவர்களின் போராட்டத்திலிருந்து இம்மியளவும் பின்வாங்கச் செய்யவில்லை;

(6) இறுதியாக ஷைகுனா ஸூபி ஹளறத் அவர்களை இலங்கையிலிருந்து வெளியேற்றுவது தான் தப்லீக் ஜமாஅத்திற்கு எதிரான பிரச்சாரத்தை நிறுத்துவற்கான ஒரே வழி என்ற முடிவுக்குக் வந்தார்கள்,

ஷைகுனா ஸூபி ஹளறத்திற்கு எதிராக பொய்யான குற்றச்சாட்டுக்களை சோடித்து , குழப்பத்தைத் தூண்டுவதாகவும், மக்களை பிழையாக வழிநடாத்துவதாகவும் இவர் இலங்கையிலிருப்பது இலங்கையின் அமைதிக்கு குந்தகமாக அமையும் என்றும் இன்னும் தகாத குற்றச்சாட்டுக்களையும் சுமத்தி ஸூபி ஹளறத்தின் "விஸா" செல்லுபடியற்றதாக்கி நாட்டை விட்டு வெளியேற்ற வேண்டும் என்று பொலிஸில் முறைப்பாடு செய்தார்கள்;,

இந்த அசிங்கமான வேலையை கச்சிதமாக முடிக்க முடியுமான அனைத்து வேலைகளையும் செய்தனர், இதற்கான வேலையில் தீவிரமாக முன்னாள் சபாநாயகர் இஸ்மாயீல் என்பவர் ஈடுபட்டார்;

(இவர் புத்தளத்தைச் சேர்ந்தவர், புத்தளத்தில் ஷைகு நாயகம் அமைத்த ஸூபி மன்ஸிலை தந்திரமாக பொது பள்ளிவாசலாக்கி மன்ஸிலை கபளீகரம் செய்தார்.)

ஷைகுனாவின் விஸாவை இல்லாமலாக்க சபாநாயகர் இஸ்மாயீல் சதி செய்தார் அல்லாஹ் அவருக்கெதிரான தீர்மானத்தை அவருக்கு தெரியாமலேயே எடுத்தான்; முடிவு, ஷைகுனாவின் விஸா நீடிக்கப்பட்டது சபாநாயகர் கையூட்டுப் பெற்றார் என்று குற்றம் சாட்டப்பட்டு ஏழு ஆண்டுகள் குடியுரிமை பறிக்கப்பட்டார்.

(7) ஷைகுனாவுக்கு எதிரான முறைப்பாடுகளை தொடர்ந்தும் தப்லீக்கார்கள் செய்த காரணத்தால் இரகசியப் பொலிஸார் அவர்களைப் பின் தொடர்ந்து உண்மையைக் கண்டறிய முயன்றனர்;

குற்றச்சாட்டுக்கள் பொய்யாகச் சோடிக்கப்பட்டவை என்று இரகசியப் பொலிஸார் அறிக்கை சமர்ப்பித்தனர்; இருப்பினும் தப்லீக் ஜமாஅத்தினர் ஓயவில்லை; தொடர்ந்தும் தங்களின் முழு செல்வாக்கையும் பயன்படுத்தி முயற்சியைத் தொடர்ந்தனர்; இறுதியாக ஆப்தீன் என்ற இரகசியப் பொலீஸ் உதவி பரிசோதகர் நியமிக்கப்பட்டு உண்மையைக் கண்டறியுமாறு பணிக்கப்பட்டார்;

ஆப்தீன் பலமுறை முயற்சித்தும் ஒரு துரும்பும் அவருக்குக் கிட்டவில்லை;, அடிக்கடி ஷைகுனாவிடம் சென்று வந்து கொண்டிருந்த ஆப்தீன் தன்னை ஷைகுநாயகத்தின் விசுவாசியாகவும், ஒரு அபிமானியாகவும் காட்டி அந்தரங்கம் தேடினார்;

ஷைகுனா ஸூபி ஹளறத் நாயகமவர்கள் அகக்கண்ணால் இவரின் அந்தரங்கத்தைத் துளாவிக் கொண்டிருந்தார்கள் என்பதை அவர் அறியவில்லை; இவரின் முதல் விஜயத்திலேயே அவரை இனம் கண்டு அவரின் மனதின் அழுக்கை அகற்றுவதில் கவனம் செலுத்திக் கொண்டிருந்தார்கள்;

ஆப்தீன் குற்றச்சாட்டின் எதார்த்தம் தப்லீக்கின் குபாடம் என்பதைப் புரிந்து கொண்டார்; ஷைகு நாயகத்தின் தூய பிரச்சாரமும் அப்பழுக்கற்ற அவர்களின் எளிமையான வாழ்வும் ஆப்தீனைக் கவர்ந்தது; ஆனாலும் , அவர் இரகசியப் பொலிஸாகவே தான் வந்து கொண்டிருந்தார்; ஆப்தீனுக்கு ஓர் அதிர்ச்சி வைத்தியம் கொடுக்க ஷைகுனா விரும்பினார்கள்;

ஆப்தீனின் மேலதிகாரிகளில் ஒருவர் அநாவசியமான தொல்லைகள் அவருக்குக் கொடுத்து வந்தார், அவருக்கு அல்லாஹ்வின் தண்டனை கிட்ட வேண்டும் என்ற எண்ணத்தில் அவரை நினைத்து "யாகஹ்ஹார்" என்ற திருநாமத்தை மனதில் பரம இரகசியமாகச் ஓதி வந்தார்;

ஒருநாள் ஷைகுனாவோடு தனியாக இருக்கும் போது " ஒருவர் அவர் யாராக இருந்தாலும் சரி அவர் நாசமாக வேண்டும் என்று "யாகஹ்ஹார் " என்று ஓதக் கூடாது! நீங்கள் இதற்குப் பின் அவ்வாறு ஓதுவதை நிறுத்தி விடுங்கள்! " என்றார்கள்; ஆப்தீன் தன்னிலை மறந்து அழுது காலில் விழுந்து மன்னிப்புக் கேட்டு உடனே முரீதாகி மௌத்வரையிலும் விசுவாசியாகவே இருந்தார்!

ஷைகுனா உயிரோடு இருக்கும் போதும் வபாத்தாகி பல்லாண்டுகள் அவர் மரணிக்கும் வரையிலும்  சகோதர வாஞ்சையோடு எம்மோடு பழகினார், தனது அனுபவங்களை எம்மோடு பகிர்ந்து கொண்டார்.

தப்லீக் ஜமாஅத்தினர் ஷைகுனாவை இலங்கையிலிருந்து வெளியேற்ற வேண்டும் என்ற முடிவை மாற்றாமல் கிடைக்கின்ற அனைத்து வாய்ப்புக்களையும் பயன்படுத்தத் தவறியதில்லை;

(8) 1977ம்  ஆண்டு ஐக்கிய தேசியக் கட்சி அமோகமாக வெற்றி ஆட்சியமைத்தது, அவ்வாட்சியில் ஒவ்வொரு சமயத்திற்கும் தனித்தனியான அமைச்சுக்கள் உருவாக்கப்பட்டு M.H. முஹம்மது M.P அவர்கள் முஸ்லிம் சமய விவகாரங்களுக்கான அமைச்சராக நியமிக்கப்பட்டார்;

இவ்வமைச்சின் பணிப்பாளராக அவரின் மருமகன் ஜெம்ஸித் ஆரிப் நியமிக்கப்பட்டிருந்தார்; இவர் தீவிர தப்லீக் அபிமானி ! இவர் தனது அதிகாரத்தைப் பயன்படுத்தி ஷைகு நாயகத்தின் விஸாவை நிறுத்தி வீட்டுக்கு அனுப்ப முயற்சி செய்தார், கடுமையான நெருக்கடியையும் கொடுத்தார் , முடிவில் பாரிய நோய்க்கு ஆளாகி  சிகிச்சைக்காக லண்டன் சென்றவர் அங்கேயே மரணித்தார்;

இவ்வாறு ஷைகு நாயகத்திற்கு தொல்லைகள் கொடுத்து அவர்களின் மனதை வேதனைப்படுத்தியவர்கள் தக்க தண்டனையை  இவ்வுலகில் பெற்றனர இந்தப் பட்டியல் நீளமாக இருக்கின்றது;

ஷைகு நாயகத்திற்கு அல்லாஹுத்த ஆலா கியாமத் நாள் வரை இலங்கையில் விசாவைக் கொடுத்து அவர்களின் புனித கப்று ஷரீபை

வண்ண வண்ணமான போர்வைகளாலும், மக்களின் ஓதல்கள் துஆக்களாலும் சிறப்பாக்கி மேன்மையாக்கி வைத்திருக்கின்றான்.

அல்லாஹுத்த ஆலா ஷைகு நாயகத்தையும் அவர்களின் பணியையும் தியாகத்தையும் பொருந்திக் கொண்டான் என்பதற்கு அன்னார் வபாத்தானதிலிருந்து அன்னாரின் புகழ் ஓங்கிச் செல்வதும், அவர்களை எதிர்த்தவர்கள், தப்லீக்கிற்கு முட்டுக் கொடுக்க முன் வந்த வாடகை உலமாக்களின் பெயர் மங்கியும் , தடயம் இல்லாமல் அழிந்து பாழடைந்து கிடப்பதிலும் சிந்திப்போருக்கு நிச்சயம் படிப்பினை இருக்கவே செய்கின்றது

தொடரும்..

## Part -16

இலங்கையில் தப்லீக்ஜமாஅத்திற்கு எதிரான ஷைகுனா ஸூபி ஹளறத்தவர்களின் போராட்டங்கள் பற்றிய வரலாற்றை அன்னார் என்னிடம் நேரில் கூறியவற்றை யும் , அவ்வப்போது வெளியிடப்பட்ட பிரசுரங்கள், நூற்கள் உள்ளிட்ட வற்றையும் , அவற்றோடு தொடர்பானவர்களிடம் நேரில் கேட்டவற்றையும் அடிப்படையாக வைத்து எழுதுகின்றேன் என்பதை முதலில் தெரிவித்துக்கொள்கின்றேன்;

மாத்தறை விவாதத்தில் கலந்து கொண்டோரில் மௌலவி A.R.M.ஸகரிய்யா ஆலிம் ( அதிபர், மத்ரஸத்துல் பாரி, வெலிகம) அவர்களின் பெயர் தவறுதலாகவிடுபட்டுள்ளது!

மாத்தறை விவாதம் பற்றி தப்லீக் ஜமாஅத்தினர் வெளியிட்ட நோட்டீஸில் இவரின்பெயரும் குறிப்பிடப்பட்டுள்ளது.

மாத்தறை விவாதத்தில் தப்லீக் ஜமாஅத்தின் அணியில் கலந்து கொண்டோரில் உருது மொழியையும், மௌலவி இல்யாஸையும், அவரின் குருமார்களையும், வட இந்தியாவில் நடக்கும் தேவ் பந்திகளின் குழப்பங்களையும், அதற்கெதிரான போராட்டங்களையும் தெட்டத் தெளிவாக அறிந்தவர் யாஸீன் மௌலானா மாத்திரமே ஆவார்கள்;

யாஸீன் மௌலானா வட இந்தியாவில் ஓதியவர், தேவ் பந்து குருமார்களின் குழப்பமான கொள்கைகளையும், பித்தலாட்டங்களையும் நேரில்பார்த்தவர்,தேவ் பந்து, பரேலி உலமாக்களுக் கிடையில் நடக்கும் போராட்டத்தின் எதார்த்தம் விளங்கியவர்;

தேவ்பந்து குருமார்களுக்கெதிரான பரேலவிகளின் போராட்டத்தின் மையக்கருத்து அகீதா பற்றியதுதவிர சொந்தக் குரோதமல்ல! இதை அச்சொட்டாக அறிந்த யாஸீன் மௌலானா ஏன் மாத்தறை விவாத மேடையில் மறைத்து இது தனிப்பட்ட குரோதத்தின் விளையாட்டு என்று அரங்கேற்றினார் என்பது எமக்கு இன்னமும் ஆச்சரியமாகத்தான் இருக்கின்றது!

அல்லாஹ்வைப்பற்றிய நம்பிக்கைக்கும், றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களைப் பற்றிய நமது நம்பிக்கை, கண்ணியம் உள்ளிட்டவைக்கு விரோதமான குப்றியத்தான கருத்துக்களை , அவர்கள் ஏராளமாகவே தேவ் பத்திகள் கூறியிருக்கின்றனர்;

இவ்வாறு இவர்கள்கூறியதனால்தான்புனித மக்கா மதீனா உலமாக்கள் இவர்களைக் காபீர்கள் என்றும் , இவர்களைக் காபீர்கள் என்று சொல்லத் தயங்கிய வனும் காபீர் என்றும் ஃபத்வாக் கொடுத்தார்கள்;

மாத்தறை மாநாட்டில் ஷைகுனா ஸூபி ஹளறத் நாயகம வர்கள் இத்தனை விளக்கங்களையும் தனது வாதத்தில் கூறிவிட்டு அதற்கான ஆதாரங்கள் இதோ இருக்கின்றன என்றும் கூறினார்கள்;

விவாதத்தில் வாதியின் குற்றச்சாட்டில் இருக்கும உண்மையைத் தேடுவது தான் நியாயம்! அதற்காகத்தான் உலமாக்கள் கூடினார்கள்;

அந்த விவாத மாநாட்டில் கலந்து கொண்ட இருதரப்பு உலமாக்களும் வஹாபிஸத்தை எதிர்ப்பவர்கள்; அஹ்லுஸ்ஸுன்னத் வல்ஜமாஅத் அகீதா வை கற்றவர்கள், கற்றுக்கொடுப்பவர்கள்;

தப்லீக்கின் தலைவர்கள் மீது வாதியான கண்ணியத்திற்குரிய ஸூபி ஹளறத் நாயகமவர்கள் முன்வைத்த குற்றச்சாட்டுக்கள் குப்றியத்தானவை என்பதை தப்லீக் அணி உலமாக்கள் இரண்டாம் கருத்துக்கு இடமில்லாமல் தெளிவாக அறிந்தவர்கள்;

அப்படியிருக்க, இவர்கள் உண்மையில் அல்லாஹ்வைப் பயந்தவர்களாக இருந்திருந்தால் குற்றச்சாட்டுக்களுக்கான ஆதாரங்களை அலசி ஆராய்ந்து நியாயமான முடிவுக்கு வந்திருக்க வேண்டும்;

அதை முழுமையாகத் தவிர்த்து விட்டு சத்தியக் காவலர், சத்தியம் போதகர்; சத்தியத்தின் போர்வாள் சங்கைக்குரிய ஸூபி ஹளறத் அவர்களை குழப்பவாதியாக சித்தரிப்பதிலேயேகவனம் செலுத்தினார்கள்;

மாத்தறை விவாத மாநாட்டில் வாதியின் முழுக்குற்றச்சாட்டையும் அங்கப்பிசகில்லாமல் அறிந்திருந்த ஜமாலியா யாஸீன் மௌலானா அங்கு பேசியது நம்மை நடுங்கச் செய்கின்றது;

"வட இந்தியாவில் சில பகுதிகளில் ஒருவருக்கொருவர் *குரோதத்தின்* *காரணத்தினால் அவர் இவரை காபிரென்றும், வஹாபியென்றும் அவர் இவரை காபிரென்றும் , வஹாபியென்றும் ஏசிப் பேசி எழுதுவதும், மேடைகளில் பேசுவதும் சகஜமான ஒரு வேலை;

நமது இலங்கையில் மக்கள் எல்லோரும் ஒற்றுமையாகச் செய்து வரும் தப்லீக் ஜமாஅத் வேலையில் எங்களுக்கு மத்தியில் பிரிவினையையும் சண்டை சச்சரவுகளையும் உண்டு பண்ண சூபி ஹஸ்ரத் எத்தனிக்காதீர்களென எடுதியம்பினார்.

ஆதாரம் : மாத்தறை விவாத மாநாடு

(தப்லீக் ஜமாஅத் வெளியீடு) பக்: 3

தப்லீக் ஜமாஅத்தினருக்கு எதிரான குப்று ஃபத்வா குரோதத்தினடிப்படையில் கொடுக்கப்பட்டதென்றும், இலங்கையில் குழப்பத்தை ஏற்படுத் சத்தியப்போராளி , சன்மார்க்கக் காவலர் சங்கைக்குரிய ஸூபி ஹளறத் நாயகமவர்கள் எத்தனிக்கின்றார்கள் என்றும் யாஸீன் மௌலானா சத்தியத்திற்கு எதிராகவும், மனசாட்சிக்கு விரோதமாகவும் நாக்கூசாமல் கூறினார்.

அல்லாஹ்வுக்கு பொய் சொல்ல முடியும்; அர்ஷில் அல்லாஹ் இருக்கின்றான் ,, அவனைச்சுமக்க முடியாமல் அர்ஷு சடசடவென்று அசைகின்றது; அல்லாஹ்வுக்கு இடம் காலம் திசைகள் உண்டு;

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அல்லாஹ்வுக்கு முன்னால் அற்ப அணுவை விடக் குறைந்தவர்கள்; தோட்டியை விடவும் தகுதி குறைந்தவர்கள்; றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மௌத்தாகி மண்ணோடு மண்ணாகி விட்டார்கள்;

தொழுகையில் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் ஞாபகம் வருவது விபச்சாரி, ஆடுமாடு கழுதைகளின் நினைவு வருவதை விடக் கெட்டது;

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அறிந்திருப்பது போன்ற மறைவான அறிவை பேயன் பைத்தியக்காரன் சிறுகுழந்தை கூடத் தான் அறிந்திருக்கின்றன; இதில் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு என்ன விஷேஷமிருக்கின்றது? ;

லாஇலாஹ இல்லல்லாஹ் அஷ்ரப் அலி றஸூலுள்ளாஹ் என்று கூறுவது சரி, ஷபாஅத் கிடையாது! வஸீலாத் தேடுவது ஷிர்க் நபிமார்கள், வலிமார்கள் பேரில் நேர்ச்சை செய்வது ஷிர்க், கந்தூரிக்காக ஆடு,மாடு உள்ளிட்டவையை அறுப்பது ஷிர்க்

அல்லாஹ் அறிவித்துக் கொடுத்த அறிவைக் கொண்டு மறைவானவற்றை றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அறிவார்கள் என்று நம்பினாலும் ஷிர்க்கு, போட்டோ பிடிப்பது ஷிர்க், மணமகன் பூமாலை போடுவது ஷிர்க், மௌலிது ஓதுவது ஹறாம், மௌலிது ஈஸ்டர் ,கன்னியா விழாவை ஒத்துள்ளது, மரணித்தவர்களுக்காக கத்தம் ஃபாத்திஹா ஓதுவது கெட்ட பித்அத்

இன்னும் இவை போன்ற அபத்தங்களுக்காத் தான் பரேலி உலமாக்கள் தேவ்பந்திகளை எதிர்க்கின்றார்கள்; இந்த ஆபாச கொள்கைகளை மக்கள் மத்தியில் பரவ விடாமல் போராடுகின்றார்கள்;

புனித மக்கா மதீனா முப்திகளும் இந்தக் கருத்துக்கள் யாவும் குப்றானவையென்றும் இக்கருத்துக்களைக் கூறியவர்கள் காபீர்கள் என்றும் இவர்களைக் காபீர்கள் என்று கூறத்தயங்கியவனும் காபீர் என்றும் ஃபத்வாக் கொடுத்தார்கள்;

தேவ்பந்திகளின் இக்கூற்றுக்களை நேரில் கண்ட, வாசித்த யாஸீன் மௌலானா தான் மாத்தறை விவாத மாநாட்டில்

குரோதத்தினடிப்படையில் தேவ்பந்திகளை வஹாபி காபீர் என்று பத்வாக்கொடுப்பதாக கூச்சமில்லாமலும் , அல்லாஹ்வைப் பற்றிய அச்சமில்லாமலும் கூறினார்.

தப்லீக் ஜமாஅத் அணியிலிருந்து வசதிபடைத்தவர்களின் பேச்சைக் கேட்டு உண்மையை உரக்கச் தெரிந்தும் மறைத்து விட்டு தன்னையும் ஏமாற்றி , மற்றவர்களின் ஈமானிலும் மண்ணை வாரி வீசிவிட்டார்;

யாஸீன் மௌலானாவின் காட்டமான இந்தப்பதிவை அடிப்படியாக வைத்து ஏற்கனவே தாயாரித்த நாடகத்தை அரங்கேற்றி விவாதத்தை முடித்துக் கொண்டனர் தப்புலீக் ஜமாஅத்து சார்பான நடுவர்கள்;

மாத்தறை விவாதம் 8-8 65 ல் நடந்தது!, யாஸீன் மௌலானா 13-06-1966ல் தமிழ் நாட்டில் வபாத்தானார்கள் ; விவாதம் நடந்து ஒரு வருடத்திற்குள்ளே வபாத்தானார்கள் என்றால் இதற்கு முதல் தானே

தப்லீக் நிறுவனர் மௌலவி இல்யாஸையும், அஷ்ரப் அலிதானவியையும் சந்தித்திருக்க வேண்டும் !,

மாத்தறை விவாத மாநாட்டில் கலந்து கொண்ட மௌலவி A.R.M ஸகரிய்யா ஆலிம்வர்கள் "தப்யுனுல் ஹக்", என்ற பெயரில் 1953ல் வஹாபிகளுக்கு எதிராக ஒரு சிறு நூலை வெளியிட்டார்கள்; இதற்குமுன் கல்முனையில் 15- 07 1951ல் வஹாபிகளுக்கெதிரான விவாதம் நடந்தது

இவ்விவாதத்தின் தொகுப்பும், தீர்ப்பும்" இருவழிக்கு ஒருவழித்தேர்வு" என்ற பெயரில் 1951- செப்டம்பரில் வெளிவந்தது ! இதனை 1997ல் நாம் நடத்திய பலஹவத்துறை மஜ்லிஸுல் உலமாசபை 7வது மாநாட்டில் பிரசுரித்து இலவசமாக வெளியிட்டோம்.

மௌலவி ஸகரிய்யா ஆலியின் மைற்படி நூல்தான் இலங்கையில் வஹாபிகளுக்கெதிராக வெளிவந்த முதல் நூல் என்று சிலர் கூறுவது அப்பட்டமான பொய்யாகும்.

இலங்கையில் வஹாபிகளுக்கெதிரான போராட்டத்தை முதன்முதலில் அம்பாரை மாவட்ட உலமாக்கள் 1947லியே தொடங்கிவிட்டார்கள் என்பது ஈண்டு கவனிக்கத்தக்கது!

வஹாபிஸத்தின் கொள்கைகளை வழிகேடு என்று உரத்துக் கூறிய ஸகரியா ஆலிம் , யாஸீன் மௌலானா, எஹ்யா மௌலானா உள்ளிட்டோர் அதே வஹாபிஸத்தை பரப்பவந்த தப்லீக் ஜமாஅத்தைப் பாதுகாக்க முன் வந்தது ஏன்?

பண பின் புலமில்லாத தர்வேஷி ஹாஜியார் வஹாபிஸத்தைக் கூறினால் வழிகேடு! பணபலத்தோடு தப்லீக் ஜமாஅத் வஹாபிஸத்தைக் கூறினால் சுத்தத் தவ்ஹீதா? தூய இஸ்லாமா? ஏன் இந்த முரண்பாடு!

"அல்லாஹ்வின் அடியார்களில் அல்லாஹ்வை அதிகம் அஞ்சுபவர்கள் உலமாக்கள்", என்று அல்லாஹு ஸுப்ஹானஹு வத ஆலா கூறுவது இவர்களுக்குப் பொருந்தாதா? யூத, கிறிஸ்தவப் பாதிரிமார்களும் இவ்வாறு தானே பணத்துக்குப் பல்லுக்காட்டி வேதத்தில் புரட்டு செய்தார்கள்!

ஒரு வசதி படைத்தவனின் வசதிக்காக அவனைக் கண்ணியப்படுத்தினால் ஈமானில் மூன்றில் இரு பங்கு அழிந்து விடும்!" என்ற ஹதீது இவர்களுக்குக் தெரியாதா? வசதிபடைத்த வரை கண்ணியப்படுத்தியவனின் நிலை இதுவானால் வசதிபடைத்தவரின் பேச்சைக் கேட்டு வழிகேட்டின் வாசலை திறந்து விட்டது?

வழிகேட்டுக்கும், குப்றியத்திற்கும் வெள்ளையடித்தது? வழிகேடின் இருட்டு வழிக்கே வெளிச்சம் போட்டு மக்கள் அச்சமில்லாமல் செல்வதற்கு வாய்ப்பை ஏற்படுத்திக் கொடுத்தது? இப்படி எத்தனை எத்தனை பாதகங்கள் ...

அன்று மாத்தறை மாநாட்டில் கலந்து தப்லீக்கிற்கு முட்டுக் கொடுத்துப் பலப்படுத்தியவர்களும், ஆரம்பத்தில் தப்லீக்கை ஆதரித்த உலமாக்களும் தப்லீக் ஜமாஅத்தின் கோர முகத்தில் விரைவில் கண்டு எதுவும் செய்ய முடியாத கையாலாகாத்தனத்திலிருந்ததை நாம் கண்முன்னே கண்டோம் .

தொடரும்...

**Part - ( 17)**

இலங்கையில் தப்லீக் ஜமாஅத்தைப் பாதுகாக்க அப்போதிருந்த இலங்கை , இந்திய உலமாக்களும், இந்தி ய ஷைகுமார்களும், தங்கள்மார்களும் கையிலெடுத்த துரோகத்தனமான சதி, இலங்கைத் தப்லீக்கில் வஹாபிஸம் இல்லை; அவ்வாறு வருமாயின் , நாங்களும் சேர்ந்து எதிர்ப்போம்! என்ற நயவஞ்சகத்தனமான தீர்ப்பாகும்.

மாத்தறை விவாதம் நடந்து இரண்டு ஆண்டுகள் கழித்து 1967ல் அஷ்ரப் அலிதானவியின் " *பிஹிஷ்தி ஸேவர்"* என்ற உருது நூலின் முதல் பாகம் தமிழில் வெளிவந்தது;,

திருச்சி அப்துர் றஸூல் என்பவர் மூலமாகத் தமிழாக்கி தமிழ்நாடு திருநெல்வேலி "முன்னேற்றம்" அச்சகத்தின் அதிபர் மௌலவி அபுல் ஹஸன் ஷாதுலி என்பவர் தமிழகத்திலுள்ள பிரபலமான பல ஆலிம்களின் மதிப்புரையோடு" *சொர்க்க நகைகள்* " என்ற பெயரில் வெளியிட்டார்;

மூலநூலாசிரியரான அஷ்ரப்அலி தானவியின்" கல்வி ஞான போதனைகளைப் பரப்புவது தான் தப்லீக்கின் நோக்கமென்று" மௌலவி இல்யாஸ் மல்பூழாத்தில் குறிப்பிட்டிருக்கின்றார்;

இதனை மேன்மை தங்கிய சத்தியத்தின் போர்வாளான ஷைகுனா ஸூபி ஹளறத் நாயகமவர்கள் மாத்தறை விவாத அரங்கில் தெளிவாகச் சுட்டிக்காட்டி அஷ்ரப் அலிதானவியின் வழிகெட்ட கொள்கைகளையும் விளக்கிக் கூறினார்கள்.

மௌலவி அஷ்ரப் அலிதானவி வஹாபிஸ மதத்தைத் தழுவிய பின் எழுதிய இந்த நூலில் மௌலவி இஸ்மாயீல் திஹ்லவியின் "தக்வியத்துல் ஈமான்" என்ற ஆபாசக் களஞ்சியத்தில் குறிப்பிட்டிருக்கும் "குப்று,ஷிர்க்" பட்டியலை அப்படியே தழுவியிருப்பதோடு தன்சரக்கிலிருந்தும் புத்திக்கு ஒவ்வாத பல விடயங்களையும் எழுதியுள்ளார்;

மேற்படி நூலில் குப்று ஷிர்க் பற்றிய கருமங்கள் என்று 53 விடயங்கள் அடையாளப்படுத்தப் பட்டுள்ளன; இவற்றில் ஷரீஅத் அனுமதித்தவையும் உண்டு ! ஹறாமாக்கப்பட்டவையும் உண்டு ! அனைத்தையும் குப்று ஷிர்க் பட்டியலில் தன்நிலை தடுமாறி தானவி குறிப்பிட்டிருக்கின்றார்;

தானவியின் குப்று , ஷிர்க் பட்டியலைப் பார்த்தால் அஷ்ரப் அலி தானவி வஹாபிஷ மதத்தைத் தழுவிய பின் தன்னுடைய அறிவை முழுமையாக அடகுவைத்துள்ளதை அவதானிக்க முடிகின்றது !

இவ்வாறு தான் மேற்படி நூலை வெளியிட்டவரும் , அணிந்துரை, மதிப்புரை வழங்கிய பிரபலங்களும் சித்தம் கெட்டவர்களாக செயல்பட்டுள்ளதும் தெரிய வருகின்றது!

ஷிர்க் குப்று பட்டியலில், போட்டோ பிடிப்பது , வஸீலாத்தேடுவது, அலிபக்ஷ், ஹுஸைன் பக்ஸ் , அப்துன் நபி,( அப்துர் ரஸூல்,முகையத்தீன் பிச்சை, நாகூர் பிச்சை, ) உள்ளிட்ட பெயர்கள் வைப்பது;

நபிமார்கள் வலிமார்களுக்கு நேர்ச்சை செய்வது, இவர்களின் பெயரால் பிராணிகளை அறுப்பது, தாயத்து அணிவது, பால்பார்ப்பது;

ஒருவருக்கு முன்னால் ஆடாமல் அசையாமல் நிற்பது , ஒருவருக்கு முன்னால் குனிவது, சுஜூது செய்வது , மணமகன் உள்ளிட்டவர்கள் பூமாலை போடுவது ;உள்ளிட்ட பலவிடயங்களை குப்று ஷிர்க் பட்டியலில் சேர்த்துள்ளார்;

கெட்ட ஃபித்அத் என்ற பட்டியலில் மரணித்த வர்களுக்கு 3,7, 40 பாத்திஹா ஓதுவதையும், புத்திக்கும் புலப்படாத வகையான , முஹர்ரம் மாதத்தில் வெற்றிலை போடாதிருப்பது, மருதோனறி பூசாதிருப்பது, பற்களுக்கு மிஸ்ஸி தேய்க்காதிருப்பது, கணவன்மார்களுடன் மனைவிமார்கள் கூடாதிருப்பது, மனைவி உண்ட தட்டில் கணவன் உண்ணாதிருக்கச் செய்வது, உள்ளிட்ட இன்னும் பலவற்றைச் சேர்த்துள்ளார்;

தப்லீக் ஜமாஅத்தை ஆதரித்த உலமாக்களும், தானவியின் "சொர்க்க நகைகள்" என்ற நூலுக்கு அணிந்துரை ,மதிப்புரை வழங்கியவர்களும் இஸ்லாத்தைப் பற்றியோ , மக்களின் ஈமான் திருடப்படுகின்றது என்பது பற்றியோ மேற்படி நூலில் குறிப்பிடப்பட்டவை நேரடியாக தங்களையே தாக்குகின்றன என்பது பற்றியோ அக்கறையில்லாமலேயே செயல்பட்டிப்பதை மேலோட்டமாகப் பார்க்கும் போதே தெள்ளத் தெளிவாக விளங்குகின்றது!

"சொர்க்க நகைகள் " என்ற நூலை தமிழாக்கியவர் "அப்துர் றஸூல்" ஆவார் இப்பெயர் வைப்பது ஷிர்க் குப்றைச் சேர்ந்தது என்றால், இவரின் நிலை என்ன?, மௌலவி இல்யாஸின் மூதாதையர்களின் பெயர்களில் அலிபக்ஷ் ,ஹுஸைன் பக்ஷ்என்ற பெயர்களும் உண்டு என்பதும் கவனிக்கத் தக்கது!

மேற்படி புத்தகத்தை வெளியிட்ட மௌலவி அபுல் ஹஸன் ஷாதுலி அவர்களும், அணிந்துரை வழங்கிய" றஹ்மத் "மாத இதழின் ஆசிரியர் மௌலவி கலீலுர் றஹ்மான் றியாஜி அவர்களும் இலங்கை வந்த போது லேக் ஹவுஸ் காரியாலயத்தில் போஸ் கொடுத்து பிடித்த போட்டோ 1967- செம்டம்பர்- 07ம் திகதி தினகரனில் பிரசுரமாகியிருந்தது;

போட்டோ பிடிப்பதை ஷிர்க் குப்று என்று குறிப்பிட்ட அஷ்ரப் அலிதானவியின் போட்டோவை இணைய தளத்தில் பார்க்க முடியும், சொர்க்க நகைக்கு மதிப்புரை வழங்கிய சகலரும் போட்டோ பிடித்திருக்கின்றார்கள்; இதன்படி அவர்கள் அனைவரும் யார்?

குப்று ஷிர்க்கை தன்மேலே போட்டவர்களில்லையா? தப்லீக்ஜமாஅத்திற்கு கூசாத்தூக்கிய இலங்கை இந்திய ஆலிம் ஷாக்கள் அனைவருமே கந்தூரி சாப்பாட்டை உண்டவர்கள், கத்தம் பாத்திஹா ஓதியவர்கள் வஸீலாத் தேடியவர்கள், தாயத்து எழுதுவதையும், அணிவதையும் ஆதரித்தார்கள் , எழுதியவர்கள் ;

அப்படியென்றால், இவர்கள் குப்றையும் ஷிர்க்கையும் அவர்களின் ஹகீமுல் உம்மத் ஞானக்கடலின் தீர்ப்பின்படி செய்தவர்களில்லையா?

மாத்தறை விவாதத்தில் வீறாப்புப் பேசியவர்களோ, கொள்ளுப்பிட்டி ஜும்ஆப் பள்ளிவாசலில் தப்லீக்கை ஆதரித்து ஒப்பம் போட்டவர்களோ இப்புத்தகத்தைப் பற்றி இதுவரை மூச்சுக்காட்டவே இல்லை;

"சொர்க்க நகைகள்" என்ற நூல் வந்ததும் சுடச்சுட *"சொர்க்க* *நகைகளா? அல்ல,* *அது நரகவிலங்குகள்!* என்ற பெயரில் மேற்படி நூலில் உள்ள மொழிபெயர்ப்புத் தவறுகளையும், ,மூலநூலாசிரியர் பற்றிய குறிப்பையும், ஷிர்க், குப்று,பித்அத் பற்றிய அஹ்லுல்

ஸுன்னத் வல்ஜமாஅத்தின் ஆகீதாக்களையும் தக்க ஆதாரத்தோடு விளக்கி விட்டு ,

மூலநூலில் குறிப்பிட்டிருக்கும் அபத்தங்களையும் விலாவாரியாக விளக்கி மேற்படி நூலில் கூறப்பட்ட படி அதை மொழிபெயர்த்தவர், வெளியிட்டவர், அணிந்துரை, மதிப்புரை வழங்கிய அனைவரும் குப்று ஷிர்க்கில் மாட்டி தவிப்பதை யும் சுட்டிக்காட்டி அவர்கள் அனைவருக்கும் தனித்தனியாகதனது மறுப்பு நூலை அனுப்பி விளக்கம் கேட்டார்கள்சத்தியக்காவலர் ஷைகுனா ஸூபி ஹளறத் நாயகமவர்கள்.

நரக விலங்குகள் புத்தகம் வந்ததும்,எவரும் மூச்சுக்காட்ட வில்லை ; கடைகளில் விற்பனைக்கு வைக்கப்பட்ட நூல் திடீரென மாயமாகி விட்டது!,

பல ஆண்டுகள் கழித்து அப்துர்றஸூல் தன்பெயரை குலாம்றஸூல் என்று பெயர் மாற்றி , சொர்க்க நகைகள் என்ற பெயரை ", சிறார்களுக்கு ஓர் சொர்க்க நகைகள் என்ற பெயரையும் போட்டு புத்தகத்தின் அளவையும் வடிவத்தையும் மாற்றி நயவஞ்சகத்தனமாக வெளியிட்டார்.

சொர்க்க நகைக்கு வீறாப்புப் பேசிய உலமாக்களிடமிருந்துமூச்சுப் பேச்சு வராததை அவதானித்த தப்லீவாலாக்கள் தாங்கள்வாயில் பாஷாணம் கச்சிதமாக காரியமாறிவிட்டது என்பதை உறுதி செய்து கொண்டு

தேவ்பந்தி குருமார்களால் கூறப்பட்ட குப்றியத்தான கருத்துக்களுக்கு விளக்கம் எழுதி அவர்களை வெள்ளையடிக்க முன்வந்தார் ஆ. கலீல் அஹ்மது கீரனூரி,

*" தப்லீக் ஜமாஅத்தில்* *வஹாபிஸத்தின்* *விஷக்கிருமிகள்"* என்ற நூலில் ஷைகுனா சத்தியத்தின் போர்வாள் ஸூபி ஹளறத் நாயகமவர்கள் தப்லீக் தலைவர்கள் பற்றிக் கூறிய குற்றச்சாட்டுக்களை அப்படியே ஏற்றுக் கொண்டு சப்பைக்கட்டுக் கட்டி

*"தப்லீக்ஜமாஅத் பற்றி* *தவறான* *குற்றச்சாட்டுக்களும்* *தக்க பதில்களும்!"* என்ற பெயரில் ஒரு புத்தகத்தை எழுதி தெளபீக் ஃபுக் டிப்போ நிறுவனத்தால் 1974ல் வெளியிட்டப்பட்டது!

தேவ்பந்து குருமார்கள் வஹாபிகள் தான் என்பதை நூற்றுக்கு நூறு விடுத்தும் ஏற்றுக் கொண்ட தப்லீக்கின் வாடகை உலமாக்கள் அந்த குப்றியத்தான நச்சுக் கொள்கைகளுக்கு விளக்கம் எழுதி நியாயப்படுத்தி நூல் வந்த போது வாய்ச் சொல் வீரர்களான ஆலிம்கள் , ஷைகுமார்கள் , தங்கள் மார்கள், பீரங்கிக் பேச்சாளர்கள் எவருமே ஏறிட்டுப்பார்க்கவுமில்லை;

சத்தியக்காவலர் முத்திரை நபியின் உண்மை வாரிசு தீன் காக்கும் போர்வாள் ஷைகுனா ஸூபி ஹளறத் நாயகம் வர்கள் ",தன்னறிவில்லாத் தக்க பதிலுக்கு தகுந்த விதமாக தலையில் தட்டு! என்ற பெயரில் தக்க மறுப்பெழுதி வெளியிட்டார்கள்.

தேவ்பந்திகளின் அபத்தமான அகீதாக்களையும் , அஹ்லுஸ் ஸுன்னத் வல்ஜமாஅத்தின் ஆகீதாக்களையும் ஆதாரத்தோடு பட்டியலிட்டு, தேவ்பந்திகளின் வழிகேட்டுக் கொள்கைகளை ஏற்பதனால் ஏற்படும்

சீர்கேடுகளையும் விலாவாரியாக விளக்கி " *இள்ஹாறுல் ஹக்!* சத்தியப்பிரமாணம்! என்ற பெயரில் ஒருநூலை அச்சிட்டு விநியோகித்தார்கள்;

சத்திய இஸ்லாம் மார்க்கத்தில் விழுந்த பாரிய இக்கறையை அகற்றுவதற்காக எவருடைய பண, ஆள் பின் பலமில்லாமல்தனித்து நின்று தனது சொந்த பணத்தில் நூல்களையும், நோட்டீஸுகளையும் பிரசுரித்து வெளியிட்டார்கள்.

தப்லீக் ஜமாஅத் வருவதற்கு முன், குரு நாகல் பரகஹ தெனியா அப்துல் ஹமீது தர்வேஷியாரின் வஹாபிக்கொள்கைகளுக்கு மறுப்பெழுதிய ஸக்கரியா ஆலிம் உள்ளிட்டவர்கள் கூட தப்லீக் வழிகேடு களைப் பார்த்து மௌனியாகி வேடிக்கை பார்க்கவே செய்தனர்.

தப்லீக் ஜமாஅத் உலமாக்களை ஒதுக்கிவிட்டு ஒன்றுமறியாத பணக்கார முட்டாளகளை அமீராக்கி அவர்களைப் பேச வைத்து ஆலிம்களைக் கேட்க வைக்கும் போது மௌனம் காத்த போதே அவர்களின் சொல் ஆளுமையும் ,கண்ணியமும், சன்மார்க்க உணர்ச்சியும் கட்டோடு உரியப்பட்டுள்ளதென்பதைக் கூட விளங்காதவர்களாகவே இருந்தார்கள்.

தப்லீக் ஜமாஅத் ஆளணியால் பலம் பெற்றதும் ஆரம்பத்தில் கைகொடுத்த ஆலிம் கள் உள்ளிட்ட அனைவரும் ஒதுக்கப்பட்டதுமட்டுமல்ல அவர்களுக்கும், அவர்களின் தரீக்கா வுக்கும் வேட்டுக்கள் தீர்க்கப்பட்டன!

அப்போது தான் கண்திறந்தார்கள்! என்ன பயன்? எல்லாமே காவுகொள்ளப்பட்டுளன!

கோமணத்தை மட்டுமாவது காப்பாற்றிக் கொள்வோம் என்ற நிலையில் தான் பிற்காலத்தில் சிலர் தப்லீக்கிலிருந்து விலகி நின்றார்கள். ஆனாலும் என்ன பயன்?

சல்லுகளைத் தவிர்த்து அனைத்தும் வெள்ளத்தில் அடித்துச் சென்றாகி விட்டன.

( 18 )

இலங்கையிலும் சரி, தமிழகத்திலும் சரி தப்லீக் ஜமாஅத் பற்றிய விவாதம் முதன்முதலில் மாத்தறையில்தான் நடந்தது! அதுபோல் விவாதம் நடக்காமலும் , வாதியின் வாதத்தில் உள்ள உண்மையை கண்டறிய முயற்சிக்காமலும் தீர்ப்புக் கூறிய ஒரே இடமும் மாத்தறை விவாத மேடை தான்.

இவ்விவாத அரங்கிற்கு தப்லீக் சார்பாக கலந்து கொண்டவர்களுள் மௌலவி, ஷம்சுத்தீன் ஆலிம் பாக்கவி , மௌலவி, நிஸார் குவ்வத்தி ஆகிய இருவரும் முக்கியமானவர்களாகும்;

1- மௌலவி ஷம்சுத்தீன் பாகவி அவர்கள் ஆரம்பத்தில் குவ்வதுல் இஸ்லாம் மத்ரஸாவில் கற்று பின்னர் பாக்கியாத்துஸ் ஸாலிஹாத்தில் பட்டம் பெற்றவர்;

   தனது ஆசான் உமர் ஹஸரத்தின் அழைப்பில் இலங்கை வந்து நளீமிய்யா மத்ரஸா வில் ஓதிக் கொடுத்தவர்; பின்னர் மஹரகம நளீமிய்யா அரபுக் கலாசாலையில் அதிபராக நீண்ட காலம் கடமை செய்தவர்;

   இலங்கையில் முதன்முதலில் வஹாபிஸத்தை பாடத்திட்டத்தில் இணைத்து மாணவர்களை உருவாக்கிய முதல் கல்லூரி இதுவாகும்;

இக்கலாசாலையின் முன்னாள் அதிபர் உமர் ஆலிமின் மாணவரான இவர் தனது ஆசானின் அடியொற்றி செயல்பட்டவர் என்று அகில இலங்கை ஜம்இய்யத்துல் உலமா சபை வெளியிட்ட " செரன்தீப் கண்ட சான்றோர்கள்" என்ற நூலில் குறிப்பிடப்பட்டுள்ளது!

தப்லீக் ஜமாஅத்தில் வஹ்ஹாபிஸம் கிடையாது என்று கோடிட்டுக் காட்ட வந்தவர்களுக்குள்ளேயே வஹ்ஹாபிஸத்தின் போதகர் இணைந்திருந்தது ஆச்சரியமே!,

2- வது நபர் மௌலவி நிஸார் குவ்வத்தி ஆவார்;

இவரைப்பற்றி " *செரன்தீப் கண்ட* *சான்றோர்கள்"* என்ற நூலில் பின்வருமாறு எழுதப்பட்டுள்ளது!

"கொழும்பில் தவ்ஹீத் அமைப்பை உருவாக்கிய இவர் கொழும்பை பிறப்பிடமாகக் கொண்டவராவார்கள், இருபதாவது வயதில் மார்க்க அறிவை இந்தியாவில் உள்ள குவ்வத்துல் இஸ்லாம் அரபுக் கல்லூரியில் பெற்றுக்கொண்டு நாடு திரும்பிய இவர்கள் பாடசாலை ஆசிரியராகக் கடமை யாற்றினார்கள் ;

ஆரம்பத்தில் தப்லீக் ஜமாஅத்துடன் இணைந்து செயற்பட்ட இவர்கள் மாளிகாவத்தை "மோதர" போன்ற பகுதிகளில் அமீராகவும் இருந்தார்கள்.

சில வருடங்களுக்குப் பிறகு தவ்ஹீத் ஜமாஅத்தை உருவாக்கிய இவர்கள் "வான்சுடர்" எனும் பெயரில் சஞ்சிகை ஒன்றையும் வெளியிட்டார்கள்; பல சிறந்த கட்டுரைகளையும் , ஆக்கங்களையும்

சுமந்து வந்த இச்சஞ்சிகை ஹழ்ரத் அவர்கள் வபாத்தாகிய 1969ஆம் ஆண்டு வரை வெளி வந்து கொண்டிருந்தது .

எழுபதாம் ஆண்டுகளில் தூய அகீதாவை பறைசாற்ற இந்த சஞ்சிகை போன்று வேறு சஞ்சிகைகள் காணப்படவில்லை"

பக்கம்: 87

மேற்படி நூலின் ஆரம்பத்தில் இவரின் பிறப்பு: 1922,06,17 என்றும், வபாத்: 1985, 11, 22ம் குறிப்பிட்டுள்ளது! கட்டுரையில் வபாத் தான வருடம் 1969என்று குறிப்பிடப்பட்டிருக்கின்றது? இப்படியான முரண்பாடுகள் உலமா சபையின் புத்தகத்தில் பரவலாக விரவிக் காணப்படுகின்றன.

எது எப்படியாயினும் மேற்படி இருவரும் குவ்வத்துல் இஸ்லாமில் கற்றவர்கள் என்பதும் இருவரும் வஹாபிஸ சிந்தனை கொண்டவர்கள் என்பதும், ச.க. சான்றோர் நூலின் மூலம் தெரிய வருகின்றது.

இலங்கையில் வஹாபிஸத்தை நாங்களும் சேர்ந்து எதிர்ப்போம் என்று விவாத அரங்கில் மார்தட்டியவரில் ஒருவர் அப்போதே வஹாபிஸத்தைப் போதிக்கின்றார்; மற்றவர் " தவ்ஹீத் ஜமாஅத்தை உருவாக்கி வஹாபிஸ நச்சுக்கருத்துக்களை விதைக்கின்றார்;

தப்லீக் ஜமாஅத்தில் அமீராக இருந்தவர் மூலமாகத் தான் இலங்கை வரலாற்றில் முதன்முதலாக வஹாபிஸ நச்சுக்கருத்துக்கள் சாக்கடை சஞ்சிகை மூலமாக பரப்பப்பட்டது என்பது ஈண்டு கவனிக்கத்தக்கது!

மாத்தறை விவாத மாநாட்டில் கலந்து தப்லீக்கைப் பாதுகாக்க கூசாத்தூக்கியவர்கள் தங்களோடே இருந்த இருவருமே வஹாபிஸத்தை பரப்ப முன்வந்ததைக் கண்டிக்கவோ, அதற்கெதிராக வாய்திறக்கவோ இல்லை;

இலங்கைத் தப்லீக் ஜமாஅத்தைச் சேர்ந்தவர்களிடம் வஹாபிஸம் கிடையாது என்று மார்தட்டியவர்களின் உள் வீட்டுக்குள்ளே இருந்த வஹாபிஸத்தை மறைத்து தப்லீக்கிற்கு வெள்ளையடிக்க வேகம் காட்டியுள்ளனர்;

விவாதம் நடந்த சில வருடங்களுக்குள்ளேயே தப்லீக்நிற்கும் ஒழித்துக் கொண்டிருந்த வஹாபிஸ நாகம் சீறிப்பாய்ந்து வந்து நஞ்சைக் கக்கியது !

தப்லீக்ஜமாஅத்தைப் பிரதிநிதிப்படுத்தும் இப்போதைய அ.இ.ஜ.உ.சபையின் தலைமைப்பீடத்தால் இந்த வழிகேடனுக்கு புகழாரம் சூட்டும் துணிவை வளர்த்துக் கொடுத்தவர்கள் அன்று தப்லீக்கிற்கு கூஜாத்தூக்கியவர்கள் தான் எப்படி மறைக்க முடியும்?

நிஸார் குவ்வத்தியின் வான்சுடரில் வந்த சில கட்டுரைகளுக்கு காலி பஹ்ஜத்துல் இப்றாஹிமியாவின் முன்னாள் அதிபர் அஜ்வாத் ஆலிம் அவர்கள் மறுப்பாக பல பிரசுரங்களை அவருக்குப் பரிச்சயமான மொழியில் எழுதினார், ஆனால் ,

அதே வஹாபிஸத்தை ஆதரித்தும் , வஹாபியே கூறாத றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களைப் பற்றிக் கூறிய கேடுகெட்ட தேவ்பந்திகளைப் பற்றி இவர் வாய் திறக்கவே இல்லை;

புனித மக்கா, மதீனா உலமாக்கள் எந்தக் கருத்துக்களை குப்று என்றும், இதைக் கூறியவரை காபிர் என்று சொல்லத் தயங்கிய வரும் காபிர் என்றும் கூறினார்களோ அதே கருத்துக்களை நியாயப்படுத்தி வெளிவந்த " தப்லீக் ஜமாஅத் பற்றி தவறான குற்றச்சாட்டுக்களும் தக்க பதில்களும்!, " என்ற நூலைப் பற்றி இலங்கையிலும் சரி தமிழகத்திலும் சரி எவரும் வாய் திறக்கவே இல்லை !,

மாறாக இதை எழுதிய கலீல் அஹ்மத் கீரனூரி இலங்கை வந்த போது அவருக்கு வரவேற்புக் கொடுத்து ஆதரவளித்தனர்; தப்லீக் ஜமாஅத்தின் வருகைக்குப் பின் இஸ்லாத்தின் எடுகோளின் சூத்தரமே மாறிவிட்டது!

முதலில் சத்தியத்தை அளவு கோலாகக் கொண்டு உண்மையைத் தீர்மானித்தனர்; இப்போது ஆளையும், வேஷத்தையும், நடிப்பையும் அளவு கோலாகக் கொண்டு சத்தியத்தைத் தீர்மானிக்கின்றனர்;

ஏழாம் நூற்றாண்டில் ஹதீதுத் துறையிலும் , ஏனைய துறையிலும் புரட்சிகரமான மாற்றத்தை ஏற்படுத்தியவர்களுள் இப்னுத் தைமியாவும் ஒருவர்; இவருடைய மாணவர்கள் ஏராளம்!, இவர்களுள் தகபி, இப்னுல் கைய்யூம் விஷேடமானவர்கள் ,

பிற்காலத்தில் மிகச் சிறந்த ஹதீதுறை பேரறிஞர்களான இமாம் ஸுப்கி, இப்னு ஹஜர் அஸ்கலானி, இப்னு கதீர், இப்னுல் அதீர் உள்ளிட்ட பலரைக் குறிப்பிடலாம்;

இப்னு தைமியா நிறைய நூற்களை எழுதினார் , பல்துறைகளில் பாண்டித்துவம் பெற்றிருந்தார் என்று கூறி அவரின் வழிகேட்டை எவரும் ஆதரிக்கவில்லை; காரணம், வழிகேட்டின் அச்சாணியான

குப்றும், ஷிர்கும் ஒருவரின் திறமையையோ, ஆக்கங்களையோ, வணக்கங்களையோ, பரம்பரையையோ பார்க்காது!

ஈமானும், தவ்ஹீதும் எவ்வாறு மனதின் தொழிலோ, அவ்வாறுதான் குப்றும் , ஷிர்க்குமாகும்.!

ஈமானிய நம்பிக்கைக்குப் பங்கமான ஏதாவது ஒருகருத்தையாவது அல்லது ஒரு வார்த்தையாவதுஒருவர் கூறினால் அவர் காபிராகி விடுவார்; அதே வினாடியில் அவருடைய சகல அமல்களும் அழிந்து விடும்.!

"பல்ஆம் இப்னு பாஊறா " லவ்ஹுல் மஹ்பூழ் ஏட்டைப்பார்க்கும் வரை ஏற்றம் பெற்றவர் ; ஒரே ஒரு செயலால் அனைத்தையும் இழந்து போனார்,

தப்லீக்ஜமாஅத்தினர் தங்களின் வேலையை நியாயப்படுத்த அதில் ஈடுபடுவோரின் தரங்களை, செல்வாக்கினை உயர்த்திக் காட்டி பேசுவது வழக்கம்! அவ்வாறுதான் தேவ்பந்தி குருமார்களின் குப்ரியத்தை மறைக்க அவர்கள் எழுதிய நூற்களை பட்டியலிட்டுக்காட்டி அவரை புனிதப் படுத்தி மேம்படுத்துவார்கள்;

உ+மாக, இந்தியாவில் வஹாபிஸத்தை அறிமுகப் படுத்திய இஸ்மாயீல் திஹ்லவியை அவர் எழுதிய " வஹ்தத்துல் வுஜூத் பற்றிய " அபகாத்" என்ற பெரு நூலைக் காட்டுவார்கள்;

இவரின் ஷைகாகிய " செய்யித் அஹ்மத் ரே பரேலவியை நியாயப்படுத்த" அவர் அஹ்லுல் பைத்தைச் சேர்ந்தவர் " என்பார்கள்;

அஷ்ரப் அலி தானவியின் கேடுகெட்ட நாற்றமடிக்கும் குப்றியத்தை மறைக்க, அவர் ஆயிரம் கிதாபுகள் எழுதிய மேதை என்பார்கள்; ஆளைக்காட்டி மக்களை ஏமாற்றும் திறமை தப்லீக்கில் புரையோடிப்போன ஒன்றாகும்.

பேராசிரியர் நிக்கல்சன் ஷைகுல் அக்பர் முஹையத்தீன் இப்னு அரபி றழியல்லாஹு அன்ஹு அவர்களின் நூற்களுக்கும், கவிதைகளுக்கும், மௌலானா ஜலாலுத்தீன் றூமி றஹ்மத்துள்ளாஹி அலைஹி அவர்களின் மஸ்னவிக்கு விளக்கம் எழுதியதாலும் அவரின் குப்று நீங்கி விடப்போவதில்லை;

கீழ்யேத்தவாதிகள் ஹதீதுத் துறையில் அபாரமான ஆராய்ச்சி செய்திருக்கின்றார்கள் என்பதனால் முஹத்திதீன்களாகி விடுவதில்லை;

ஒருவரின் தகுதி என்பது , அவர் ஈமானின் அடித்தளத்திலிருந்து தக்வாவின் உச்சியில் ஜொலிக்கும் போதுதான் பிரகாசிக்குமே தவிர வெறுமனே ஏட்டறிவாலோ, நூற்களை எழுதிக் குவிப்பதாலோ அல்ல! என்பதை புரிந்து கொள்ள வேண்டும்.!

மாத்தறை விவாதத்தில் கலந்து தேவ்பந்திகளுக்கு துதிபாடி விவாதத்தை நடக்க விடாமல் மட்டந்தட்டி முட்டாள்தனமான தீர்ப்பைக் கொடுத்து மக்கள் வழி கெடக் காரணமானவர்களை நாம் கோடிட்டு க் காட்டும் போது சிலருக்கு வலிக்கிறது ! எம்மீது புழுதியை வாரி இறைக்கின்றனர்;

நாம் மௌலவிப் பட்டம் வாங்கிய 1976ம் ஆண்டு தொடக்கம் இப்படியான பல சண்டமாருத புயல்களுக்கெல்லாம் தாக்குப் பிடித்துக்

கொண்டுதானிருக்கின்றோம். இன்ஷா அல்லாஹ் இதன் பிறகும் இருப்போம்.!

ஷைகுனா ஸூபி ஹளறத் நாயகமவர்களை எப்படியாவது இலங்கையிலிருந்து அனுப்ப வேண்டும் என்று தப்லீக் ஜமாஅத்தினர் பல முயற்சிகளை மேற்கொண்டும் பலிக்கவில்லை ; இறுதியாக நெருங்கிய ஓர் உறவுக்காறரை அணுகி ,

தப்லீக்கில் இப்போது காடையர்கள் அதிகரித்துவிட்டார்கள், யாராவது எடக்கு முடிக்காத ஏதாவது செய்து நடக்கக்கூடாததுநடுத்தெருவில் நடந்துவிட்டால் அது எல்லோருக்கும் அவமானமாகி விடும்!,

உடலில் தெம்பு இருக்கின்ற காலத்தில் தப்லீக்கை எதிர்த்தீர்கள் ! , தனியாக திரிந்தீர்கள் ! இப்போது வயது எண்பதைக் கடந்து தளர்ச்சி ஏற்பட்ட நிலையில் நீங்கள் ஊருக்குச் செல்வது தான் சரி என்று பவ்வியமாகக் கூறினார்; இவ்வாறு கூறுவதற்கு சில காரணங்கள் இருந்தன;

ஒரு தினம் ஷைகுனா ஸூபி ஹளறத் நாயகமவர்கள் கொழும்பு புறக்கோடையில் தனியாக நடந்து செல்லும் போது ஒரு தப்லீக் கேடி பின்னால் வந்து அவர்களின் துருக்கித் தொப்பியை அபகரித்துச் சென்று விட்டான்;

அவர்களிடம் இருந்தது ஒரே ஒரு தொப்பி தான்!, பொதுவாக கடையில் கிடைக்கின்ற தொப்பியல் துருக்கில் தொப்பி!

ஷைகு நாயகம வர்கள் தோளில் கிடந்த சால்வையால் தலையை மூடிக் கொண்டு நேரே மூன்றாம் குறுக்குத் தெருவிலிருக்கும் மேமன் பள்ளிவாசலுக்கு வந்து முறாக்கபாவிலிருந்து கொண்டார்கள்;

இச்செய்தி அப்பகுதியில் பரவியது ; ஒரு மேமன் பாய் நேரே தன்வீட்டுக்கு ஓடோடிச் சென்று தன்னிடமிருந்த புது துருக்கித் தொப்பியைக் கொண்டு வந்து கொடுத்து ஆறுதல் கூறினார் ,

என்னிடமிருந்தது பழைய தொப்பி !, கிடைத்தது! புதுத் தொப்பி !, இந்தப் புதிய தொப்பி கிடைக்க வேண்டுமாயின், பழைய தொப்பி போகத்தானே வேண்டும்.! அல்லாஹ் என்மீது எவ்வளவு இரக்கமாக இருக்கின்றான் பார்த்தீர்களா என்று கூறி அல்லாஹ்வுக்கு நன்றி கூறி தொப்பி கொண்டு வந்து கொடுத்தவரையும் ஆறுதல் படுத்தி அனுப்பினார்கள்;

இவ்வாறு தான் ஜும்ஆவுக்காக கொழும்பில் வழக்கமாக ஹனபி மேமன் பள்ளிவாசலுக்குத் தான் செல்வார்கள்; செருப்பை வைப்பதற்கென்று அங்கு ஒழுங்கு உண்டு! அந்த இடத்தில் தான் வைப்பார்கள்; இதைக் கவனித்த சில வம்பர்கள் தொடர்ச்சியாக செருப்பைத் திருடத் தொடங்கி விட்டார்கள்;

ஷைகு நாயகமவர்கள் விஷேடமாக தோலால் தயாரித்த இரு பட்டி கொண்ட செருப்பையே அணிவார்கள் ; அது கடையில் கிடைக்காது !, பின்னர் இடமாற்றி தனியான இடத்தில் வைத்த போதும் திருட்டு நடக்கவே செய்தது; பின்னர் ஒரு கைப்பையில் போட்டு தன்னோடேயே வைத்துக் கொள்வார்கள்; இப்படியான தொல்லைகளைக் காரணம் காட்டியே உறவு முறைக்காறர் அவ்வாறு கூறினார்;

இவர் கூற்றின் அடியாளத்தைப் புரிந்து கொண்ட ஷைகுநாயகமவர்கள், அவரை ஏறிட்டுப் பார்த்து , நான் தொழுததனாலோ,மற்றும் அமல்கள் செயாததனாலோ அல்லாஹ் என் குற்றத்தை மன்னிப்பான் என்ற நம்பிக்கை என்னிடமில்லை!

ஒருக்கால் அல்லாஹ் என் குற்றத்தை மன்னித்து ஏனக்கு சொர்க்கம் தருவதாயின், " நான் தப்லீக் ஜமாஅத்தை எதிர்த்தனால் தான் கிடைக்கும் என்று ஆதரவு வைக்கின்றேன்! அதனால் ,எனது மூக்கில் மூச்சு இருக்கும் வரை இந்த வழிகேட்டுக் கூட்டத்தை எதிர்க்கவே செய்வேன்.!

ஒருக்கால் நான் தெருவில் நடந்து செல்லும் போது ஏதும் நடக்கக்கூடாதது நடந்து விட்டால் " மாமா அல்லாஹ்வுடைய பாதையில் ஷஹீதாகி விட்டார் என்று சந்தோஷப்படுங்கள் !, என்று அழுத்தம் திருத்தமாக கூறினார்கள்; இதைக் கேட்டு அடங்கிய அவர் தலையைக் கவிழ்த்தவராக அவ்விடம் விட்டு மெதுவாக நகர்ந்து போனார்;

இந்த சம்பவத்தை என்னிடம் கூறி தப்லீக் கார் எப்படியான தந்திரமான வழிகளிலெல்லாம் எம்மை அணுகின்றார்கள் பாருங்கள்! என்று கூறி எமக்கும் உரமிட்டார்கள். கொள்கை வேங்கை ஷைகு நாயகமவர்கள்!

தொடரும்....

## Part - (19)

ஷைகுனா ஸூபி ஹளறத் நாயகமவர்கள் தப்லீக்ஜமாஅத்தை எதிர்த்தனால், அவர்கள் முன்னின்று செய்கின்ற காரியங்கள்

அனைத்தையும் எதிர்ப்பது என்ற முடிவுக்கு தப்லீக் சார்ந்த உலமாக்கள் தள்ளப்பட்டார்கள்; இதற்கான எடுத்துக்காட்டுக்கு " திருமுடி" விவகாரத்தைக்கூறலாம்.!

1965 ஆண்டு என்று நினைக்கின்றேன்; கொழும்பில் உள்ள ஒரு மேமன் பாய் மும்பாயிலிருந்து றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் ஒரு " திருமுடி"யை வாங்கி வந்து மேமன் பள்ளிவாசலில் றபீஉல்அவ்வல் ஆரம்பம் தொடக்கம் பன்னிரண்டாம் நாள் வரை மக்கள் பார்வைக்கு வைக்கப்பட்டது!

திருமுடி யைப் பார்ப்பதற்கு மக்கள் வெள்ளம் அலைமோதியது! இதைச் சகிக்காத தப்லீக் சார்ந்தவர்கள் பலரையும் தூண்டி இதனைக் கண்டித்து அறிக்கை விட்டனர்; குறிப்பாக கொழும்பு உலமா சபை, சோனகமுஸ்லிம் கலாச்சார சபை , முஸ்லீம் லீக், வை.எம், எம், ஏ உள்ளிட்ட அனைத்து அமைப்புக்களும், திருமுடியைக் காட்சிப்படுத்துவது " "ஷிர்க்" என்னும் கொடிய குற்றம் என்று தினகரன், வீரகேசரி உள்ளிட்ட பத்திரிக்கைகளில் அறிக்கை விட்டன;

முட்டாள் தனமான இவர்களின் அறிக்கைகளுக்கு தக்க ஆதாரங்களோடு ஷைகுனா ஸூபி ஹளறத் நாயகமவர்கள் மேற்படி பத்திரிக்கைகளில் கட்டுரைகள் எழுதினார்கள்;

ஆயினும் ; எதிர்ப்பாளர்களின் வலுவான எதிர்ப்பின் காரணமாக வருடத்தில் றபீஉல் அவ்வல் பிறை பன்னிரண்டில் மாத்திரம் அதிகாலை நான்கு மணி தொடக்கம் விடியற்காலை ஏழுமணி வரை மக்கள் பார்வைக்கு வைப்பது என்று மேற்படி பள்ளிவாசல் நிருவாகத்தோடு சமரசமாக முடிவு காணப்பட்டு விவகாரம் முடிவுக்குக் கொண்டு வரப்பட்டது! ;

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் இறுதி ஹஜ்ஜின் போது தங்களின் திருமுடியைக் களைந்து ஸஹாப்பாக்களுக்கு பங்கு வைத்ததும்,ஸஹாபாக்கள் அதனை உச்ச கண்ணியத்தோடு வைத்திருந்ததும்,அதனை மற்றவர்கள் தரிசித்ததுபறக்கத் பெற்றதும்,அதனை ,நோய் நிவாரணியாக ப்பயன்படுத்தியதும் ஆதாரபூர்வமான ஹதீதுப் பெரு நூற்களில் பதியப்பட்டுள்ள திட்டவட்டமான உண்மையாகும்;

இந்த உண்மைகளை யெல்லாம் பக்கம் பக்கமாக ஷைகு நாயகமவர்கள் விளக்கி எழுதிக் காட்டியும் கூட இலங்கை உலமாக்களின் கண்கள் குருடாகி விட்டன,

பின்னர்,திருமுடி விவகாரம் ஒரே சமரசத்திற்கு வந்த பின், திருமுடியை கண்ணியமாக வைப்பதற்கான முழு ஏற்பாட்டையும் ஷைகுனா ஸூபி ஹளறத் நாயகமவர்களே செய்தார்கள்;

கொழும்பு இரண்டாம் குறுக்குத் தெருவிலுள்ள பல்லாக்கு லெப்பைக் கம்பனியில் சுத்தமான வெள்ளியில் ஒரு பெட்டி செய்து, அதில் நான்கு மூலையிலும் சிறு குப்பா அமைத்து உள்ளே ஒரு சிறு பெட்டி செய்து அதற்குள் கஸ்தூரி நிரப்பிய கிண்ணத்தில் திருமுடி வைக்கப்பட்டது;, அப்பெட்டியின் நான்கு பகுதிகளிலும் ஸலவாத் எழுதப்பட்டுள்ளது;

இந்த ஸலவாத்தை ஷைகு நாயகம் ஸூபி ஹளறத் நாயகமவர்கள் கைபட எழுதிக் கொடுத்து அக் கையெழுத்தையே பெட்டியின் வெளிப்பகுதியில் பதிப்பிக்கப்பட்டுள்ளது !,

இதைச் செய்வதற்கு அப்போது ஆறாயிரம் ரூபாய் செலவானதாக ஷைகுநாயகமவர்கள் என்னிடம் கூறினார்கள்; பின்னர் திருமுடி மேமன் பள்ளிவாசலுக்கு வக்பு செய்யப்பட்டு ஒவ்வொரு வருடமும் றபீஉல் அவ்வல் பிறை பன்னிரண்டில் அதிகாலை 4மணி தொடக்கம் காலை 7மணிவரை மக்கள் பார்வைக்கு வைக்கப்படும்.

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் திருமுடியைப் பற்றி ஸஹீஹான ஹதீதுப் பெருநூற்களிலும், வரலாற்று நூல்களிலும் பரவலாக எழுதப்பட்டுள்ளது; தவிர உலகத்தின் பல்வேறு இடங்களில் மக்கள் பார்வைக்கும் வைக்கப்பட்டுள்ளது;

குறிப்பாக டில்லி ஜாமிஆ மஸ்ஜிதில் திருமுடி உள்ளிட்ட றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் பல புனித சின்னங்களை தினசரி பார்க்க முடியும்.பலமுறை அவற்றைத் தரிசிக்கும் பாக்கியம் நமக்கும் கிடைத்தது! அல்ஹம்துலில்லாஹ்!

" திருமுடி இறக்கிய படலம்" என்று தமிழிலும் ஒரு சிற்றிலக்கியம் இருக்கின்றது ! இவ்வாறு எதுவாயினும் ஷைகுனா ஸூபிஹஸறத் அவர்கள் முன்னின்று செய்யும் அனைத்து காரியங்களையும் தடுப்பது என்று வக்கிற புத்தியோடு அப்போதைய உலமா சபை செயல்பட்டது!

ஜாஹிலியாக் காலத்தில் வாழ்ந்த காபிர்களிடத்தில் ஏழு வகையான குப்றுகள் காணப்பட்டன; அவற்றுள் ஒன்று ", முன்னோர்களயும், தலைவர்களையும் கண்மூடித்தனமாகப் பின்பற்றுவது; இவர்களின் கூற்று அறிவுக்குப் பொருந்தாத அசிங்கமானவையாக இருந்தாலும்

சரி, உண்மையைத் தெரிந்து கொண்டே வரட்டுத்தனமாகப் பின்பற்றினார்கள்;

அவ்வாறு அவர்கள் பிடிவாதமாகப் பின்பற்றுவதற்கு ஷைத்தான் அச்செயலை அவர்களுக்கு அழகாகக் காட்டியதும், அவர்கள் அவர்களின் மனோ இச்சைக்கு இடம் கொடுத்து பின்பற்றியதுமே காரணமாகும்; மனோ இச்சைக்கு வழிபடுவோரை ஷைத்தான் வழிகெடுத்து நரகத்தில் அவர்களைச் சேர்த்து விடுவான் என்று திருக் குர்ஆனில் அல்லாஹ் பல்வேறு இடங்களில் கூறுகின்றான்;

தப்லீக்ஜமாஅத்திற்கு எதிராக ஷைகுனா ஸூபி ஹளறத் நாயகமவர்கள் வெளியிட்ட முதல் நூல்" தப்லீக் ஜமாஅத்தில் வஹாபிஸத்தின் விஷக்கிருமிகள்!" ஆகும்!

இதில் தப்லீக் ஜமாஅத்தின் உண்மை முகம், தேவ்பந்திகளின் அபத்தமான கொள்கைகள்;, இவர்களோடு மௌலவி இல்யாஸுக்கான உறவு, வஹாபிஸத்தின் வரலாறு , வஹாபிஸத்திற்கும் இல்யாஸுக்குமிடையிலுள்ள உறவு , தேவ் பந்து தலைவர்களுக்கு எதிராக புனித மக்கா, மதீனா முப்திகள் வழங்கிய தீர்ப்பு- ஃபத்வா- உள்ளிட்டவைகளோடு இறுதியாக முஸ்லிம் சமுகத்திற்கான எச்சரிக்கையும் அடங்கியுள்ளது !

ஷைகுனாவின் மேற்படி புத்தகம் வெளி வந்து ஏறக்குறைய இருபது ஆண்டுகளுக்குப் பின், கலீல் அஹ்மத் கீரனூரி என்பவர்", தப்லீக்ஜமாஅத் பற்றி தவறான குற்றச்சாட்டுக்களும், தக்க பதில்களும்" என்ற பெயரில் ஒரு புத்தகத்தை வெளியிட்டார்;

இந்தப் புத்தகம் பல பதிப்புக்களாக வெளிவந்து விட்டன; இதில் ஷைகுனா ஸூபி ஹளறத் அவர்கள் தப்லீக் ஜமாஅத்திற்கு எதிராக முன்வைத்த குற்றச்சாட்டுக்களை மறுத்துள்ளாரா? அல்லது மழுப்பி ஒப்புக் கொண்டாரா? என்பதை நடுநிலையிலுள்ள வாசகர்கள் விளங்க வேண்டும் என்பதற்காக முன்வைக்கின்றேன்;

தப்லீக் ஜமாஅத்தினர் ஷைகுனா ஸூபிஹளறத் நாயகமவர்கள் முன்வைத்த குற்றச்சாட்டுக்கள் தவறானவை என்று தலைப்பிட்ட கீரனூரியார் எவ்வளவு கில்லாடியாக நயவஞ்சகத்தனமாக மூளைச்சலவை செய்கின்றார் என்பதையும் வாசகர்கள் கவனமாகப் படித்து புரிந்து கொள்ள வேண்டும்;

கீரனூரியார் பதிலின் மூலமாக, தப்லீக் ஜமாஅத்திலுள்ளவர்களின் ஈமான் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை விட, தேவ் பந்து ஷைகுமார்களின் கண்ணியம் உயர்வானது ; அவர்கள் அப்பழுக்கில்லாமல் பாதுகாக்கப்படவேண்டும் என்பதில் அவர்கள் காட்டும் அக்கறையையும் தெட்டத் தெளிவாகக் காணமுடியும்.!

த.ஜ.ப.த. கு.த.பதில்களும் என்ற நூலிலிருந்து அப்படியே அடியின் தருகின்றேன். படியுங்கள்! படிப்பினை பெற்று ஈமானைச் சீர் செய்யுங்கள்!,

## குற்றச்சாட்டு : 1

## ஹஜ்ரத் மௌலானா இல்யாஸ் (ரஹ்) அவர்கள் மீது!

மௌலானா இல்யாஸ் ஒரு புதிய கூட்டத்தை உருவாக்க முயற்சித்தார், சுமார்700 வருடங்களுக்குப் முன் இருந்த நிலைக்கு

முஸ்லிம்களை மீளச்சுமார் செய்ய வேண்டும் என்று அவரே கூறியுள்ளார்; அக்கூட்டம் அப்துல் வஹ்ஹாப் நஜ்தியின் கூட்டமே யாகும்; ஆக, மௌலானா இல்யாஸ் முஸ்லிம்களை வஹ்ஹாபிக் கூட்டமாக மாற்ற முயல்கிறார்",

## பதில் :1 குற்றச்சாட்டின் விளக்கம்.

வெவ்வேறு சமயங்களில் வெவ்வேறு தொடர்பில் சொல்லப்பட்ட இரண்டு வாக்கியங்களை - அதுவும் ஒரே நூலிலிருந்து எடுக்கப்பட்டவை அல்ல ; இரண்டு வெவ்வேறு நூற்களிலிருந்து எடுத்து ஒட்டுப் போட்டு உண்டாக்கப்பட்ட குற்றச்சாட்டுத் தான், இது.

குற்றச்சாட்டின் விளக்கத்தைக் காணுங்கள்

மௌலானா அவர்கள் தமது நண்பர் ஒருவரை நோக்கி கூறுகிறார்கள், "ஜஹீறுல்ஹஸன் ! என்னுடைய கருத்தை ஒருவரும் விளங்கிக் கொள்கிறார்களில்லை ; மக்கள் நினைத்துக் கொள்கின்றார்கள் இது தொழுகையைப்பற்றி ஏவக்கூடிய இயக்கம் என்று , நான் சத்தியம் செய்து சொல்கின்றேன் ,இது ஒருபோதும் தொழுகையைப் பற்றி ஏவக்கூடிய இயக்கம் அல்ல,எனது நோக்கம் ஒரு புதிய கூட்டத்தை உண்டாக்குவதாகும்.

தீனி த:ஃவத் பக் 206

## பயங்கர சூழ்ச்சி

மறுப்பாளர்கள் இதில் செய்துள்ள சூழ்ச்சி இரண்டு தடவைகளில் கூறிய இரண்டு வாக்கியங்களை ஒட்டுப் போட்டுத் தாமே ஒரு வார்த்தையை உண்டாக்கிக் கொண்டதுதான்.

" எனது நோக்கம்" என்பதற்கு மேல் உள்ள வாக்கியம் ஒருதடவை யிலும் , அதன்பிறகு உள்ள " புதிய கூட்டம் " .... என்பது வேறொரு தடவையிலும் சொல்லப்பட்டதாகும், இடையிலுள்ள , "எனது நோக்கம்" என்பது அசல் நூலில் கிடையவே கிடையாது ! இவர்கள் ஒட்டுப் போட உருவாக்கிக் கொண்ட பசை ,அது,

எப்படியாவது குற்றம் சாட்டிட வேண்டும் என்பதே நோக்கம், என்றில்லாமலிருந்தால், இப்படியெல்லாம் செய்ய வேண்டிய அவசியம் இருக்காதே!

மறுப்பாளர்கள் தந்தவிளக்கம்!

இந்த 'தீனித ஃவத்' வாக்கியத்துக்கு - அதாவது, அந்தப் புதிய கூட்டம் எது? என்பதை 'மக்தூபாத்' எனப்படும் மௌலானாவின்கடிதத்தொகுப்பு நூலிலிருந்து எடுத்துக் காட்டுகின்றார்களாம் ,அது இதுதான்!

மௌலானா அவர்கள் ஒருகடிதத்தில் குறிப்பிடுகின்றார்கள். இதுவரை அசல் வேலை ஆரம்பமாக வில்லை ; என்றைக்கு அசல் வேலை ஆரம்பமாகுமோ , அன்றைக்கே முஸ்லிம்கள் 700 வருடங்களுக்கு முன்னுள்ள நிலைக்குத் திரும்புவார்கள் ,"

(மகாதீப்)

மௌலானாவின் இந்த எழுத்துக்கு எப்படி வேண்டுமானாலும் அர்த்தம் தரலாம், எந்த அர்த்தம் சரியானது? என்பதை இதை எழுதியவர்கள்,இன்னும் அவர்களைப் பின்பற்றி நடப்பவர்கள் ஆகியோரின் வாழ்க்கை ,செயல்,கொள்கை ஆகியவற்றை

முன்வைத்தே முடிவு செய்ய வேண்டும் என்பது சொல்லித் தெரிய வேண்டியதில்லை.

இதுதான் கீரனூரியாரின் கில்லாடித் தனமான பதிலாகும். இருபது ஆண்டுகள் முயற்சி செய்து எழுதிய பதிலின் இலட்சணத்தைப் பாருங்கள்!

கீரனூரியார் குற்றச்சாட்டு தவறு என்று கூற முற்பட்டு குற்றச்சாட்டை முழுமையாக ஒப்புக்கொள்கின்றார். வாசகர்களை ஏமாற்ற "எனது நோக்கம்", என்ற வாக்கியத்தைச் சேர்த்து பயங்கரமான சூழ்ச்சி செய்திருப்பதாகக் கூறி மூளைச்சலவை செய்கின்றார்;

ஏற்கனவே மூளைச்சலவை செய்து மூளைச்சாவை அடைந்து விட்டார்கள் , இப்போது எதைக் கூறினாலும் தலையை ஆட்டுவார்கள் என்பதை இலங்கை மற்றும் தமிழ்நாட்டு உலமாக்களின் முட்டாளத்தனமானசெயல்பாட்டிலிருந்தும், தீர்மானத்திலிருந்து ஐயமற தெரிந்து கொண்ட இறுமாப்பில் இவ்வாறு சப்பைக் கட்டுகின்றாரார் கில்லாடி கீரனூரியார்.

வஹாபி நஜ்தி தனது கொள்கைகளை ஏற்பவர்கள் இற்றையிலிருந்து 600 ஆண்டுகளுக்கு முன்பிருந்த நிலைக்கு மீளுவார்கள் என்கின்றார்;

மௌலவி இல்யாஸ் வஹாபி நஜ்திக்கு 100 ஆண்டுகள் பிந்தியவர் ஆகவே 700 ஆண்டுகள் என்கின்றார்; இருவரின் நோக்கமும் ஒன்றுதான் என்பது சிறுபிள்ளையும் விளங்கும் எளிய விளக்கம் என்பதனால்தான் கீரனூரியார் விளக்கம் கூறாமல் நழுவினார்;

மேற்படி கூற்று மகாதீப் என்ற கடிதத்தொகுப்பில் உள்ளதாக கீரனூரியார் கூறுவது தப்பு! மல்பூழாத்தில்தான் கூறுகின்றார்; அதனை பக்கத்தோடு ஏற்கனவே குறிப்பிட்டுள்ளோம்.

தப்லீக்ஜமாஅத்தின் நோக்கம் தொழுகைக்கு அழைப்பதில்லை என்பதை இல்யாஸ் சத்தியம் செய்து கூறினார் என்பதையும் , ஒரு புதிய கூட்டத்தை உருவாக்குவதுதான் அவர் நோக்கம் என்றுகூறிய குற்றச்சாட்டையும் மறுக்காமல் ஒப்புக் கொள்கின்றார்.

அப்படியாயின் , குற்றம் சுமத்திய ஷைகுனா ஸூபி ஹளறத் நாயகம் உண்மையானவரா? உண்மையை மழுப்பி, குற்றச்சாட்டை ஏற்றுக் கொண்டு மக்களை மடையனாக்க கில்லாடி வேலை புரட்டர் கீரனூரியார் உண்மையானவரா?

யார் குற்றவாளி? அல்லாஹ்வைமட்டும் அஞ்சி மார்க்கத்தைப் பாதுகாக்கப் போராடிய தியாகச் செம்மல் யார்?

உண்மையை மறைத்து மக்கள் வழிகெட்டுச் செல்ல மலர்தூவி கம்பளம் விரித்துக் கொடுத்தவர்கள் யார்?

இந்த திட்டவட்டமான உண்மையை ஆதாரத்தோடு எடுத்துக் காட்டியும் தப்லீக் கை ஆதரித்த உலமாக்களுக்கும், ஏனையவர்களுக்கும் ஏன் புரியவில்லை? இவர்கள் எவ்வாறு தப்லீக் ஜமாஅத்தால் வசீகரிக்கப் பட்டார்கள்? சிந்தியுங்கள்! சீர்பெறுவீர்கள்!

தொடரும்.....

## Part - 20

### குற்றச்சாட்டு : 2

மௌலானா இஸ்மாயீல் ஷஹீது அவர்கள் மீது!

ஒரு ஷைகுஅவர் போன்ற பெரியவர்கள் ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களானாலும் சரிதான் இவர்களுடைய ஞாபகம் வருவதானது ஜினாசெய்கிற நினைப்பும் ஏன் தனது ஆடு மாடு கழுதையுடைய நினைப்பில் மூழ்குவது விடவும் கெட்டதாகும்.

(ஸிறாத்தே முஸ்தகீம்)

நூலுக்கு நூல் வேறுபாடு !.

மேற்கண்ட வாக்கியம் இஸ்மாயில் ஷஹீது (ரஹ்)அவர்கள் எழுதிய தாம்! தப்லீக்கையும், அதன் தலைவர்களையும் தாக்கி எழுதப்பட்ட நூல் ஒன்றில் இருந்து இவ்வாக்கியம் அப்படியே எடுத்தெ ழுதப்பட்டுள்ளது.

இதில் ஆச்சரியம் என்னவென்றால், நமது மறுப்பாளர்கள் எழுதிய நூல்கள் ஒவ்வொன்றையும் எடுத்து பார்த்தால், ஒவ்வொன்றிலும் இவ்வாக்கியம் ஒவ்வொரு மாதிரி எழுதப்பட்டுள்ளது. ஒன்றில் சில வார்த்தைகள் அதிகம் ஒன்றில் குறைவு ஒரே நூலில் இருந்து எடுத்தடுத்தப்படுவதில் வேறுபாடு ஏன் வருகிறது?

ஸிறாத்தே முஸ்தகீம் யார் எழுதியது?

இஸ்மாயில் ஷஹீது(ரஹ்) எழுதியது தான் ஸிறாத்தே முஸ்தகீம் என்று கூறுகிறார்கள்.ஷஹீத் அவர்கள் இப்படி ஒரு நூல் எழுதவே இல்லை ஆம் ஆச்சரியப்பட வேண்டாம்! உண்மை அதுதான்!

மறுப்பு எழுத புறப்படுவோர் அட்டைகளை மட்டும் பார்த்து ஏமாந்து விட்டால் எப்படி? சற்றும் ஆராய்ந்து பார்க்க வேண்டாமா? உண்மையில் இந்நூல் இஸ்மாயில் ஷஹீது அவர்களின் ஷைகான

ஹஜரத் செய்யது அஹமது ஷஹீது (ரஹ்) அவர்களது பேச்சு தொப்பாகும். இத்தொகுப்பில் நான்கு பகுதிகள் உள்ளன. அவற்றில் முதலாவதும், மூன்றாவதும் ஷஹீத் அவர்கள் தொகுத்ததுதான். ஆனால், குற்றச்சாட்டு வாக்கியம் இவ்விரண்டு பகுதியிலும் உள்ளது அல்ல இரண்டாம் பகுதியிலேயே உள்ளதாகும்.

இது செய்யது அகமது ஷஹீத்(ரஹ்) முரீதுகளில் ஒருவரான அப்துல் ஹை சாஹிப் (ஷாஹ் அப்துல் அஜீஸ் தெஹ்லவியின் மருமகனார்) அவர்களால் தொகுக்கப்பட்ட தாகும் ஆக, குற்றச்சாட்டு பகுதி இஸ்மாயில் சாகிப் எழுதியதும் அல்ல; தொகுததும் அல்ல

## இல்லாததை எழுதுவது ஏனோ

மறுப்பாளர்களது எந்த நூலிலும் ஸிறாத்தே முஸ்தகீமிலுள்ள உண்மையான வாக்கியம் காணப்படவில்லை. மேலே குறிப்பிடப்பட்டுள்ள வாக்கியத்தில் 'ஜினா' செய்கிற நினைப்பும் என்பது வாக்கியத்தின் இடையில் இல்லாத ஒன்று! இங்கு குறிப்பிடப்பட்ட வாக்கியத்தில் அசல் நூலில் இப்படி ஒன்று இல்லவே இல்லை இருக்கிறதென்றால், அது இதற்கு மேல் உள்ள வாக்கிய முடிவில் இருக்கிறது.

இந்த வாக்கியத்தின் இடையில் அல்ல வேண்டுமானால் ராஷித் கம்பெனியால் அச்சிடப்பட்ட ஸிராத்துல் முஸ்தகீம் 97ஆவது பக்கத்தில் இரண்டாவது வரியைப் பாருங்கள் அசல் நூல் பார்சி மொழியில் உள்ளது அதை உருதுவில் மொழிபெயர்த்து பல தில்லுமுல்லுகளை செய்து பரேலியர்கள் குற்றம்சாட்டுகிறார்கள்.

அவர்கள் கூறும் குற்றச்சாட்டுகளை பார்த்து இவர்களும் கூறிவிட்டார்கள் என்றே கருதவேண்டியுள்ளது ஆக, உண்மையில் குற்றச் சாட்டப்படும் வாக்கியம் அசல் நூலில் இந்த விதமாக இல்லை அப்படி யாரும் காட்டவும் முடியாது

உண்மை என்ன? இக்குற்றச் சாட்டை நாம் ஏற்றுக் கொண்டாலும் இது உருப்படியான ஒரு குற்றச்சாட்டு அல்ல!

ஸிராத்தே முஸ்தகீமில் எழுதப்பட்டுள்ளது என்ன? ஸிராத்தே முஸ்தகீம் ஆசிரியர் அவர்கள் எழுதியுள்ள உண்மையான கருத்தை காணுங்கள்.

தனது ஷைக் அல்லது யாராவது ஒரு பெரியார் நாயகமே ஆனாலும் அவர்களின் பால் ஸர்பே ஹிம்மத் செய்வது ( அதாவது எல்லாவற்றையும் விட்டும் தனது கவனத்தைத் திருப்பி இந்தப் பெரியார்களின் பால் முழுக்க முழுக்க செலுத்துவது) மாடு கழுதையை பற்றிய எண்ணத்தில் மூழ்குவதை விடக் கெட்டதாகும்.

ஏனெனில்,பெரியார்களின் பால் அந்நேரத்தில் ஸர்பே ஹிம்மத் செய்யும்போது அது அவர்களைப் பற்றிய கண்ணியமும் பெருமையும் கொண்ட எண்ணத்தோடு உள்ளத்தின் அடித்தளத்தில் இடம்பிடிக்கும்.........

தப்லீக் ஜமாஅத் பற்றி தவறான குற்றச்சாட்டுக்களும்

தக்க பதில்களும். பக்கம்:. 113--117

தப்லீக் ஜமாஅத்தின் தலைவர்களுள் ஒருவரான இஸ்மாயீல் திஹ்லவி யின் மேற்கண்ட வாக்கியத்தில் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை தரம் தாழ்த்திக்

கூறப்பட்டிருப்பதால் இக்கூற்று "குப்று" என்றும், இவ்வாறு கூறியவர் காபிர் என்றும் புனித மக்கா, மதீனா முப்திகள் ஃபத்வாக் கொடுத்தனர்.

இந்தக் குற்றச்சாட்டை கலீல் அஹ்மது கீரனூரியார ஏற்றுக்கொள்ளும் அதே நேரம் இது ஓர் உருப்படியான குற்றச்சிட்டல்ல! என்று துணிந்து கூறுகின்றார்.

மாத்தறை விவாத மாநாட்டில் ஷைகுனா ஸூபி ஹளறத் நாயகமவர்கள் இதை எடுத்துக் கூறிய போது அங்கு கதாநாயகராக வீற்றிருந்த யாஸீன் மௌலாவுக்கோ , ஷைகுல் பஹ்ஜாவுக்கோ, மற்றும் உலமாக்களுக்கோ உறைக்க வில்லை?

இக்கூற்றச்சாட்டு பரேலவிகளின் குபாடத்தினால் வந்தது என்று துணிந்து மௌலானா கூறினார் ; இவ்வாறு கூறி அந்த இடத்தில் தற்காலிக புளகாங்கிதம் அமைந்திருக்கலாம்; உண்மையை மறைக்க முடியுமா? சொற்பமான கால இடைவெளிக்குள் தப்லீக்கின் உள் வீட்டுக்குள்ளிருந்தே உண்மையும் , சப்பைக்கட்டும் வெளிவந்து விட்டது!

ஹளறத் இக்ரிமா றழியல்லாஹு அன்ஹு அவர்களின் மனம் வேதனைப்படும் என்று கற்பனை செய்து அவர் தந்தை அபூஜஹ்லின் வரலாற்றை மறைக்க முடியுமா? நமது தொடர் சிலருக்கு அலர்ஜிக்காக இருக்கின்றதென்பதற்காக உண்மையை ஒழிக்க முடியாது! உண்மையின் சுவை அதிகமாகக் கசப்பாகவே தான் இருக்கும். காரமுள்ள மருந்தும் கசக்கவே செய்யும்;

அதனால் தான் சத்தியத்தை எடுத்துக் கூற முன்வருபவர்கள் பொறுமையோடு பலதொல்லைகளுக்குத் தோள்

கொடுக்க சம்மதமாக இருக்க வேண்டும் என்று திருக்குர்ஆன் அறிவுரை கூறுகின்றது..

கில்லாடி கீரனூரியார் கூறுவது போன்று தான் இக் குற்றச்சாட்டை யாஸீன் மௌலானாவும், ஏனைய உலமாக்ளும் உண்மையை விளங்கி ஆலட்சியப்படுத்தினார்களா? அப்படியாயின் , இவ்வாறு கூறியவருக் குரிய தீர்ப்பை புனித ஹறமலன் முப்திகள் வழங்கிய ஃபத்வா ஏன் இவர்கள் மீதும் பாயாது?

தப்லீக்கை ஆதரிக்கும் இப்போதைய முல்லாக்கள் விளக்கம் தருவார்களா? அல்லது, இவ்வாறான வார்த்தைகளை அஹ்லுல் பைத்துகள் கூறினால் மட்டும் ஷரீஅத்தில் விதி விலக்கு உண்டு என்று ஏதும் நியாயம் காட்டுவார்களா?

தப்லீக்கை ஆதரித்ததனால் தானே கீரனூரியார் போன்றவர்கள் உருவாகி தேவ்பந்திகளைப் பாதுகாக்க குப்றியத்திற்கு ஈமானின் சாயம் பூசதுணிந்தனர்!

மக்கள் குப்றில் மாட்டி ஈமானை இழக்கக் கூடாது என்பதற்காகத்தானே தியாகச் செம்மல் ஷைகுனா ஸூபிஹளறத் நாயகமவர்கள் அத்தனை சோதனைகளையும் தன்னந்தனியாக தோளில் சுமந்து கொண்டு போராடினார்கள்!

இந்தப் போராட்டத்தில் ஜெயித்தது யார்? குப்றை மறைத்து வழிகேட்டை திறந்து கொடுத்து தோற்றது யார்?

கில்லாடி கீரனூரியாரின் பதிலை கவனித்துப்பாருங்கள்!

1. ஸிறாத்தே முஸ்லீம் என்று ஒரு நூலை இஸ்மாயீல் திஹ்லவி எழுதவே இல்லை என்று அடித்துக் கூறுகின்றார்;

2. பின்னர், புத்தகத்தின் அட்டையில் இஸ்மாயீல் திஹ்லவியின் பெயர் இருப்பதாக ஒப்புக் கொள்கின்றார்;

3. குற்றச்சாட்டு வாக்கியத்தின் முழுமையான வாசகம் அசல் நூலில் இல்லவே இல்லை என்கின்றார்;
4. இருக்கின்றதென்றால் வாக்கியத்தின் முடிவில் இருக்கின்றது புலம்புகின்றார்.
5. ஸிறாத்தே முஸ்தகீமின் உண்மையான வாசகத்தைப் பாருங்கள் என்று கூறி குற்றச்சாட்டை ஒப்புவிக்கின்றார்.

மக்களை மடையனாக்கி எப்படியெல்லாம் கில்லாடி வேலை பார்க்கின்றார் என்பதைக் கவனித்துப்பாருங்கள்! இதனால் தான் இந்தக் கூட்டம் "தப்லீக்" அல்ல!, தப்லீஹ்! என்று ஷைகுனா ஸூபி ஹளறத் நாயகமவர்கள் பெயர் வைத்தார்கள்; தப்லீஹ் ! என்றால் , மக்களை மடையனாக்குதல், என்பது பொருள்! ஆஹா! எவ்வளவு பொருத்தமான பெயர்!

கீரனூரியாரின் தக்க பதில் புத்தகம் 1972ம் ஆண்டு வெளிவந்தது; அப்போது இலங்கையில் தேவ்பந்தின் வழிகேடுகள் வராமல் தடுப்போம் என்று வீறாப்புப் பேசிய மகான்களான

அப்துல் ஹமீது நூரி , அப்துர் ரஹ்மான் பஜ்ஜி, அப்துஸ்ஸமத் ஆலிம் பஜ்ஜி, ஷைகுல் பஹ்ஜா அப்துல் ஹமீது பஜ்ஜி , அபுல் ஹஸன் காஹிரி , அஜ்வாத் ஆலிம்பஹ்ஜி, உள்ளிட்ட ஏராளமான மஹான்கள்கள் உயிரோடு தான் இருந்து தப்லீக் ஜமாஅத்தில சேர்ந்து

முட்டாள் அமீரின் வழிகாட்டுதலில் செயல்பட்டு பாட்டுப் பாடினார்கள் .கைதட்டித் தாளம் போட்டார்கள்.

மறுமையில் யார் சரி! யார் பிழை! என்பற்கான தீர்ப்பை நிச்சயம் அல்லாஹு ஸுப்ஹானஹு வத ஆலா வழங்குவான் ! அதுவரை அந்த நாளை எதிர்பார்ப்போம்.

தொடரும்....

## Part- (21)

### குற்றச்சாட்டு :3

ஹஜ்ரத் மௌலானா இஸ்மாயீல் ஷஹீத்(ரஹ்), அவர்களகூறுமசப்பைக்க இன்னொரு குற்றச்சாட்டு!

"மனிதர்கள் ஒருவருக்கொருவர் சகோதரர்கள் ; எவர் பெரியவரோ அவர் பெரிய சகோதரர் , அதே கவனத்தில் நாயகம்,(ஸல் - அம்) அவர்களுக்குப் பெரிய சகோதரரின் மரியாதை கொடுங்கள்"

அவர்களகூறுமசப்பை.

### பதில் :3

பதில் கூற முன் " தக்வியத்துல் ஈமானில் எழுதப்பட்டுள்ளது என்ன? என்பதை முதலில் பார்ப்போம்,

ஷஹீத்(ரஹ்) அவர்கள் ஹஜ்ரத் ஆயிஷா (ரவி) அவர்களின் கீழ்காணும் ரிவாயத்தை ஆரம்பமாக எடுத்தெழுதுகின்றார்கள்.

ஒரு நாள் முஹாஜிர்கள் அன்ஸார்கள் கொண்ட ஒருஜமாஅத் நாயகம்(ஸல்-அம்) அவர்களது சமூகத்தில் அமர்ந்திருந்தது . அப்போது ஒரு ஒட்டகை வந்து அண்ணல் நபிக்கு 'ஸஜ்தா' செய்தது, இதைக்கண்ட ஸஹாபாக்கள் நபியவர்களிடம் கேட்டார்கள் ;

நாயகமே! தங்களுக்குச் செடி கொடிகள் ,மிருகங்கள்எல்லாமே ஸஜ்தா செய்கின்றன. பின், நாங்கள் மட்டும் ஏன் தங்களுக்குச் ஸஜ்தா செய்யக்கூடாது?

அப்போது நபியவர்கள் கூறினார்கள் ;

இபாதத் ,உங்களது ரப்பாகிய அல்லாஹ்விற்கு மட்டுமே செய்ய வேண்டும்; உங்களது சகோதரருக்கு(அதாவது எனக்கு) கண்ணியமும் ,மரியாதையும் அளியுங்கள்!

(மிஷ்க்காத்,பாபு உஷ்ரத்தின் நிஸா)

இந்த ஹதீஸில் நபியவர்கள் தன்னை சகோதரர் எனக்கூறி யுள்ளார்கள்; இந்த வார்த்தையை முன்வைத்து அதற்கு விளக்கம் கூறும்போது

ஷஹீத்(ரஹ்) அவர்கள் எழுதுகின்றார்கள்.

" மனிதர்கள் ஒருவருக்கொருவர் சகோதரர்,மிகப் பெரியவர் என்றால்; மூத்த சகோதரர்; மூத்த சகோதரருக்கு செய்யப்படும் மரியாதை போன்று நாயகம் (ஸல்-அம்) அவர்களுக்கு மரியாதை செய்யுங்கள்.

த.ஜ.த.கு.தக்க பதில்களும், 118,119

கில்லாடியார் கீரனூரி அவர்கள் குற்றச்சாட்டை மறுத்தாரா? அல்லது; பதில் கூறினாரா? அல்லது; குற்றச்சாட்டை ஒப்புக்கொண்டு நியாயம் கற்பிக்க சப்பைக்கட்டுக்கட்டி மக்களை ஏமாற்ற முயற்சிக்கின்றாரா?;

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தன்னுடைய சிறப்பைப் பற்றி ஏராளமாகக் கூறியிருக்கின்றார்கள்; அல்லாஹுத்த த ஆலாவும் திருக்குர்ஆனில் ஏராளமாகக் அன்னாரின் சிறப்பைப்பற்றிக் கூறியிருக்கின்றான்;

.

ஏனையவர்களைப் பெயர் கூறி அழைப்பது போன்று றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை அழைக்கக் கூடாதென்றும்,

நபியின் சப்தத்திற்கு மேல் உங்கள் சப்தத்தை உயர்த்தாதீர்கள் !, (ஒழுக்கமில்லாமல் சப்தம் உயர்த்திப் பேசினால் ) நீங்கள் அறியாமலேயே உங்கள் அமல்கள் அழிந்துவிடும் என்றும்,

அல்லாஹ்வும்,மலக்குகளும் நபியின் மீது ஸலவாத் கூறுகின்றனர், மு:மீன்களே! நீங்களும் அவர்மீது ஸலவாத்தும் ஸலாமும் கூறுங்கள்! என்றும் , இதுவல்லாத பலநூறு சிறப்புக்கள் கூறியிருப்பதெல்லாம் இவருக்குத் ஏன் தெரிய வில்லை?

இஸ்லாமிய அறிஞர்கள் ஒட்டுமொத்தமாக றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அனைத்து படைப்புக்களை விடவும் மேலானவர்கள் என்று கூறுகின்றனர்; ஆனால் , இஸ்மாயீல் திஹ்லவி மூத்தசகோதரனுக்குக் கொடுக்கும் மரியாதையளவைக் கொடுக்கவேண்டும் என்று மட்டம்தட்டுகின்றார்,

இளைய சகோதரன் மூத்த சகோதரனுக்குக் கொடுக்கும் மரியாதையை விட தனது பெற்றோருக்கும், தனக்குக் கற்றுக்கொடுக்கும் ஆசான்களுக்கும் கூடிய மரியாதைக் கொடுப்பான்;

இந்தளவு கூடிய மரியாதையைக் கூட றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்குக் கொடுக்க இப்போது தப்லீக் ஜமாஅத் தயாரில்லை என்பதுகீரனூரியாரின் பதிலிலிருந்து தெரிகின்றது!

(இதுபற்றிய விரிவான பதிலை " தப்லீக் - தேவ்பந்தி தலைவர்களின் கொள்கைகள்" என்ற தலைப்பில் விரிவாக எழுதியுள்ளோம்) மேலும் கூறுவதையும் கேளுங்கள்!

## குற்றச்சாட்டு; 4

### இஸ்மாயீல் ஷஹீதின் மீது மற்றுமொரு குற்றச்சாட்டு

பதில்:4

மறுப்பாளர்களில் சிலர் , ஷஹீத் அவர்கள் ,நாயகம் ( ஸல்-அம்) அவர்களை செம்மானை விட அற்பமானவர்கள் என்று குறிப்பிட்டுள்ளதாக எழுதியுள்ளார்கள்.

நாயகம் என்ற வார்த்தை தக்வியத்துல் ஈமானில் இந்த இடத்தில் இல்லவே இல்லை! இல்லாததை எழுதியாவது குற்றம் சாட்டத்தான் வேண்டுமா?

உண்மை காண்பீர் !

தக்வியத்துல் ஈமானில் எழுதப்பட்டுள்ள பூரண வாசகம் இதுதான்:

",அல்லாஹ் லுக்மான் (அலை )அவர்களுக்கு நுண்ணறிவு அளித்திருந்தான், அவர்கள் தமது அறிவு தீட்சண்ணியத்தைக் கொண்டு அநீதி என்பது ஒருவர் ஹக்கை மற்றொருவருக்கு கொடுத்து விடுவதுதான் என விளங்கினார்கள்;

எனவே ஒருவன் அல்லாஹ்வுடைய ஹக்கை (அதாவது அவனுக்குச் செய்யப்படும் இபாதத முதலியவற்றை) அவனால் படைக்கப்பட்ட ஏதாவது ஒரு பொருளுக்கு கொடுத்தால், அவன் பெரியவனுக்கெல்லாம் பெரியவனான அல்லாஹ்வின்ஹக் கை தாழ்ந்ததில் தாழ்ந்தவனுக்குக் கொடுத்தவன் ஆவான்;

இது அரசனின் கிரீடத்தை எடுத்து (செம்மானின்) செருப்பு தைப்பவன் தலையில் வைத்தது போன்றதாகும். இதைவிட பெரிய அநீதி எது? எனவே, நாம் உறுதி கொள்ள வேண்டும்;

படைக்கப்பட்ட பொருள் பெரியதோ, சிறியதோ- அல்லாஹ்வின் அந்தஸ்த்தை முன் வைத்துப் பார்த்தால்- அது செம்மானைவிடத் தாழ்ந்தது ஆகும்.

தக்கவியத்துல் ஈமான்.

கில்லாடிகீரனூரியார் குற்றச்சாட்டை ஏற்றுக்கொண்டாரா? மறுத்தாரா? நாயகம் என்ற வார்த்தை இந்த இடத்தில் இல்லை என்று மட்டுமே மறுத்திருக்கின்றார்;

அந்த வசனத்தை நீக்கி விட்டுப்படித்தால்,

சிருஷ்டியில் பெரியதோ சிறியதோ என்பதில் அனைத்துப் படைப்புக்களும் அடங்கும் என்பதும், அதில் ரசூலுல்லாஹி

ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களும் அடங்குவார்கள் என்பதும் சிறு பிள்ளையும் விளங்குகின்ற எழிய விளக்கமாகும்.

இதை கீரனூரியாரும் புரியாதது அல்ல! மக்களை மடையனாக்கி பதில் கூறிவிட்டதாக ஒரு மாயை ஏற்படுத்தி சலசலப்பை நிறுத்துவது தான் நோக்கமாகும்.

இஸ்மாயீல் திஹ்லவியின் மீது இன்னும் நிறையவே குற்றச்சாட்டுக்கள் சுமத்தப்பட்டுள்ளன; அவற்றுள்; றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மௌத்தாகி மண்ணோடு மண்ணாகி விட்டார்கள் ,

ஏகத்துவமும் ,இணைவைத்தலும்: பக்:121

(தக்வியத்துல் ஈமான் மொழிபெயர்ப்பு)

நபிமார்களும்,வலிமார்களும் அவன் முன்னால், எந்த சக்தியுமற்ற அணுவை விட குறைந்தவர்கள்.

ஏகத்துவமும் , இணைவைத்தலும் . பக்கம் : 113.

மேற்கண்ட கூற்றுக்கள் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் புனித மகத்துவத்தை மாசுபடுத்துவதாக இல்லையா?

இதனால் தான் இக்கூற்றுக்களை கூறியவர், சரிகண்டவர் காபிர் என்றும், காபிர் என்று சொல்லத் தயங்கிய வனும் காபிர் என்றும் புனித மக்கா மதீனா முப்திகள் ஃபத்வாக் கொடுத்துள்ளார்கள்

தப்லீக்ஜமாஅத்தில் வஹாபிஷம் உண்டு அதில் சேரக்கூடாது ! என்று ஷைகுனாஸூபி ஹளறத் நாயகமவர்கள்சொந்த குபாடத்திலா இவ்வாறு கூறினார்கள்?

அல்லது றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி அவர்களின் மீதுள்ள அதீத மஹப்பத்தினாலும் , உம்மத் வழிகெட்டு விடக்கூடாது என்ற ஆழ்ந்த கவலையினாலும் கூறினார்களா?

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை கேவலமாக திட்டிய வழிகேடனை உத்தமனாக்கி மக்களை வழிகெடுக்கக் காரணமானவர்களை *வலி , குத்பு* என்று எவ்வாறு நாக்கூசாமல் கூறமுடியும்?

தப்லீக்கின் வழிகேடு கள் இப்போது தெட்டத்தெளிவாக விளங்கிய பின்பும் அதில் ஒட்டிக்கொண்டுசுகமனுபவிப்போரை ஷரீஅத்தைப்பேணுவோர் என்று கற்பனையாவ து செய்ய முடியுமா?

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களை நேசிப்பதும், மதிப்பதும்தான் ஈமான் என்பதையும், ஈமானில்லாமல் செய்யும் அமல்கள் புழுதிகளாக வீசப்படும் என்பதையும் உஸ்தாதுமார்களான இவர்களுக்குத் தெரியாதா?,

இந்த உலகத்தில் நடிக்கலாம் !, மரணத்தின் பின் அது கலைந்துவிடும்! அந்தரங்கம் அம்பலமாகும்; எச்சரிக்கை!!

தொடரும்.......

**Part-22**

**குற்றச்சாட்டு : 5**

**ஹஜ்ரத் மௌலானா அஷ்ரப் அலி தானவி(ரஹ்) அவர்கள் மீது!**

**"லாஇலாஹ இல்லல்லாஹ் அஷ்ரப் அலி றஸூலுள்ளாஹ் " என்று கலீமா ஓதுவதை தானவி சரி என்று ஏற்றுக்கொண்டார்.**

**பதில்: 5**

**தானவி (ரஹ்) அவர்களின் உண்மை நிகழ்ச்சி**

**தானவி(ரஹ்) தான் கலிமா ஓதச் சொன்னார்களா? உண்மை நிகழ்ச்சி என்ன? என்பதைப் பார்த்தால், நன்கு விளங்கும்! நடந்த உண்மை நிகழ்ச்சியைப் பாருங்கள்.!**

**தானவி அவர்களிடம் இதுவரை பைஅத் செய்து கொள்ளாத ஒருவர் (பைஅத் செய்து கொள்ளவேண்டும் என்று நினைத்துள்ளார்) அவர் கனவு காணுகின்றார் அஷ்ரப் அலி தானவி பெயரை கலிமாவில் ஓதுவதாக அவர் தனது கடிதத்தில் தானவி அவர்களுக்கு எழுதுகிறார்**

**இப்படி ஓதுவது சரியல்ல என்பது எனக்கு கனவிலும் புரிகிறது ஆனால், நான் விரும்பாமலே எனது நாவும் இதையே இரண்டு மூன்று முறை கூறுகிறது......**

**அப்போது தங்களை என் முன் காணுகிறேன்......**

**இதனிடையே நான் விழித்துக் கொண்டேன் கனவிலே நடந்த தவறு பற்றி நினைவு வந்தவுடன் நான் எழுந்து உட்கார்ந்து கொண்டேன்; இந்த நினைவை மனதை விட்டுப் போக்க வேண்டும்**

என்று பிறகு திரும்பப் படுத்து நாயகத்தின் மீது ஸலவாத் ஓதி தவறுக்கு பரிகாரம் காண முயற்சிக்கிறேன். ஆனால், அப்போதும் அல்லாஹும்ம ஸல்லி அலா ஸய்யிதினா அஷ்ரப் அலி என்றே நாவில் வருகிறது!

நான் தூங்கி விடவில்லை விழித்துக் கொண்டு தான் இருக்கிறேன்; ஆனால், நான் சுய இஷ்டத்தோடு இல்லை கட்டுண்டவனாக இருக்கிறேன். நானும் எனது இஷ்டத்தில் இல்லை.

இக் கடிதத்திற்கு தானவி அவர்கள் பதில் எழுதினார்கள்.

இந்த நிகழ்ச்சியில் உங்களுக்கு ஆறுதல் கூறப்பட்டுள்ளது. அதாவது நீங்கள் யாரின் பால் செல்ல நாடுகிறீர்களோ அவர் சுன்னத்தை பின்பற்றியவரே ஆவார்!என்று

இதுதானே குற்றச்சாட்டு!

அதனை அப்படியே ஏற்றுள்ளார் கீரனூரியார்!

அஷ்ரப்அலிதானவி "அல்இம்தாத்" என்று ஒரு மாசிகை நடத்தி வந்தார் , அதில் கேள்வி பதில் பகுதியில்தான் மேற்கண்ட கேள்வியும், பதிலும் இடம்பெற்றுள்ளது!

மேற்படி பதிலில் தானவி அவ்வாறு கூறியவருக்கு ஆறுதல் கூறி தன்னையும் சுத்தப்படுத்தி மகத்துவப்படுத்தியுள்ளார்; கேள்வி கேட்டவர்சாதாரணமானவர்; ஆத்மீக உச்சம் தொட்ட வரல்ல! அஷ்ரப் அலிதானவியிடம் பைஅத் வாங்கி ஆன்மீகத்தில் ஈடுபட எண்ணிய ஆரம்ப நிலையிலுள்ளவர்;

இவர் கனவில் கூறியது போக, நினைவிலும் கலிமாவிலும், ஸலவாத்திலும் அஷ்ரப் அலி தானவியின் பெயரோடு நபி, ரஸூல் என்று கூறியுள்ளார்;

இவ்வாறு கூறுவதை தவறு என்று நம்பி தவறுக்குப் பரிகாரம் கேட்டவருக்குத்தான் தானவி ஆறுதல் கூறி விடயத்தை ஆமோதிக்கின்றார்; இந்த விடயம் சஞ்சிகையில் வெளிவந்ததால் உலமாக்கள் மத்தியில் பெரும் அதிர்வலைகளை ஏற்படுத்தியது!

பல திக்கிலிருந்தும் கடிதம் எழுதி அஷ்ரப் அலிதானவியிடம் உலமாக்கள் விளக்கம் கேட்டும் தானவியிடமிருந்து மௌனமே பதிலாக வந்தது! இவ்வாறு கடிதம் எழுதியவர்களுள் இமாம் அஹ்மத் றிழாகான், மௌலானா அப்துல் அலீம்ஸித்தீக்கி மீரட்டி றஹிமஹுமுல்லாஹ் ஆகியோர் முக்கியமானவர்களாகும்;

மௌலானா அப்துல் அலீம் ஸித்தீக்கி மீரட்டி றஹ்மத்துள்ளாஹிஅலைஹி அவர்கள் பலமுறை தானவியை விவாதத்திற்கு அழைத்தும் அவர் மறுத்த காரணத்தால்

"ஃபர்ரதும் மின்னல் கஸ்வரா" என்ற பெயரில் ஃபத்வா வெளியிட்டார்கள்;

அஷ்ரப்அலி தானவி கலிமாவிலும், ஸலவாத்திலும் தனது பெயரோடு நபி, ரஸூல் என்று கூறியதை ஏற்றுக்கொண்டுள்ளார்; விளக்கம் கேட்டும் பதில் கூற மறுக்கின்றார்,

ஆகவே, தானவி இவ்வாறு கூறுவதை விரும்புகின்றார், அதாவது, தன்னை நபி, ரஸூல் என்று மற்றவர் கூறுவதை எதிர்பார்க்கின்றார் என்று கூறி "குப்று "ஃபத்வா எழுதினார்கள்; இந்த ஃபத்வா பெரும் தாக்கத்தை உலகெங்கும் ஏற்படுத்தியது!

மௌலானா அப்துல் அலீம் ஸித்தீக்கி றஹ்மத்துள்ளாஹி அலைஹி அவர்களை அறியாதவர்கள் அக்காலத்தில் எவரும் இருந்திருக்க மாட்டார்கள்;

அமெரிக்காவின் பிரபலமான அறிஞர் பெர்னாட்ஷா வோடு நேருக்கு நேர் விவாதம் செய்து அவர் வாயை அடைந்தவர்கள்;

கொழும்பு மேமன் ஹனபிப் பள்ளிவாசலின் நிறுவனர் ; உலகம் முழுவதும் சுற்றுப்பயணம் செய்து பல இலட்சம் பேர்களை இஸ்லாத்தில் இணைத்தவர்கள்,

ஜாமிஆ நழீமியா உருவாவதற்கான எண்ணக்கருவின் மூலகர்த்தா மௌலானா பஸ்லுர் றஹ்மான் அன்ஸாரியின் ஷைகும் மாமனாருமாவார்கள்;

மேற்படி ஃபத்வாவை ஷைகுனாஸூபிஹளறத் நாயகமவர்கள் "புலியைக் கண்டு ஓட்டம்!" என்ற பெயரில் அச்சிட்டு வெளியிட்டார்கள்; அஷ்ரப் அலி தானவிக்கு குப்று ஃபத்வா எழுதியது சங்கைக்குரிய ஸூபி ஹளறத் நாயகமல்ல!

இலங்கையிலுள்ள அதிசிறந்த உலமாக்களால் அரபுக்கவி பாடி கண்ணியத்தோடு வரவேற்புக் கொடுக்கப்பட்ட மௌலானா

**அப்துல் அலீம் ஸித்தீக்கி றஹ்மத்துள்ளாஹி அலைஹி அவர்களாவார்கள்!,**

**ஷைகுனா ஸூபிஹளறத் நாயகமவர்கள் இந்த ஃபத்வாவை மாத்தறை விவாதத்திற்கு முன்பே தமிழாக்கி அச்சிட்டு வெளியிட்டுள்ளார்கள்; அப்படியிருந்தும் இலங்கை உலமாக்களின் கண்கள் குருடாகி விட்டன!**

**அஷ்ரப் அலிதானவியின் அடுத்த குற்றச்சாட்டையும் பதிலையும் கவனியுங்கள்!**

**குற்றச்சாட்டு: 6**

**ஹஜரத் மௌலானா அஷ்ரப் அலி தானவி அவர்கள் மீது அடுத்த ஒரு குற்றச்சாட்டு!**

**நாயகம் (ஸல்-அம்) அவர்கள் அறிந்திருப்பது போன்ற அறிவை ஜைது, அம்று , பக்ரு போன்ற சாதாரண மனிதனும் தான் ஒவ்வொரு மதலை குழந்தையும் தான் பைத்தியக்காரர்கள் தான் பெற்றிருந்தார்கள். ஏன் மிருகங்களும் தான் பெற்றிருக்கின்றன நபியவர்களுக்கு இதில் என்ன விசேஷம் இருக்கிறது?**

**மௌலானா தானவி அவர்கள் "ஹிப்ளுள் ஈமான்" என்ற தமது நூலில் இதை எழுதியுள்ளார்கள்ளாம் இதுவே குற்றச்சாட்டு!**

**இது உண்மைதானா ?**

**மேற்குறிப்பிட்ட வாசகத்தை அப்படியேஹிப்ளுல் ஈமானில் யாராவது காட்ட முடியுமா? ஒருவரது கருத்திலே குற்றம் கூற முற்படும்போது அந்த எழுத்தை அப்படியே எடுத்தெ ழுதியல்லவா குற்றம் சாட்ட வேண்டும்?, கருத்தையே மாற்றிவிட்டால் எப்படி?**

**உண்மையை எழுதுவது என்றால் அவர்களது வாசகத்தை அப்படியே முதலில் எடுத்து எழுதி பிறகு அதன் கருத்தின் மீது குற்றம் சாட்ட லாமே?**

**உண்மை என்ன?**

**உண்மையில் தானவி அவர்கள் எழுதியதாவது:**

**நாயகம்(ஸல்-அம்) அவர்களை *ஆலிம் -* *பில் - கைப்* (மறைந்த வற்றையெல்லாம் அறியக் கூடியவர்கள்) என்று அல்லாஹ்விற்கு நிகராக்கிக் கூறக்கூடாது. சில மறைந்த வற்றை அறிந்தவர்கள் என்ற அர்த்தத்தில் கூறுகின்றோம் என்று யாராவது கூறினால் சில மறைந்தவை என்னும்போது நாயகம் (ஸல்-அம்) அவர்கள் மட்டுமின்றி மற்றவர்களும் அவற்றை அறிந்து இருக்கலாமே!**

**ஜைதை விட்டு மறைந்ததை அம்று அழிந்திருக்கலாம் எல்லா பொருட்களும் அறிந்திருக்கலாம் எனவே சில மறைந்த வற்றை என்று அர்த்தம் கொண்டு *செல்வது கூடாது***

**அப்படியே கூடும் என்றால் அந்த சிலவற்றை ஏதோ ஒன்றை ஒவ்வொருவரும் அறிந்து இருக்கலாமே நபியவர்களுக்கு இதில் என்ன விசேஷம் இருக்கிறது?**

**தக்க பதில் : பக்கம், 126,127**

கீரனூரியாரின் மேற்படி பதிலில்,

"ஒவ்வொரு குழந்தையும் பைத்தியக்காரன் எனினும் அனைத்து மிருகங்களும் கால்நடைகளுக்கும் மறைவான அறிவு உண்டு" என்ற வாசகத்தை ஏப்பமிட்டு விட்டார்;

தானவியின் அஸல் வாசகத்தை இங்கே பதிவிடுகின்றேன் உருது தெரிந்தவர்கள் படித்து கீரனூரியாரின் திருட்டுத்தனத்தை கண்டு கொள்ளுங்கள்!

اپ کی (نبی علیہ السلام ) ڈات مقدسہ پر علم غیب کا حکم کیا جانا , اگر بقول زید صحیح ہو تو دریافت طلب امر یہ
ہے کہ اس غیب سے مراد بعض غیب ہے یا کل علم اگر بعض علوم غیبیہ مراد ہیں اسمیں حضورکی کیا
تخصیص ہے ایسا علم تو زید وعمر بلکے ہر مجنون بلکے جمیع حیوانات وبہائم کے لیے بہی حاصل ہے
کیونکے کہ ہر شخص کو کسی نہ کسی ایسی بات کا علم ہوتا ہے جو دوسرے شخص سے مخفی ہے

حفظ الایمان صفحة ٢٦

அஷ்ரப் அலி தானவியின் மேற்படி அசல் வாக்கியத்தில் சிறு குழந்தை பைத்தியக்காரன் விலங்குகள் உயிரினங்கள் எல்லாவற்றுக்கும் உண்டு இதில் நபியவர்களுக்கு என்ன விசேஷம் இருக்கிறது? என்று தெளிவாகவே எழுதியுள்ளார்.

கீரனூரி யார் அதனை அப்படியே மறைத்துவிட்டு ஏதோ பதில் சொல்வதாக குற்றச்சாட்டை ஒப்புக் கொண்டுவிட்டு மழுப்புகிறார், மக்களை வார்த்தை ஜாலத்தால் மடையனாக்குகிறார்.

அஷ்ரப் அலி தானவியின் மேற்கண்ட கூற்றில் ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களின் மறைவான ஞானத்தை பைத்தியக்காரன் சிறு குழந்தை மிருகங்கள் உள்ளிட்டவையின் தரத்திற்கு தாழ்த்துகிறார்;

இந்தக் கூற்று ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களை கேவலப்படுத்தி அன்னாரை அவமானப்படுத்துவதாகும்.

இதனால் தான் புனித மக்கா மதினா உலமாக்கள் அஷ்ரப் அலி தானவியையும், இக்கருத்தை சரிகண்டவர்களையும் காபிர்கள் என்றும், அவர்களை காபிர்கள் என்று சொல்லத் தயங்கியவர்களும் காபிர்களாவார்கள் என்றும் தீர்ப்பு கொடுத்தனர்.

அஷ்ரப் அலி தானவி யின் மேற்கண்ட கூற்றையும் அதற்கு மக்கா மதினா உலமாக்கள் கொடுத்த மார்க்கத் தீர்ப்பையும் மாத்தறை விவாத மகாநாட்டில் ஷெய்குனா ஸூபி ஹலரத் அவர்கள் எடுத்துக்கூறி இந்த கொள்கையைத்தான் போதிப்பது தனது நோக்கம் என்று மௌலவி இல்யாஸ் கூறியிருக்கிறார்.

ஆகவே, தப்லீக் ஜமாத் கெட்ட எண்ணத்தோடு வேஷம் போட்டு வந்திருக்கிறது அதில் ஒரு போதும் முஸ்லிம்கள் சேரக்கூடாது என்று வலியுறுத்திக் கூறினார்கள்

அங்கு கூடியிருந்த தப்லீக் ஜமாத் சார்பான உலமாக்களுக்கு இவையாவும் செவிடன் காதில் ஊதிய சங்காகவே இருந்தது

இவர்களுடைய மனதில் ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களை விட அஷ்ரப் அலி தானவியும்,தேவ் பந்து ஷைகுமார்களும் , தப்லீக் ஜமாத்தும் முக்கியமானதாக காணப்பட்டது!

**அதனால் தான் அச்சபையில் இருந்த யாஸீன் மௌலானா அஷ்ரப் அலி தானவி பறாறித் துதிபாடி அவரை மற்றவர்கள் ஏற்கவேண்டும் என்று முனைப்பாக செயல்பட்டார்**

**யாஸீன் மௌலானா அவர்கள் மௌலானா அப்துல் அலீம் சித்தீகி ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்களைப் பற்றியும், அவர்கள் அஷ்ரப் அலி தானவி க்கு எதிராக மார்க்கத் தீர்ப்பு வழங்கியதையும் தெளிவாக அறிந்தவர்; இருப்பினும் ,அவர் அனைத்தையும் தூக்கி எறிந்துவிட்டு வழி கேடர்களுக்கு ஏன் வக்காலத்து வாங்கினார் என்பதுதான் புரியாத ஆச்சரியமாக இருக்கிறது?**

**தொடரும். ....**

**Part 23**

**குற்றச்சாட்டு : 7**

**அல்லாஹ் பொய் சொல்லலாம் !**

**மௌலானா கங்கோஹி அவர்கள் இப்படி ஒரு பத்வா கொடுத்துள்ளார்களாம்; இதுதான் குற்றச்சாட்டு!**

**பதில்: 7**

**மேற்கண்டது போல் ஒரு பத்வா கங்கோஹி (ரஹ்) அவர்கள் கொடுக்கவும் இல்லை ; அப்படியொன்றுஅவர்களது நூற்களில் காணப்பவுமில்லை,**

**றஷீத் அஹ்மத் கங்கோஹி அல்லாஹ்வுக்கு பொய் சொல்ல முடியும் என்று பத்வா கொடுக்கவே இல்லை என்று அழுத்தம் திருத்ஊமாகக் கூறுகிறார் அல்லவா?**

**பின்னர் எப்படி பல்டி அடித்து விடயத்துக்கு வருகின்றார் என்பதைக் கவனியுங்கள்!**

-----------

**கீரனூரியார் எழுதுகின்றார்;**

**கங்கோஹி கொடுத்த பத்வா என்ன?**

**கீழ்கண்ட பத்வா கங்கோஹியின் நூல்களில் காணப்படுவது உண்மை , அதாவது அல்லாஹுத்த ஆலாவுடைய 'தாத்' (உள்ளமை) பொய் என்பதை விட்டும் மிகத் தூய்மையானதும், பரிசுத்தமானதுயாகும்,**

**குர்ஆனில் அல்லாஹ்வே நம்மை நோக்கி கேட்கின்றான்,**

**"மேலும் அல்லாஹ்வை விட வாக்கால் உண்மையானவன் யார்?**

**அல்லாஹ் பொய் செல்வான் என்று யாராவது கொள்கை கொண்டிருந்தாலோ, நாவால் கூறினாலோ, நிச்சயமாக அவன் காபிரானவனும் சபிக்கப்பட்டவனும் குர்ஆன்,ஹதீது, இஜ்மாஃ, ஆகியவற்றிற்கு மாறு செய்தவனும் ஆவான்;**

**நிச்சயமாக அவன் முஃமினல்ல! அல்லாஹ் அநியாயக்காரர்களின் கூற்றுக்களை விட்டும் மிக உயர்ந்தவன் ஆவான்.**

ஈமான் கொண்டோர் அனைவரும் இக்கொள்கை உடையவராவர்

அதாவது, ஃபிர்அவ்ன், ஹாமான் அபூலஹப் ஆகியோர் சம்பந்தமாக நரகவாதிகள் என்று குர்ஆனில் சொல்லப்பட்டிருப்பது மாற்ற முடியாத உறுதியான சட்டமாகும்; அல்லாஹ் இதற்கு மாறு செய்ய மாட்டான்; இது நிச்சயம்,!

ஆனால், அவர்களுக்குச் சொர்க்கம் கொடுத்து விடவும் அல்லாஹ் சக்தி உடையவனாக இருக்கின்றான்; அவர்களை நரகவாதி என்று கூறி விட்ட காரணத்தால் அவன் இயலாதவனாக சக்தி அற்றவனாக ஆகிவிடவில்லை அவன் சக்தி உடையவன் ஆனால், அவனது *சுய* இஷ்டத்தை கொண்டு அப்படி செய்ய மாட்டான்.

இதுதான் உண்மையில் அவர்கள் கொடுத்த பத்வா!

இதன் பின், குர்ஆனிலிருந்தும், தப்ஸீர் பைழாவியிலிருந்தும் சில ஆதாரங்களை எடுத்து காண்பித்துள்ளார்கள்.

கங்கோஹி அவர்கள் மேற்கண்ட தமது பதிலில் ஒளிவுமறைவின்றி தெளிவாக கூறுகிறார்கள்;

அல்லாஹ் பொய் சொல்வான் என்று நம்புபவன் காபீர்கள் சபிக்கப்பட்டவர்கள் என்று! ஆனால், நமது உபகாரிகள் அவர்கள் மீது இக்குற்றச்சாட்டை திணிகிறார்கள் என்ன ஆச்சரியம்!.

குர்ஆனுடைய இந்த இரண்டு ஆயத்துக்களை கவனியுங்கள்!

**ஒன்று: நீங்கள் அவர்களிடையே இருக்க அல்லாஹ் அவர்களை வேதனை செய்பவனாக இல்லை;**

**அல்குர்ஆன்**

**இரண்டு :**

**நபியே கூறுங்கள்! உங்கள் மீது வேதனையை இறக்க அவன் சக்தி கொண்டவன்**

**அல்குர்ஆன்**

**முதல் ஆயத்திலேயே வேதனை இறக்க சக்தி உடையவன் என்று கூறுகிறான்; அதாவது, இறக்க மாட்டான் இறக்க சக்தி உள்ளவன் என்பதுதானே இதன் பொருள்,**

**இதே போன்று தான் கங்கோஹி கொடுத்த ஆதாரம் பத்வாவும். அல்லா பொய் சொல்ல மாட்டான் ஆனால் சொல்ல சக்தி உடையவன் இதை மறுத்து யாராவது கூறினால், நமது மறுப்பாளர்கள் கூறுவதுபோல்,**

**இறைவன் சில காரியங்கள் செய்ய சக்தி அற்றவன் என்று ஏற்றுக் கொள்வதாகவே அர்த்தமாகும்; இறைவனை சக்தி அற்றவன் என்று யாராவது கூறினால், என்ன ஆகும்? என்பது எல்லோருக்கும் தெரியும்.**

**தக்க பதில்: பக்கம்:129- 131**

**கீரனூரியாரின் மேற்கண்ட பதிலின் முரண்பாட்டையும் , திருகு தாளத்தையும் கவனியுங்கள்!**

அல்லாஹ் பொய் சொல்ல சக்தியுள்ளவன் என்று றஷீத் அஹ்மத் கங்கோஹி கூறியுள்ளார்என்பதுதான் கேற்றச்சாட்டு!, இந்த கூற்று குப்றை ஏற்படுத்தக்கூடியது!

இதைத்தான் கீரனூரியார் மறுத்து,

1) இவ்வாறான ஒரு பத்வாவை கங்கோஹி வழங்க வில்லை என்றும், அவரின் நூலில் காணப்படவுமில்லை என்றும் கோடிட்டுக் கூறுகின்றார்?

2) அல்லாஹ் பொய் சொல்வான் என்று கூறுபவன் காபிர், சாபத்தாற்குரியவன், குர்ஆன் , ஹதீது,இஜ்மாஃவுக்கு எதிரானவன் ; அவன் முஃமின் அல்ல! என்று கடுமையாக கங்கோஹி கூறியதாக மேற்கோள் காட்டுகின்றார்;

3) ஃபிர்அவ்ன் , ஹாமான், அபூலஹப் உள்ளிட்டோர் நரகவாசிகள் என்பது மாற்றப்பட முடியாத உறுதியான சட்டம் என்றும், இதற்கு அல்லாஹ் மாறு செய்ய மாட்டான் என்றும் திட்டவட்டமாக கூறிவிட்டு;

4) இவர்களுக்கு சொர்க்கத்தைக் கொடுக்கவும் சக்தியுள்ளவன் என்றும் , அதனை தனது சுய இஷ்டத்தால் கொடுக்கமாட்டான் என்றும் புலம்புகின்றார்.

இறுதியாக,

அல்லாஹ் பொய் சொல்ல மாட்டான் ; ஆனால் பொய் சொல்ல சக்தியுள்ள வன் " என்று கூறி முடிப்பதோடு கங்கோஹி கொடுத்த ஆதாரமிக்க பத்வா இதுதான் என்கின்றார்.

**கீரனூரியாரின் கூற்றில் உள்ள முரண்பாட்டைக் கவனித்தீர்களா?**

**முதலில் கங்கோஹி அல்லாஹ்வுக்கே பொய் சொல்ல முடியும் என்று கூறவில்லை என்கின்றார்;, அவர் நூலில் அப்படி ஒரு பத்வா கிடையாது என்று அடித்துக்கூறுகிற்றார்**

**இறுதியில் அவ்வாறு கொடுத்ததையும் அவர் நூலில் உள்ளதையும் ஒப்புக்கொண்டு உறுதிப் படுத்துகின்றார்? ஃபிர்அவ்ன் ,ஹாமான், அபூலஹப் உள்ளிட்டவர்கள் நரகவாசிகள் என்றும் , இது மாற்றப்படமுடியாத உறுதியான தீர்ப்பென்றும் கூறிவிட்டு,**

**அவர்களுக்கு சொர்க்கம் கொடுக்கவும் சக்தியுடையவன் என்றும் அதை தனது சுய சக்தியால் செய்ய மாட்டான் என்றும் பித்துப் பிடித்தவன் போல் பிதற்றுகின்றார்;**

**கீரனூரியாரின் கூற்றுப்படி அல்லாஹ் தனது வாக்குறுதிக்கு மாறு செய்வான்; அதனை தனது சுய சக்தியால் இல்லாமல் வேறு ஒருவரின் சக்தி கொண்டு செய்வான் என்கின்றார். தனது வாதத்தை நிறுவ இரு திருவசனங்களை மேற்கோள் காட்டுகின்றார்;**

1) **நீங்கள் அவர்களிடையே இருக்க அல்லாஹ் வேதனை செய்பவனாக இல்லை;**

2) **நபியே! கூறுங்கள்! உங்கள் மீது வேதனையை இறக்க சக்தி கொண்டவன்.**

**பின்னர் இவ்விரு திருவசனத்திலிருந்தும் பின்வரும் முடிவை எடுக்கின்றார்; வேதனை இறக்கமாட்டான்; இறக்க சக்தியுடையவன் என்று கூறிவிட்டு கங்கோஹியின் கூற்றை நியாயப்படுத்துகின்றார்;**

**அதாவது , அல்லாஹ் பொய் சொல்ல மாட்டான் ;ஆனால் சொல்ல சக்தியுள்ளவன்.**

**அல்லாஹ் பொய் சொல்வான் என்பது சாத்தியமில்லாதது என்றும், பொய்யை அல்லாஹ்வோ டு தொடர்பு படுத்துவது குப்றை ஏற்படுத்தும் என்று கூறுவோரின் கூற்றை இப்படி விமர்சிக்கின்றார்;**

**"இதை மறுத்து யாராவது கூறினால் (நமது மறுப்பாளர்கள் கூறுவது போன்று)**

**இறைவன் சில காரியங்கள் செய்யச் சக்தியற்ற வன் ,என்று ஏற்றுக்கொள்வதாக அமையும் என்றுகூறி விடயத்தை முடிக்கின்றார்.**

**கீரனூரியாரின் பதிலில் உள்ள குறைகளை கவனியுங்கள்.!,**

1) **அல்லாஹ்வுக்குப் பொய் சொல்வதுஆகும், என்பதும்,அவன்வாக்குக்கு மாறுசெய்வது சாத்தியம் என்பதும் வழிகெட்ட முஃதஸிலாக்களின் வாதம் என்பதை முதலில் புரிந்து கொள்ள வேண்டும்;**

2) அல்லாஹ்வின் பண்புகள் அனைத்தும் நிறைவானவை; குறைகளை விட்டும் பரிசுத்தமானவை;, பொய் என்பது இழிவான குறையுள்ள பண்பு! அது அல்லாஹ்வுக்கு இருக்கத் தகாத முஸ்தஹீலான பண்பு என்பது அஹ்லுஸ்ஸுன்னத் வல்ஜமாஆத்தின் அகீதாவாகும்; இதை கீரனூரி மறுக்கின்றார்;

3) கங்கோஹியார் அஹ்லுஸ்ஸுன்னத் வல்ஜமாஅத்தின் அகீதா விலிருந்து விலகி முஃதஸிலாக்களின் அகீதா வை அஹ்லுஸ்ஸுன்னத் வல்ஜமாஅத்தார்மீது திணிக்க முற்படுகின்றார்.

முஃமின்களில் நல்லவர்களுக்கு சொர்க்கம் தருவேன் என்பது அல்லாஹ் வின் வாக்கு! அதுபோல் ஷிர்க் அல்லாத பாவங்களைமன்னிப்பேன் என்பதும் அல்லாஹ்வின் கூற்று !

நீதியினடிப்படை யில் நல்லவர்களுக்கு சொர்க்கத்தை யும், பாவிகளுக்கு நரகத்தையும் வழங்குவான்; அவன் நாடிய பாவிகளை மன்னித்து சொர்க்கம் கொடுப்பதும், அவன்நாடாதவர்களை நரகில் கண்டிப்பதும் அவன் அவன் விருப்பத்திற்குட்பட்டது!

இந்த செயல் பொதுவான அவனின் நாட்டத்திற்குட்பட்டதாகும்!

ஷிர்க்கை மன்னிக்க மாட்டேன் என்றும் , அவர்கள் நரகில் நீடூழி காலம் இருப்பார்கள் என்பதும், அவர்களின் வேதனையில் கருணை இல்லை என்பதும் அல்லாஹ்வின் பொதுவான வாக்காகும்.! இதில் மாற்றம் வருவதில்லை! இதில்,அவனின் நாட்டம் சம்பந்தப்படுவதில்லை!

**தப்ஸீர்கள், அகீதா நூற்களில் இவ்விடயம் மிகத் தெளிவாக எழுதப்பட்டுள்ளது !**

**கங்கோஹியார் தப்ஸீர் பைழாவியிலிருந்து தனது வாதத்திற்கு ஆதாரம் காட்டுவதாக கூறுவது சுத்தம் பொய்யாகும்;**

**தப்ஸீர் பைழாவியில் வருவதைப் படியுங்கள்!**

**" ومن اصدق من الله حديتا"**

**انكار ان يكون احد اكثر صدقا منه فانه لايطرق الكذب الي خبره بوجه لانه نقص وهو محال علي الله تعالي**

**தனது வார்த்தையில் அல்லாஹ்வை விட மிக உண்மையானவன் யார்? (அல்குர்ஆன்)**

**இத் திருவசனம் அல்லாஹ்வை விட உண்மையானவன் இருப்பதை மறுக்கின்றது;எனவே,அவனுடைய வாக்கில் பொய்,வாக்குமாறு என்ற குற்றச்சாட்டை ஒருபோதும் ஏற்படுத்த முடியாது! காரணம், இது வடுவாகும்; இது அல்லாஹ்வின் தாத்தில்அசாத்தியமாகும்.**

**ஆதாரம்:**

**தப்ஸீர் பைழாவி வால்யூம் - 1பக்:195**

**தப்ஸீர் கபீரில் பின்வருமாறு எழுதப்பட்டுள்ளது..**

**وان الكذب والخلف في قوله محال.**

**அல்லாஹ்வின் கூற்றில் பொய்யும் , வாக்கு மாறுபாடும் அசாத்தியமாகும் .**

**வால்யைம் : 3 பக்கம்: 279**

يستحيل عليه تعالي سمات النقص كالجهل والكذب

مسائرة ص، ٣٩٣

**பொய், அறியாமை உள்ளிட்ட எத்தனை வடுக்கள் உள்ளனவோ அவையனைத்தும் அல்லாஹ் மீது இருக்கத் தகாதவையாகும்.**

**ஆதாரம் : முஸாயிறா பக்கம்; 393**

الكذب علي الله تعالي محال لانه دناءة

**பொய் அல்லாஹ்வுக்கு அசாத்தியமாகும்;, காரணம் அது இழிவான தாகும்.**

**ஆதாரம்: ஷறஹு ஸனூஸி**

**இவ்வாறு ஏராளமான நூற்களில் வடுவுள்ள எப்பண்பும் அல்லாஹ்வுக்கு இருக்கத்தகாதது என்று கோடிட்டுக் கூறப்பட்டுள்ளன;**

**கீரனூரியார் கூறுவது போன்று மனிதனால் முடியுமானதது அல்லாஹ்வால் முடியாதென்றால் அல்லாஹ் சிலவற்றில் சக்தியற்ற வன் என்று ஆகுமே! என்று அங்கலாய்க்கின்றார்;**

ان الله علي كل شيئ قدير .

என்ற திரு வசனத்தை ஆதாரமாகக் கொண்டு அல்லாஹ் அனைத்து வஸ்த்துவிலும் ஆற்றல் உள்ளவன்; ஆகவே , பொய்யும் ஒரு வஸ்த்து அதிலும் ஆற்றல் உள்ளவன் என்ற முடிவுக்கு வருகின்றனர்;

இது தப்பான விளக்கமாகும் ;

மேற்படி திருவசனத்தில் வரும் شئي، வஸ்த்து என்பது شاء நாடுகின்றவர் என்பொருளிலும், சில வேளை مشيئ நாடப்பட்டது என்ற பொருளிலும் வரும் என்று தப்ஸீர் பைழாவியில் வரையப்பட்டுள்ளது

இதனால்தான் தப்ஸீர் ஜலாலைனில் ,

ان الله ( كان ), علي كل شيئ (شاءه ) قدير

அல்லாஹ் நாடிய வஸ்த்துக்களில் ஆற்றல் பெற்றவர் என்று பொருள் கொடுத்துள்ளார்கள்; அல்லாஹ்வின் நாட்டம் படைப்பில் மட்டுமே தொடர்பு படும்; அதைத் தொடர்ந்து சக்தி பின் தொடரும் ;

இதன்படி, அல்லாஹ்வின் நாட்டம் ஆதியில் அவனுடைய அறிவில் எதில் தொடர்பாகுமோ அதில்தான் ஆற்றல் உள்ளவன் என்றாகும்,

மின்சாரத்தை சில பொருள் கடத்தாது என்பதனால் மின்சாரத்தில் குறை வருவதில்லை. குறை மின்சாரத்தில் அல்ல! பொருளில் என்று புரிகின்றோம் ;

இவ்வாறு தான் சிலவற்றில் அல்லாஹ்வின் ஆற்றல் தொடர்பு படாததால் அவன் ஆற்றலில் குறை வரும் என்பது முட்டாளின் வாதமாகும்.

அல்லாஹ்வால் முடியாதது , மனிதனால் முடியும் என்றால் மனிதனை விட அல்லாஹ் ஆற்றலில் குறைந்தவன் என்றாகும் என்கின்றார் கீரனூரியார்

மனிதனால் திருமணம் முடிக்கலாம் பிள்ளைகள் பெறலாம்; விபச்சாரம்,கொலை ,களவு உள்ளிட்ட அனைத்து பாதகங்களையும் செய்யலாம் ; இவையாவும் அல்லாஹ்வுக்கு முடியாது என்றால் அல்லாஹ் மனிதனை விட ஆற்றல் குறைந்தவன் என்றா பொருள்?

மனிதனுக்கு பொய் மட்டுமா முடியும்?

பாருங்கள்! வழிகெட்ட தேவ் பந்தி களின் கொள்கைகளை நியாயப்படுத்த எத்தனை குப்றுகளைச் செய்வதற்கு அவர்கள் தயிராகுகின்றார்கள்.?

இந்த கீழ்தரமான அஹ்லுல் ஸுன்னத் வல் ஜமாஅதத்திற்கு எதிரான அகீதா தப்லீக்கின் தலைவர்களின் நூல்களின் காணப்படுகின்றன; இதை நமது ஸுன்னத் வல் ஜமாஅத்தார்கள்

மத்தியில் பரப்பி மக்களை வழிகெடுப்பார்கள் என்றுதானே ஷைகுனா ஸூபிஹஜறத் நாயகமவர்கள்உரத்துக்கூறினார்கள்!

தப்லீக்கை ஆதரித்த , இப்போதும் ஆதரிக்கின்ற உலமாக்களுக்கு இந்த வழி கேடு பிழையாகத்தெரியவில்லையே! ஏன்?

இந்த வழிகேட்டு கீரனூரியாரின் மேற்படி நூல் 1972ல் வெளிவந்ததிலிருந்து இதுவரை ஷரீஆவைப் போதிக்கின்ற, பேசுகின்ற எவருக்கும் உறைக்காமலிருப்பதும் ஏன்?ஏன்?

அஷ்அரியா அகீதா வின் காவலர்கள் நாங்கள் என்று புதிதாக தலையைக் காட்டி விளம்பரம் தேடுவோர் தேவ் பந்தி களின் வழிகேடுகளை மறைத்தும், நியாயப்படுத்தியும் அவர்களோடு ஒட்டி உறவாடி உல்லாசமாக இருப்பதும்தான் ஏன்?ஏன்

இந்த வழிகேடுகளை மறைத்து, மக்கள் வழிகெடுவதற்குக் காரணமானவர்கள் நிச்சயம் அல்லாஹ்வின் சமுகத்தில் பதில் சொல்லித்தான் ஆக வேண்டும்.

இந்த வழிகேடுகள் பரவால்ல தடுப்பதற்கான சந்தர்பம மாத்தறை விவாதத்தில் இருந்தது! தப்லீக்கைக் காப்பற்ற கூசாத்தூக்கிய ஆலிம்களால் அந்த வாய்ப்பு நாசமாக்கும் பட்டது!

ஆகவே, வழிகேட்டு பரவியதற்கான அத்தனை பாவத்தையும் அவர்கள் சுமந்துதான் ஆக வேண்டும்!

தொடரும்....

**Part- 24**

**குற்றச்சாட்டு: 8**

**"றஸூலுள்ளாஹி (ஸல்-அம்), அவர்களைவிட இப்லீஸுக்குஅதிக இல்மு இருக்கின்றது!"மௌலானா அவர்கள் பராஹீனேகாதாஆ என்ற தமது நூலில் இப்படி எழுதியிருக்கின்றார்களாம்..**

**பதில் : 8**

**இந்தக் குற்றச்சாட்டு எவ்வளவு அர்த்தமற்றது என்பதை பாருங்கள்! மௌலானா அவர்கள் உயிரோடு இருக்கும்போதே இதைப்பற்றி அவரிடம் கேட்கப்பட்டு அவர்கள் பதில் சொல்லி இருக்கிறார்கள்; அவர்களது பதிலை இங்கு நாம் சுருக்கமாக எழுதுகிறோம்.**

**மௌலவி அஹமது ரசா கான் சாஹிப் பரேலி அவர்கள் என்மீது சாடியிருக்கும் இந்த குற்றச்சாட்டு முற்றிலும் அர்த்தமற்றது அடிப்படையற்றது இப்லீஸ்என்ன? படைப்பினங்களில் எந்த ஒன்றுக்காவது நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களைவிட அதிக இல்மு உண்டு என்று கருதுபவன் நானும் எனது ஆசிரியப் பெருந்தகைகளும் *காபிர், முத்தத்* *மல்ஊன்* என்றே நம்புகிறோம்.**

**இம்மாதிரியான எந்தக் கொள்கையும் "பராஹீனே காதிஆ"என்ற எனது நூலில் பகிரங்கமாகவும் மறைத்தோ அறவே கூறப்படவில்லை;**

**எனது வாழ்வு முழுவதிலும் இப்படிப்பட்ட ஒரு கற்பனை கூட எழுந்தது கிடையாது சைத்தான் அல்ல எந்த அவுலியாவிற்கும்**

கூட நாயகத்தின் இல்மைவிட அதிகம் என்பது ஒரு பக்கம் இருக்கட்டும் சமமான அளவு இல்மு கூட இல்லை என்றே நான் கூறுவேன்.

நான் கூறியதாக குற்றம்சாட்டப்படும் இந்தக் கொள்கை கலப்பற்ற குப்றாகும் ; இதைப்பற்றிய கேள்வி கணக்கு கியாமத்து நாளில் நடக்கும் நான் இது விஷயத்தில் முற்றிலும் தூயவன் இதற்கும் எனக்கும் எந்த சம்பந்தமும் கிடையாது (இறைவனே சாட்சி அவனே போதும்)

முஸ்லிம்கள் பராஹீனே காதிஆவை நன்றாக பார்க்கட்டும் விஷயம் தெளிவாக உள்ளது.

(கலீல் அஹ்மத்)

மவுலானா அவர்கள் தாமே தமது கொள்கை என்ன என்பதை தெளிவாக விளக்கி கூறிவிட்டார்கள்; எனவே, நாம் இது பற்றி இனி எதுவும் எழுத வேண்டியதில்லை என்றாலும் குற்றம் சாட்டுபவர்கள் இதை வைத்து ஏமாற்றுகிறார்கள் என்பதை வாசகர்கள் நன்றாக புரிந்துகொள்ள ஒரு விளக்கத்தை தருகிறோம்.

**அன்வாரெ ஸாத்திஆ'வின் உண்மை சொரூபம்!**

அன்வாரெ ஸாதிஆவின் ஆசிரியர் பரேலி ரஜாகான் சாஹிப் அந்நூலில் நாயகம்(ஸல்-அம்) அவர்கள் மீலாது மஜ்லிஸுகளிலும் ஹாஜராகிறார்கள் என்று கூறி, அதற்கு குர்ஆன் ஹதீஸில் இருந்து மேற்கோள் ஆதாரம் காட்டாமல் பாருங்கள் மலக்குல் மௌத் , இஸ்ராயீல் உயிர் வாங்க ; ஷைத்தான் மக்களை

**வழிகெடுக்க ஒரே நேரத்தில் பல இடங்களில் ஹாஜிராகிறார்கள். அப்படியானால்,**

**நபி மட்டும் ஏன் அப்படி ஹாஜராக முடியாது? என்று எழுதி தமது கொள்கையை உறுதிப்படுத்த முயன்றுள்ளார் இதை தட்டிக் கேட்கிறார்கள் மௌலானா கலீல் அஹ்மத் அம்பேட்டவி அவர்கள்!**

**மலக்குல் மௌத் , ஷைத்தானுடைய விஷயம் குர்ஆன் ஹதீஸ் ஆகியவற்றின் பகிரங்கமான ஆதாரம் கொண்டு நிரூபிக்கப்பட்ட விஷயம் கொள்கை சம்பந்தப்பட்ட விஷயங்களுக்கு இப்படிப்பட்ட ஆதாரம் தேவை ஆதாரமின்றி நாமாக ஒன்றை கொள்கை (அகீதா) என்ன நம்புதல் அர்த்தமற்ற விஷயம் ஆகவே தங்கள் கூற்றுக்கு ஆதாரம் தேவை!**

**இதைத்தான் இந்த உபகாரிகள் ரஸூலுள்ளாஹி (ஸல்-அம்) அவர்களை விட இப்லீஸுக்கு அதிக இல்மு இருக்கிறதுஎன்று மௌலானா அவர்கள் கூறியதாக விபரீத விளக்கம் கூறுகிறார்கள்.**

**த.ஜ.ப.த.கு. தக்க பதில்களும். பக்கம் :132-133**

**கலீல் அஹ்மத் கீரனூரியார் வழக்கம் போன்று இங்கும் அதே வாடிக்கையான புரட்டு வேலையை சிறப்பாகச் செய்திருக்கின்றார்!**

**பராஹீனே காதிஆ என்ற நூலில் பகிரங்கமாகவோ, மறைத்தோ இப்படியான ஒரு கருத்து அறவே கூறப்பட வில்லை என்று அறிதியிட்டுக் கூறுகின்றார்;**

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை விட இப்லீஸுக்கோ,படைப்பினங்களில் எவருக்காவது இருப்பதாகக் கூறுபவனை கலீல் அஹ்மதும், அவர் ஆசிரியப் பெருந்தகைகளும் காபிர்,முர்தத், என்றும் கூறியுள்ளதாக வாக்குமூலம் கொடுக்கின்றார்;

இந்த பொய்யான குற்றச்சாட்டை அஹ்மது ரிஜாகான் அன்வாறுஸ் ஸாத்திஆ என்ற நூலில் தன்மீது வேண்டுமென்று சுமத்துவதாக அவர்மீது பழியைப் போடுகின்றார்.

மௌலிது மஜ்லிஸுகளில் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் ஹாஜராகின்றார்கள்என்று அஹ்மது ரிஸாகான் கூறுவதை ஆட்சேபித்து அவரிடம் விளக்கம் கேட்டதாக ஒப்புக்கொள்கின்றார்.! இவ்வாறு ஆதாரம் கேட்கும் சமயத்தில்,

" மலக்குல் மௌத் ,ஷைத்தானுடைய விஷயம் குர்ஆன், ஹதீஸ் ஆகியவற்றின் பகிரங்கமான ஆதாரம் கொண்டு நிரூபிக்கப்பட்ட விஷயம். கொள்கை சம்பந்தப்பட்ட விஷயங்களுக்கு இப்படிப்பட்ட ஆதாரம் தேவை .

ஆதாரமின்றி தாமாக ஒன்றைக் கொள்கை (அகீதா) என நம்புதல் அர்த்தமற்ற விஷயம். ஆகவே, தங்கள் கூற்றுக்கு ஆதாரம் தேவை !என்றுதான் கலீல் அம்பேட்டி எழுதியதாகக் கூறி அனைவரினது கண்களில் மண்ணை அள்ளி வீசுகின்றார்..

இமாம் அஹ்மத் றிஸா கான் " அன்வாருஸ் ஸாத்திஆ" என்ற நூலி கலீல் அஹ்மத்அம்பேட்டவி மீது இந்த பொய்யான குற்றச்சாட்டை சுமத்தியதாக குற்றம் சாட்டுகின்றார் கீரனூரியார்?

கீரனூரியார் கூறுவது போன்று மேற்படி நூல் இமாம் அஹ்மது ரிஸாகான் றஹ்மத்துள்ளாஹி அவர்களுக்குரியதல்ல!

இந்த நூலுக்குரிய ஆசிரியர் அல்லாமா அப்துல் ஸமீஃ பைதல் ஸஹறான் பூரி றஹ்மத்துள்ளாஹி அலைஹி ஆவார்கள்.

கலீல் அஹ்மத் அம்பேட்டி கூறிய உண்மையான வாசகத்தை கீரனூரியார் இருட்டடிப்பு செய்துள்ளார்,

உண்மையான வாசகம் வருமாறு!

الحاصل غور کرنا چاہیے شیطان اور ملک الموت کا حال دیکھ کر علم محیط زمین کا فخر عالم کو کو نصوص قطعی کے بلا دلیل محض قیاس فاسد سے ثابت کرنا شرک نہیں تو کون سا ایمان کا حصہ ہے ؟ شیطان اور ملک الموت کو یہ وسعت علم نص سے ثابت ہوئی فخر عالم کی وسعت علم کی کونسی نص قطعی ہے کہ جس دمام تمام نصوص کو رد کر کے کے ایک شرک ثابت کرتا ہے،

براہین قطعیہ : ص، 51

முடிவாக கூர்ந்து சிந்திக்க வேண்டும். ஷைத்தான், மலக்குல் மௌத்துக்குரிய நிலையை பார்த்த பின், றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு பூமியைச்சூழ்ந்த அறிவை திட்டவட்டமான ஆதாரங்களுக்கு மாற்றமாக ஆதாரமில்லாமல் பிழையான ஒப்பாய் வின் மூலம் நிறுவுவது ஷிர்கில்லாமல் ஈமானின் எந்தப் பாகத்தைப் சேர்ந்ததாகும்.?

ஷைத்தான், மற்றும் மலக்குல் மௌத்தின்இந்த விசாலமான அறிவு திட்டவட்டமான ஆதாரத்தோடு நிரூபணமானது. றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் விசாலமான அறிவுக்கு திட்டவட்டமான ஆதாரம் என்ன இருக்கின்றது?

அதாவது,

அதன் மூலம் அனைத்து திட்டவட்டமான ஆதாரங்களையும் நிராகரித்து விட்டு ஒரு ஷிர்க்கை நிறுவுவதாகும்.

பராஹீனே காதிஆ பக்கம்: 51.

அல்லாமா முஹம்மது அப்துஸ்ஸமீஃ றஹ்மத்துள்ளாஹி அலைஹி அவர்கள் தங்களுடைய " அன்வாறுஸ் ஸாதிஆவில் எழுதியுள்ள வாக்கியம் வருமாறு!

جب ملک الموت جگہ موجود ہے وہ تو مقربین ملائک میں سے ہے شیطان لعین کو دیکھو کہ وہ بھی ہر جگہ موجود ہے پھر شرک کیسے ہوا اور اگر رسول اکرم صلی اللہ علیہ وسلم کو جو تمام مخلوق ملائکہ وغیرہ سے افضل ہیں تو ان کے ہر جکہ فیض رساں ہونے میں کیونکر شرک ہوگا .

மலக்குல் மௌத் அனைத்து இடங்களிலும் உள்ளார்கள் ; அவர்கள் முகர்ரபான மலக்குகளைச் சேர்ந்தவர்கள்; சாபத்திற்குரிய ஷைத்தானைப் பாருங்கள்! அவனும் கூட சகல இடங்களிலும் இருக்கின்றான்; பின்னர், ஷிர்க் எப்படி வரும்?

மேலும், ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அனைத்து படைப்பினங்கள் மலக்குகள் இன்னும் அவர்கள் அல்லாதவர்களை விட மேலானவர்கள்; அவர்கள் அனைத்து இடங்களிலும் இருப்பது எந்த வகையில் ஷிர்க ஆக ஆகும்?

**இந்த கூற்றை மறுதழித்துத்தான் கலீல் அம்பேட்டி அவர்கள் மேற்கண்ட அசிங்கத்தைக்கக்கினார்;**

**அம்பேட்டியாரின் கூற்றை நிதானமாகக் கவனியுங்கள்.!**

**ஷைத்தான், இன்னும் மலக்குல் மௌத் உள்ளிட்டோரின் விசாலமான, அல்லது அதிகமான அறிவு பற்றி திட்டவட்டமான ஆதாரம் உண்டு.! ஆனால் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் பரந்த அறிவு பற்றி எந்தவிதமான உறுதியான ஆதாரம் கிடையாது.**

**இதனால் ஷைத்தான் லயீனுக்கு றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை விட அறிவு அதிகம்; ஆனால் , யாராவது றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் அறிவை ஷைத்தானின் அறிவை விட அதிகம் அல்லது நிகர் என்றோ கூறுவாராயின், முஷ்ரிக்காக ஆகிவிடுவார்;**

**றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு அல்லாஹுத்த ஆலா சகல விதமான அறிவையும் கற்றுக்கொடுத்து விட்டான்; விதி எழுதும் பேனாவிலும், லௌஹுல் மஹ்பூழ் ஏட்டிலும் இருக்கும் அறிவு றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் அறிவில் சொற்பமே!**

**றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் அறிவை விட, மற்றொருவரின் அறிவு அதிகம்**

என்றோ, அல்லது சமம் என்றோ  கூறுவது குப்றை ஏற்படுத்தும் காரியமாகும்.!,

இப்போது கலீல் அஹ்மது அம்பேட்டியின் வாசகத்தையும், அம்பேட்டியார் கூறியதாக கீரனூரியார் கூறிய தீர்ப்பின் படி அம்பேட்டியார் தன்கையால் தன்கண்ணைக் குத்தி காபிராகி விடவில்லையா?

அம்பேட்டியாரின் மேற்படி நூலில் உள்ள மேற்படி சொற்றொடர் குப்றானது என்றே முடிவு செய்து புனித மக்கா மதீனா  முப்தி கள் அம்பேட்டியாரையும், இக்கருத்தை சரிகண்டவர்களையும், இவர்களைக் காபிர்கள் என்று சொல்லத் தயங்கியவர் களையும் காபிர்கள் என்று ஃபத்வாக் கொடுத்தார்கள்;

இந்தக் கூற்றையும்  இதைக்கூறியவர்களுக்கான புனித மக்கா மதீனா முப்தி களின் ஃபத்வாவையும் ஷைகுனா ஸூபிஹளறத் நாயகம் கத்தஸல்லாஹு ஸிர்ரஹுல் அஸீஸ் அவர்கள் மாத்தறை விவாத மாநாட்டில் உணர்ச்சி ததும்பக் கூறினார்கள்;

தப்லீக் அணியிலிருந்தவர்களுக்கு கொஞ்சமும் இந்தக் கூற்று ஈமானைத் தொடவில்லை; அவர்களின் முழுக்க வனமும் ஷைகுனா ஸூபி ஹளறத் நாயகம் கத்தஸல்லாஹு ஸிர்ரஹுல் அஸீஸ் அவர்களை புறக்கணித்து விடுவதிலையே இருந்தது!

ஷைகுனா ஸூபி ஹளறத் நாயகம் கத்தஸல்லாஹு ஸிர்ரஹுல் அஸீஸ் அவர்கள் தப்லீக் ஜமாஅத்திற்கு எதிராக முன் வைக்கும் குற்றச்சாட்டுக்கள் சாதாரணமானவை யா?

**உயிரிலும் மேலான றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை ப்பற்றி விஷமத்தனமாகப் பேசியவிடயமல்லவா?**

**சாதாரணமான அடிமட்ட பாவியான முஸ்லிமும் இதை சகிக்க மாட்டானே! அப்படியிருக்க ஷைகு, அல்லாமா, குத்பு வலி என்று நீட்டி முழக்குகின்றவர்களுக்கு ஏன்இது உறைக்க வில்லை?**

**இந்த குப்றியத்துக்களுக்கு அங்கீகாரத்தை வழங்கிவிட்டு அவர் தொழுதென்ன? ஆயிரம் ஆழமான ஞான நூற்கள் எழுதியென்ன?, அனைத்துமே காற்றில் கலந்த தூசிகள் தான் !**

**எச்சரிக்கை!**

**இப்போதும் தப்லீக்ஜமாஅத்திற்கு மானசீக ஆதரவை வழங்கிக் கொண்டு தன்னையும் ஏமாற்றி முஸ்லிம்களையும் ஏமாற்றி வழிகெடுப்போர் அல்லாஹ்வின் தண்டனை திடுமென வருவதை பயந்து கொள்ளுங்கள்!**

**தொடரும்...**

## Part -25

**குற்றச்சாட்டு : 9**

**மௌலானா முஹம்மது காஸிம் நானூத்தவி (ரஹ்)மீது!**

"நுபுவ்வத்" நமது நாயகம் (ஸல்-அம்) அவர்களோடு முடிவடைந்து விடவில்லை காத்தமுன் நபிய்யீன் என்பதற்கு இறுதி நபி என்று பொருள் கொள்வது மடையர்களின் கொள்கை"

காசிம் நானூத்தவி(ரஹ்) அவர்கள் எழுதிய " தஹ்தீருன்னாஸ் என்ற நூலின்சில வாக்கியங்களில் இருந்து நமது மறுப்பாளர்கள் கடைந்தெடுத்த குற்றச்சாட்டு இது!

மறுப்பாளர்கள் தஹ்துருன்னாஸிலிருந்து எடுத்துக் காட்டும் வாக்கியங்களை பாருங்கள்!

"சாமானிய ஜனங்களின் அபிப்பிராயத்தில் ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் "காதம் நபிய்யீன்"என்பதற்குப் பொருள் அவர்கள் இறுதி நபியாக இருக்கும். அவர்களுக்கு பின்பு ஒரு நபி இல்லை என்பதாகும். ஆனால், காலத்தில் முந்துவது பிந்துவது தனி விசேஷம் இல்லை என்பது அறிவாளிகளுக்கு விளங்கும்.

நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்குப் பின் ஒரு ஒரு நபி உண்டானார்கள் அல்லது க உண்டாவார்கள் என்று வைத்துக் கொண்டாலும் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் காத்தமுன் நபிய்யீன் என்பதில் யாதொரு வித்தியாசமும் உண்டாகாது!

**பதில்: 9**

**காத்தமுன் நபிய்யீன்** என்ற பெயர் காலத்தால் கடைசியில் வந்தவரை மட்டும் குறிக்காது ஆம் இதுவும் அந்த வார்த்தைக்கு

கூறப்பட்ட ஒரு கருத்து என்றாலும் அது ஒரு திசையை மட்டும் பார்த்து எடுக்கப்பட்ட கருத்தாகும் உண்மையில் கத்மே நுபுவ்வத் என்பது ஓர்அந்தஸ்து பதவி அது நாயம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு மட்டுமே சொந்தம் வேறு யாருக்கும் அந்த பதவி அளிக்கப்பட வில்லை யாரும் அதை அடைந்து கொள்ளவும் முடியாது!

அந்தப் பதவியின் பரிபூரண தகுதி முஹம்மத் சல்லல்லாஹு அலைஹிவசல்லம் என்னும் தமது நபிக்கு மட்டுமே இருக்கிறது எனவே அவர்களைத் தவிர வேறு யாரும் காத்தமுன் நபிய்யீன் ஆக முடியாது.

அப்பதவியில் பரிபூரண தகுதிமுஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் எனும் தமது நபிக்கு மட்டுமே இருக்கிறது எனவே அவர்களைத் தவிர வேறு யாரும் சாதமும் நபிய்யீன் ஆக முடியாது"

இக்கருத்தையே நானூத்தவி (ரஹ்) அவர்கள் இப்படி விவரிக்கிறார்கள்.

வேறு ஒரு நபி நமது நாயகத்துக்கு பின் வருகிறார் என்று நாம் கற்பனை செய்து கொண்டாலும் (அப்படி ஒருபோதும் வரப்போவதில்லை) நாயகம் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் தான் 'காத்தம்" இறுதி என்பதில் எந்த அப்பழுக்கும் ஏற்பட முடியாது.

தக்க பதில் : பக்கம் 135-137

**வழக்கம் போல் கீரனூரியார் தனது தகிடு தத்தத்தை இங்கேயும் சிறப்பாக அரங்கேற்றுகின்றார்.**

**தேவ் பந்து மத்ரஸா வின் நிறுவனர் மௌலவி காஸீம் நானூத்தவி தனது "தஹ்றீறுன் நாஸ்" என்ற நூல் பக்கம் ,2,3 ல் பின்வருமாறு எழுதுகின்றார்;**

**عوام کے خیال میں تو رسول اللہ صلی اللہ علیہ وسلم کا خاتم ہوں نہ بایں معنی ہیں کہ آپ سب میں آخری نبی ہیں مگر اہل فہم پر روشن ہے کہ تقدم یا تاخر زمانی میں کچھ فضیلت نہیں الخ**

**பொதுமக்களின் அபிப்பிராயத்தில் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள்" காத்தமுன் நபிய்யீன்", என்பதன் பொருள் , அவர்கள் இறுதி நபி , அவர்களுக்குப் பின் வேறு நபி இல்லை என்பதாகும்;**

**ஆனால், காலத்தில் முந்துவதாலோ, பிந்துவதாலோ தனி விஷேஷமில்லை என்பது புத்திமான் களுக்கு விளங்கும்.**

**மீண்டும் அதே நூல் பக்கம் 12,13ல் பின்வருமாறு எழுதுகின்றார்,**

**بلکہ اگر بالفرض بعد زمانہ نبوی صلعم کوئی نبی پیدا ہو تو بہی خاتمیت محمدی میں کچھ فرق نہیں آئے گا**

**நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்குப் பின் *ஒரு நபி* *உண்டானார்கள்* *உண்டாவார்கள்* என்று வைத்துக்கொண்டாலும் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் காத்தமுன் நபிய்யீன் என்பதில் எவ்வித வித்தியாசமும் உண்டாகாது!**

**இதுதான் காஸிம் நானூத்தவி எழுதிய விடயம் ,**

**இதை முழுமையாக இருட்டடிப்புச் செய்த கீரனூரியார் நானூத்தவியைக் காப்பாற்ற எவ்வாறு குப்றைச் செய்வதற்கு துணிகின்றார் என்பதை கவனித்துக் பாருங்கள்.!**

**நானூத்தவியின் சொற்றொடரில் உள்ள தவறுகளைக் கவனியுங்கள்!,**

1) **றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள்- காத்தமுன் நபிய்யீன்- என்பதற்கு இறுதி நபி என்று பொருள் கொள்வது பாமர மக்களின் அடிமட்ட விளக்கமாகும்.!**

2) **காத்தமுன் நபிய்யீன் என்ற சொற்றொடர் காலத்தைக் குறிக்காது!**

3) **காலத்தில் முன், பின் வருவது சிறப்புக்குரிய விடயமல்ல**

4) **திருக்குர்ஆனில் இறுதி நபி என்ற பொருளில் வந்த "காதமுன் நபிய்யீன்" அல்லாஹ்வின் விளக்கம் மஆதல்ல பாமரனின் விளக்கமாகும்.**

5) **திருக்குர்ஆன்விளக்கத்தையும், நபியவர்கள் காலத்தால் பிந்திய வர்கள் என்ற கருத்தையும் மறுத்துள்ளார்;**
6) **திருக்குர்ஆனில் வரும்,** ولكن رسول الله وخاتم النبيين **ஆயினும் அல்லாஹ்வின் திருத்தூதரும், நபிமார்களின் முத்திரையாவரும் ஆவார்கள்.**

7) காலத்தால் முந்துவது,பிந்துவது என்ற அவரின் கூற்றின் மூலம் திருக்குர்ஆனின்இரு வாக்கியங்களுக்கிடையிலுள்ள தொடர்பை நீக்கி யுள்ளார்.

8) றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் இறுதி நபி (காத்தமுன் நபிய்யீன்) என்று கொள்வதில் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் தகுதியை குறைத்துள்ளார்.

9) எனக்குப் பின் வேறு இல்லை என்ற றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் கூற்றை மறுதழித்துள்ளார்,

10) றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்குப் பின் நபி வருவது சாத்தியம் என்று கூறி பொய் நபிமாருக்கான வாசலை திறந்து கொடுத்துள்ளார்.

11) றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் இறுதி நபி அவர்களுக்குப் பின் வேறு இல்லை ,வரமுடியாது என்ற உலமாக்களின் இஜ்மாஃவான தீர்ப்புக்கு மாறுசெய்துள்ளார்.

இப்படியான பல குறைகள் இருப்பதனால் தான் புனித மக்கா மதீனா முப்தி கள் காஸிம் நானூத்தவியை காபிர் என்று ஃபத்வாக் கொடுத்தனர் ;

**இந்த வழிகெட்ட கொள்கையை நீக்கிக் கொள்ளாமல் பிடிவாதமாக இதுவரை அக்கருத்தை நியாயப்படுத்தி,வாதித்துக் கொண்டுதான் தப்லீக் மேலிடம் இருக்கின்றது.**

**ஷைகுனா ஸூபி ஹளறத் நாயகம் கத்தஸல்லாஹு ஸிர்ரஹுல் அஸீஸ் அவர்கள் மாத்தறை விவாதம் நடப்பதற்கு பத்து ஆண்டுகளுக்கு முன்பே இக்குற்றச்சாட்டுக்களைப் பற்றி தக்க ஆதாரங்களோடு புத்தகங்கள் வெளியிட்டார்கள்.**

**கொழுத்த பணம் படைத்த தப்லீக் அமீர் மார்களின் கடைக்கண் பார்வைக்குள் சுருண்டு போன ஆலிம்கள், மௌலானாமார்கள் தப்லீக்கின் வழிகேட்டை கண்ணை இறுக மூடிக்கொண்டு அங்கீகாரம் கொடுத்தார்கள்.**

**அதன் விளைவுதான் இப்போது இலங்கையில் தேவ்பந்திஸம் உலகில் எங்குமில்லாத அளவு வீரியத்தோடு களைகட்டி நிற்கின்றது! இந்த பாவத்தை ஆரம்பத்தில் வழிதிறந்து அங்கீகாரம் கொடுத்த மேதாவிமார்கள்தான் சுமக்க வேண்டும்.**

**தொடரும்....**

**Part- 26**

**குற்றச்சாட்டு: 10**

**பயங்கரமான குற்றச்சாட்டு**

**மௌலானா ரஷீத் அஹ்மத் கங்கோஹி (ரஹ்) அவர்கள் மீது!**

மௌலானா கங்கோஹி , அப்துல் வஹ்ஹாப் நஜ்தியை புகழ்ந்து அவர் நல்லவரென பத்வாக் கொடுத்துள்ளார்கள்; எனவே அவர் வஹாபி

**பதில் : 10**

மௌலானா கங்கோஹி (ரஹ்) அவர்களிடம் நஜ்தியைப் பற்றி அவர் எப்படிப்பட்ட மனிதர் என்று கேட்கப்பட்ட போது அவர்கள் அவர் *நல்ல மனிதர்* ஹம்பலி மத்ஹபைச் சார்ந்தவர்அதன் படி அமல் செய்பவராகவும் ஷிர்க்,பித்அத்தைக் கண்டிப்பதாகவும் இருந்தார் என்று கூறியுள்ளார்கள் என்பது உண்மையே!

**தக்க பதில் : பக்,140.**

மௌலவி அப்துர் ரஷீத் கங்கோஹி இப்னு அப்துல் அப்துல்வஹாப் நஜ்தியை நல்லவர் என்று கூறி அவர் அகீதா வை அங்கீகரித்தார் என்பதுதான் குற்றச்சாட்டு!, இதைத்தான் பயங்கரமான குற்றச்சாட்டு என்று கூறிய கீரனூரியார் பின்னர் அவ்வாறு கூறியது உண்மை! என்றுஒப்புக்கொண்டு கங்கோஹியாரை நியாயப்படுத்த வழக்கமான சப்பைக்கட்டுக்களை முன்வைக்கின்றார்!

இவருடைய சப்பைக்கட்டுகளைப் பார்க்க முன் கங்கோஹியார் அவருடைய ஃபத்வா நூலில் கூறியவை என்ன? என்பதை முதலில் பார்ப்போம்;

سوال نمبر 11 عبدالوہاب نجدی کیسے شخص تھے؟

الجواب: محمد ابن عبد الوهاب کو لوکوں وہاں بھی کہتے ہیں وہ اچھا آدمی تھا سناہے کہ مذہب حنبلی رکھتا تھا اور عمل بالحدیث تہا بدعت و شرک سے روکتا تھا مگر تشدد اس کے مزاج میں تھے

**கேள்வி :**

**அப்துல் வஹ்ஹாப் நஜ்தி எப்படிப்பட்ட மனிதர்?**

**பதில் : முஹம்மது பின் அப்துல் வஹ்ஹாபை மக்கள் வஹாபி என்று சொல்வார்கள்; அவர் நல்ல மனிதர்! ஹன்பலி மத்ஹபைப் பின்பற்றியவர் என்று கேள்விப்படுகிறேன் ; ஹதீஸின் பிரகாரம் அவர் அமல் செய்கிறவர்;பித்அத்தையும்,ஷிர்க்கையும் தடுத்தார்; ஆயினும், அவரின் சுபாவத்தில் கடுமை இருந்தது!**

**பதாவா றஷீதிய்யா பக்கம் : 137**

**கங்கோஹியாரின் மேற்கண்ட பதிலில் அவரை நல்லவர் என்று கங்கோஹியார் முடிவு செய்ததற்கான காரணம்,**

1) **அவர் ஹதீஸின் பிரகாரம் செயல்பட்டார்;**
2) **ஷிர்க், பித்தத்தைக் கண்டித்தார்என்பதாகும்;**

**கங்கோஹியார் கேள்விப்பட்ட வகையில் அவர் ஹம்பலி மத்ஹபைப் பின்பற்றினார்;அவர் சுபாவத்தில் கடுமை இருந்தது!**

**வஹாபி நஜ்தி ஹம்பிலி மத்ஹபைப் பின்பற்றியதில் அவருக்கு சந்தேகம் ! ஆகவேதான் அதை கேள்விப்பட்ட வகையில் என்று குறிப்பிடுகின்றார், நஜ்தி, மத்ஹபுக்கு எதிராக செயல்பட்டவர் என்பதுதான் பரவலான பேச்சு! ஆகவேதான் கேள்விப்பட்ட வகையில் என்ற வார்த்தையைப் பிரயோகிக்கின்றார்; அவரைப்பற்றி அவர் கூறிய ஏனையவை திட்டவட்டமான விளக்கமாகும்;**

வஹாபி நஜ்தியின் சுபாவம் ; அவர் ஷிர்க் , பித்அத்தைக் கண்டித்தவை, ஹதீஸின் பிரகாரம் அவர்செயல்பட்டவை உள்ளிட்டவையை விளக்கமாக கங்கோஹியார்அறிந்து வைத்துள்ளார்.

கங்கோஹியார் மற்றுமொரு கேள்விக்கு பின்வருமாறு பதில் கூறுகின்றார்;

سولہوان سوال: وہابی کون لوگ ہیں اور ابن عبدالوہاب نجدی کا کیا عقیدہ تھا اور وہ کیسا شخص تھا اور اہل نجد کے عقائد میں اور سنی حنفیوں کے عقائد میں کیا فرق ہے ؟

الجواب: محمد بن عبدالوہاب کے مقتدیوں کے وہابی کہتے ہیں ان کے عقائد عمدہ تھے اور مذہب ان کا حنبلی تھا البتہ ان کے مزاج میں شدت تھی مگر وہ اور ان کے مقتدی اچھے ہیں مگر جو حد سے بڑھ گئے ہو ان میں فساد آگیا ہے اور عقائد سب کے متحد ہیں اعمال میں فرق حنفی شافعی مالکی حنبلی کا ہے

فتاوی رشیدیہ 235

16 வது கேள்வி:

முகம்மது பின் அப்துல் வஹ்ஹாபைப் பின்பற்றிய வர்களுக்கு வஹாபி என்று சொல்வார்கள்; அவரின் கொள்கை *நல்லது* அவரின் மத்ஹபு ஹன்பலிஆகும்; நிச்சயமாக அவரின் சுபாவத்தில் கடுமை இருந்தது ஆனாலும் அவரும் அவரை பின்பற்றியவர்களும் நல்லவர்கள்;

மெய்தான்! எவர்கள் எல்லையை மீறினார்களோ அவர்களால் குழப்பம் வந்துவிட்டது அனைவரும் கொள்கையில் ஒற்றுமையான வர்களாகும்; செயலில் ஹனபி, ஷாபி, மாலிகி, ஹம்பலி போன்ற வித்தியாசமே!

பதாவா றஷீதியா பக்கம் : 235

வஹ்ஹாபியின் கொள்கையை மிக்க நல்லது என்றும், ஷிர்க் பித்அத்தை எதிர்ப்பவர் என்றும் , அவரோடு இருந்தவர்களில் எல்லைமீறியவர்களால் குழப்பம் ஏற்பட்டது என்றும், அவரின் சுபாவம் கடினமாக இருந்தது என்றும் மிகத் தெளிவாகவே இரண்டாம் கருத்துக்கு இடமில்லாமல் கூறுகின்றார் கங்கோஹியார்;

கங்கோஹியாரின் இந்தப் பதில் அவர் வஹ்ஹாபியின் கொள்கையை நன்கு புரிந்து கொண்டுதான் அதனை நல்லவை , உன்னதமான வை என்று சான்றுபகர்ந்தார்;

இந்தப் பின்னணியில் தான் வஹ்ஹாபியின் "கிதாபுத் தௌஹீதின் உருது மொழிபெயர்ப்பான "தக்வியத்துல் ஈமான்" என்ற புத்தகத்தைப் படிப்பதும், அதன்படி அமல் செய்வதும் ,அதனை வீட்டில் வைத்திருப்பதும் "ஐனுல் ஈமான்" அதுவே ஈமான் என்று முழங்கினார்;

கங்கோஹியார் ஒழிவு மறைவின்றி தன்னை வஹ்ஹாபி என்று கூறியதை எப்படியாவது மறைத்து அவரை பரிசுத்தப் படுத்த கீரனூரியார் எவ்வாறான தகிடு தந்தத்தை கையாளுகின்றார் என்பதைக் கவனியுங்கள்!

நஜ்தியைப் பற்றி கங்கோஹி சொன்னது ஏன்?

இங்கு நாம் உண்மையான காரணத்தை "அகாயிதே வஹ்ஹாபிய்யா அவ்ர் உலமாயெ தேவ்பந்தி " என்ற நூலிலிருந்து சுருக்கமாகத் எடுத்தெழுகின்றோம்;

அப்துல் வஹாப் நஜ்தியைப் பற்றிஅன்று பலரும் பலவிதமாகக் கூறிவந்தனர் அவர் நல்லவர் நல்ல கொள்கையுடையவர் அல்லாமா இப்னு தைமிய்யா , அல்லாமா இப்னுல் கையூம் ஆகிய மேதைகள் வழி நடப்பவர் என்று சிலர் கூறினர்;

இப்படி கூறியவர்களில் தப்ஸீரெ றூஹுல் ம ஆனியின் ஆசிரியர் அல்லாமா செய்யது மஹ்மூது ஆலூசியும் ஒருவர் என்பதும் குறிப்பிடத்தக்கது!

இவரே நஜ்தியைப் பற்றி கூறும் போது,

இவர் ஹம்பலி மத்ஹபை சார்ந்தவர் என்றும் இமாம்களை பின்பற்றாதவர் என்றும் கூறப்படுவது அவருக்கு எதிராக அவரை வீழ்த்துவதற்காக செய்யப்பட்ட சூழ்ச்சி என்றும் கூறியுள்ளார்;

ஒரு சிலர் அவருடைய கொள்கையை நல்லவையாக இருக்க வில்லை என்று கூறியுள்ளனர் அப்படி கூறியவர்களில் குறிப்பிடத்தக்கவர் ரத்துல் முக்தார் என்ற பிரபல நூல் எழுதிய மாமேதை!

மௌலானா கங்கோஹி அவர்கள்இந்த இருவித கருத்துக்களையும் மேலும் தாம் அந்த நஜதி பற்றி கேள்விப்பட்ட செய்திகளையும் முன்வைத்து தமது அபிப்பிராயத்தை எழுதியுள்ளார்கள் அவர்கள் கேள்விப்பட்ட அளவில் அவர் தம்மைப் பொருத்தவரை *நல்லவர்* என்பதே அவர்களுக்கு சரியாக தோன்றியது! எனவே, தாம் அறிந்த அளவு அவர்கள் எழுதிவிட்டார்கள்;

மேலும் கங்கோஹி அவர்கள் தமது பத்வாவில் அவர் நல்லவர் என்று கூறி அதற்கான காரணங்களையும் எழுதியுள்ளார்கள்.

ஆனால் நமது உபகாரி கள் தான் அப்படிப்பட்ட நல்லவற்றை எழுதவே மாட்டார்களே கங்கோஹி கூறியுள்ள காரணங்கள் நான் கேள்விப்பட்டவரை அப்துல் வஹ்ஹாப் அவர்கள் ஹன்பலி மத்ஹபைச் சேர்ந்தவராக இருந்தார் அதன்படி அமல் செய்பவராக இருந்தார் ஆனால் கடின சுபாவம் இருந்து வந்தது அல்லாஹ்வே மிக அறிந்தவன்!

பார்த்தீர்களா! கீரனூரியாரின்கிறுக்குத் தனத்தை?

வழிகேட்டின் வாசலை உத்தியோக பூர்வமாக திறந்து கொடுத்த "இப்னுதைமிய்யா, இப்னுல்கையூம்உள்ளிட்டோரை மேதைகள் என்று புகழாரம் சூட்டுகின்றார்;

தப்ஸீர் றூஹுல்ம ஆனியின் ஆசிரியர் அல்லாமா ஆலூஸி றஹ்மத்துள்ளாஹி அலைஹி அவர்கள் மீது மாபெரும் அபாண்டத்தையும் அள்ளி வீசியுள்ளார்;

அல்லாமா ஆலூஸி றஹ்மத்துள்ளாஹி அலைஹி அவர்கள் மறைந்த பின் அவர்களுடைய தப்ஸீரில் சில வம்பர்கள் சில புரட்டு வேலைகள் செய்துள்ளதாக " அத்திறாஸுல் முஹத்தப் " என்ற நூலில் வெளிச்சம் போட்டுக் காட்டப்பட்டுள்ளது கவனிக்கத்தக்கது!,

கங்கோஹியாரின் காலத்தில் வஹாகளின் அட்டூழியங்கள் கட்டுக்கடங்காமல் போன வரலாறுகள் பிரபலமானவை!

அந்த வரலாறுகளை றத்துல் முக்தார் ,தப்ஸீர் ஸாவி, நூல்களோடு மக்காவின் முப்தி ஷைனி தஹலான் றஹ்மத்துள்ளாஹி அலைஹிம் அவர்கள் மிகவிரிவாக "துறறுஸ்ஸனியா,ஃபித்னத்துல் வஹாபியா,குலாஸத்துல் கலாம்,உள்ளிட்ட நூற்களிலும், வஹாபி நஜ்தியின் உடன்பிறந்த சகோதரர் சுலைமான் ஸவாயிக்குல் இலாஹியா " என்ற நூலிலும் எழுதியுள்ளனர்;

தவிர இந்தியாவிலேயே வஹாபிகளின் கொள்கைகளை விமர்சித்து பல நூறு நூற்கள் எழுதப்பட்டுள்ளன: இவையாவும்கங்கோஹியாருக்குத் தெரியாதா?

கீரனூரியார் கூறுவது போன்று கங்கோஹியார் வஹாபியைப் பற்றிய முழு விபரமும் தெரியாமல்தான் அவர் நல்லவர் , அவர்கொள்கை உன்னதமானது !, அவர் ஷிர்கு பித்அத்தைக் கண்டித்தார் அவர் கடின சுபாவமுள்ளவர் என்று கூறியதெல்லாம் கேள்விப்பட்ட செய்திகளா?

கீரனூரியார் காதில் 'பூ' சுற்றுகின்றார்.

கீரனூரியார் மேற்கண்ட 10 குற்றச்சாட்டுகளோடு தன்னுடைய கைவரிசையை நிறுத்திக் கொண்டுள்ளார்;,

அவர் குறிப்பிடாத இன்னும் பல குற்றச்சாட்டுக்களும் உள்ளன; அவற்றை நியாயப்படுத்த வழக்கமான சப்பைக்கட்டு செய்வது கடினம் என்றே விட்டு விட்டார் ;

அந்த கேடு கெட்ட குப்றியத் நிறைந்த வண்டவாளங்களையும் இன்ஷாஅல்லாஹ் தொடர்ந்து எழுதுவோம்.!

றஷீத் அஹ்மது கங்கோஹியார் வஹாபியைப்பற்றியும் அவரின் கொள்கையைப் பற்றியும் பாராட்டி எழுதியதை ஷைகுனா ஸூபிஹளறத் நாயகம் கத்தஸல்லாஹு ஸிர்ரஹுல் அஸீஸ் அவர்கள் மாத்தறை விவாதம் நடப்பதற்கு 12 ஆண்டுகளுக்கு முன்பே" தப்லீக் கில் வஹாபிஸத்தின் விஷக்கிருமிகள்!" என்ற நூலை அச்சிட்டு நாடுபூராவும் விநியோகித்தார்கள்;

ஷைகுநாயகத்தின் மேற்படி நூலில் கூறப்பட்ட குற்றச்சாட்டுக்களில் உண்மை உண்டா ? என்று ஆய்வு செய்து நியாயமான தீர்ப் வெளியிடுவதற்காகத்தான் மாத்தறையில் உலமாக்கள் ஒன்று கூடினார்கள்;

வஹ்ஹாபிஸத்தை எதிர்த்து புத்தகம் போட்ட ஸகரிய்யா ஆலிம் உட்பட அங்கு கூடியிருந்த யாஸீன் மௌலானா ஷைகுல் பஹ்ஜா அப்துல் ஹமீதே ஹஸ்ரத் , அப்துஸ்ஸமத் ஹஸறத் உள்ளிட்டவர்களுக்கு கங்கோஹியின் அப்பட்டமான தீர்ப்பு ஏன் உறைக்க வில்லை;

அல்லாஹ்வைப் பற்றியும், உயிரினும் மேலான றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை ப்பற்றியும் மிகக் கேவலமான குப்றியத்தைக் கூறியவர்களை

**பரிசுத்தப்படுத்திவழிகேட்டில் மக்கள் போய் வீழுவதை எப்படி அவர்களின் மனம் அங்கீகரித்தது? இதுதானா இவர்களின் இறையச்சம்? இவர்கள் எதிர்பார்த்த பண முதலைகளின் ஷௌபாக்கியம் இவர்களுக்குக் கிடைத்ததா? அல்லது தப்லீக்கில் வஹாபிஸம்களைகட்டி நிற்பதை கண்ணால் கண்ட பிற்பாடு இவர்களால் தடுக்க முடிந்ததா?**

**தனி ஒருவரின் மீது கொண்ட குரோதத்தினால் மார்க்கத்தை சீரழித்து அப்பாவி மக்களையும் வழிகெடுத்து விட்டார்களே! இவர்கள் எப்படி மறுமையில் பதில் சொல்லப்போகின்றார்கள்? சிந்தியுங்கள்!, சீர்வழி செல்ல முயலுங்கள்!**

**தொடரும்....**

**Part 27**

**தப்லீக் ஜமாஅத்தின் தலைவர்களான தேவ்பந்தி ஷைகுமார்களின் வழிகேட்டுக் கொள்கைகளில் மக்களை மடையனாக்கும் பத்து தலைப்புக்களை மட்டுமே கலீல் அஹ்மத்கீ ரனூரியார் தெரிவு செய்து விளக்கம் கொடுத்தார்;**

**இவை தவிர்ந்த இன்னும் ஏராளமான குப்றியத் நிறைந்த குற்றச்சாட்டுக்கள் உள்ளன; அவற்றை எந்த வகையிலும் சப்பைக்கட்ட முடியாது என்று தவிர்த்துக் கொண்டார்;**

**அவர் மறைத்த வழிகேட்டுக் கருத்துக்களையும் நாம் இங்கே கொண்டு வருவோம் இன்ஷாஅல்லாஹ்!**

அதனையும் படித்து இவர்களின் அவலட்சணத்தை அடையாளம் காணுங்கள்!

தேவ்பந்தி வஹாபிகளின் தானைத் தலைவர் இஸ்மாயீல் திஹ்லவி ஆவார்; இவர் தன்னுடைய ஈழாஹுல் ஹக் என்ற நூல் 35 வது பக்கத்தில் பின்வருமாறு எழுதுகின்றார்;

حق تعالیٰ کو جہت و مکان سے منزہ سمجھنا بدعت و گمراہی ہیں۔

அல்லாஹுத்த ஆலா இடம், காலத்தை விட்டும் பரிசுத்தமானவன் என்று நம்புவது பித்அத்தும், வழிகேடுமாகும்.

மேலும் தக்வியத்துல் ஈமான் என்ற நூலில் எழுதுகின்றார்,

அல்லாஹ்வுடைய மகிமை மிகப் பெரியது! நபிமார்கள், வலிமார்கள் அவன் முன்னிலையில் ஓர் அற்ப அணுவிற்குக் கூட குறைந்தவர்கள்; ஏனென்றால், சகல வானங்களையும், பூமிகளையும் ஒரு மண்டபத்தைப் போல் சூழ்ந்து கொண்டிருக்கும் அர்ஷு இவ்வளவு பிரமாண்டமாக இருந்தும் கூட அது மன்னாதி மன்னனுடைய வலுப்பத்தைச் சுமந்து கொண்டுள்ள முடியவில்லை;

அவனுடைய வலுப்பத்தைச் சுமந்து கொள்ளமுடியாமல் அது சடசடவென்று சப்தமிடுகிறது! ஆகையால், அவனுடைய வலுப்பத்தை விபரித்துச் சொல்லக்கூட எந்த சிருஷ்டியால் தான் முடியும்?

தக்வியத்துல் ஈமான் பக்கம்:45

தமிழ் மொழிபெயர்ப்பு: 113

மேற்கண்ட கூற்றுக்களின் மூலம் அல்லாஹ்வை இடம்,காலத்திற்குக் கட்டுப்பட்ட சடமாக ஆக்கியுள்ளார்; இவரின் மேற்கண்ட கூற்று அஹ்லுஸ் ஸுன்னத்வல் ஜமாஅத்திற்கு எதிரான அகீதாவும்;தவிர குப்றுமாகும்.

ஷாஹ் அப்துல் அஸீஸ் முஹத்திதுத் திஹ்லவி றஹ்மதுல்லாஹி அலைஹி கூறுகின்றார்கள்;

அல்லாஹுத்த ஆலா இடத்தை விட்டும் பரிசுத்தமானவன்; மேல், கீழ்,இன்னும் இவை தவிர்ந்த எந்த ஒருதிசையும் அவனுக்கு ரூபமாகாது ! இதுதான் அஹ்லுஸ்ஸுன்னத்வல்ஜமாஅத்தின் அகீதாவாகும்.

ஆதாரம்: துஹ்பா இத்னா அஷரிய்யா

பக்கம்: 219

மஜ்மஃ உல் அன்ஹர் நீ ஷறஹி முல்தகல் அப்ஹர் என்ற நூலில் பின்வருமாறு எழுதப்பட்டுள்ளது;

واثبات المكان لله تعالي فان قال : الله في السماء فان قصد به ما جاء في ظاهر الاخبار لايكفر وإذا اراد به المكان كفر ، وان لم تكن له نية يكفر عند اكثرهم وعليه الفتوي كما في البحر .

அல்லாஹுத்த ஆலாவுக்கு இடத்தைக் கற்பிப்பது குப்றாகும்; யாராவது ஒருவர் அல்லாஹ் வானத்திலிருக்கின்றான் என்று கூறினால், அதாவது ஹதீதில் வெளிப்படையாக வரக்கூடிய வாசகத்தை எடுத்துக் கூறுவதாக கருதி கூறினால்,காபிராக மாட்டான்; அவனுக்கு குறிப்பான ஓர் இடம் உண்டு என்று நாடி கூறினால், கண்டிப்பாக காபிராகி விடுவான்; இவ்வாறு கூறும்

**எண்ணம் இல்லாமல் கூறினாலும் காபிராகிவிடுவான்; இதன் படிதான் ஃபத்வா உள்ளது**

**பக்கம்: 629**

**அல்லாஹ்வுக்கு இடம் காலம், திசை உள்ளிட்டவையைத் தரிபடுத்துவது குப்று என்று அனைத்து அகீதா நூற்களும் கூறுகின்றன;விரிவஞ்சி ஆதாரங்களை தவிர்துள்ளோம்;**

**தக்வியத்துல் ஈமானை வீட்டில் வைத்திருப்பதும், அதன்படி அமல் செய்வதும் அதுவேதான் ஈமான்! என்று கூறிய மௌலவி ரஷீத் அஹ்மது கங்கோஹிமேற்படி கூற்றின் மார்கத் தீர்ப்பை இவ்வாறு அவர் பத்வா நூலில் எழுதுகின்றார்.**

**கேள்வி:**

**உலமாக்களே! பின்வருமாறு கூறும் நபரைப்பற்றிய உங்கள் தீர்ப்பென்ன?,**

**அல்லாஹ்வுக்கு காலம், இடம், புத்தியில் புலப்படுவது உள்ளிட்டவையை விட்டும் பரிசுத்தமான வன் என்று கூறுவதும், திசையின்றி அவனைக்காண்பது நேர்முகமின்றி ஹக்கைக் காண்பது என்று நம்புவது பித்அத் என்கின்றார்; இந்த கூற்று எப்படியானது!**

**பதில்:**

**இந்த நபர் அஹ்லுஸ் ஸுன்னத் வல் ஜமாஅத்தின் அகீதாவைப் பற்றித் தெரியாத முட்டாள்! விபரமில்லாதவன்; இன்னும் இந்த**

அகீதா வும், கேள்வியில் கூறப்பட்ட கூற்றும் குப்றாகும்;அதிலிருந் அல்லாஹ் எம்மைப் பாதுகாப்பானாக!

ஸலபுஸ் ஸாலிஹீன்கள் ,மற்றும் , இமாம்களின் மத்ஹபும் இதுவேதான்;

இது ஸஹீஹான ஹதீதுகள் , அல்லாஹ்வின் தெளிவான கூற்றுக்கள் மூலம் அல்லாஹுத்த ஆலா காலம்,இடம், திசையை விட்டும் பரிசுத்தமானவன் முஸ்லிம்களுக்கு சொர்க்கத்தில் அவனின் தரிசனம் கிட்டும் என்றும், நிரூபணமாகியுள்ளது! அல்லாஹ் மிக அறிந்தவன்!

றஷீத் அஹ்மத் கங்கோஹி : ஹி1310

விடை சரியானது

அஷ்ரப் அலி தானவி

இந்த ஃபத்வாவை சரிகண்டு தேவ்பந்து மத்ரஸாவின் முப்தி அஸீஸுர் றஹ்மான், மஹ்மூதுஹஸன், குலாம் றஸூல், உள்ளிட்ட பலரும்கையெழுத்திட்டுள்ளனர்.

மேற்படி கேள்வியைக் கேட்டவர் இஸ்மாயீல் திஹ்லவியின் பெயரைத் தொடாமல் புத்திசாலித்தனமாக கேட்டுள்ளார்,

இந்த கேள்வி தங்களின் குருபீட நாயகர் பற்றியதென்பதை அறிந்து கொள்ளாமலேயே றஷீத் அஹ்மது கங்கோஹி தீர்ப்பை எழுதியிருக்கிறார்; தேவ்பந்துஉயர்பீடங்களும் சரி கண்டு ஒப்பமிட்டனர்;

இந்த கேள்வி தங்களின் நாயகர் இஸ்மாயீல் திஹ்லவி பற்றியது என்று அவர்கள் அறிந்திருந்தால், குப்று பத்வா வழங்காமல் ஏதும் வலிந்துரைகள் புனைந்து தலைவரைக் காப்பாற்ற முயற்சித்திருப்பார்கள்;

தேவ்பந்து மேலிடமே குப்று என்று கூறிய இக்கேடுகெட்ட கொள்கையைக் கூறியவரைத்தான் தப்லீக் ஜமாஅத்தினர் ஷஹீத், றஹ்மத்துள்ளாஹி அலைஹி,மர்ஹூம் என்றெல்லாம் கூறுகின்றனர்;

இந்த குப்றியாத் நிறைந்த தக்வியத்துல் ஈமான் நூலைத் தான் வாசிப்பதும் , அதன்படி அமல் செய்வதும் , அதை வீட்டில் வைத்திருப்பதும் ஐனுல் ஈமான் என்று கங்கோஹி சித்தம் கெட்டு புலம்புகின்றார் .

தப்லீக் ஜமாஅத்தின் தலைவர்களின்கொள்கைகளில் இப்படியான குப்றியத்தான கொள்கைகள் உண்டு என்று ஷைகுனா ஸூபி ஹளறத் நாயகம் கத்தஸல்லாஹு ஸிர்ரஹுல் அஸீஸ் அவர்கள் தங்களின் தப்லீக் ஜமாஅத்தில் வஹாபிஸத்தின் விஷக்கிருமிகள் என்ற நூலில் சுட்டிக் காட்டிய போதும் அப்போதிருந்த உலமாக்களுக்கு கண்திறக்கவில்லை;

எப்படியாவது ஸூபி ஹளறத்தைத் தோக்கடித்து தப்லீக்கை பாதுகாத்து நிலைநிறுத்த வேண் டும் என்ற வெறியில் இருந்தார்கள்;

**இதே கருத்தை தர்வேஷ் அப்துல் ஹமீது பறகஹ தெனிய கூறிய போது வெகுண்டவர்கள் இங்கு பெட்டிச் பாம்பாக அடங்கியது ஏன்? "பணம் பாதாளம் வரை பாயும் "என்று சும்மாவா கூறினார்கள்.?**

**இப்போது இதே கருத்தைக்கூறிய இப்னுதைமியாவுக்கு எதிராக குரல்கொடுக்கும் சிலர், இஸ்மாயீல் திஹ்லவி விடயத்தில் அடங்கிப் போயிருப்பதும் ஏன்?**

**இப்னுதைமியா கூறினால் குப்று! தப்லீக் மேலிடம் கூறினால் ஞானம்! தவ்ஹீத்!**

**இந்த வேஷம் இந்த உலகத்தில் மறையும் ! மறுமையில் நிர்வாணமாகி அவமானத்தோடு அவதிப்பட வேண்டி வரும் ! ஜாக்கிருதை!**

**தொடரும்....**

**கலீல் அஹ்மத் அம்பேட்டி கூறுகின்றார்.**

ا‌ں حضرت صلی اللہ علیہ وسلم جملے بنی آدم کے برابر ہے

**றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள்பொதுவாக சகல சாதாரண மனிதர்களைப் போன்று சமமானவர்களாகும்.**

**ஆதாரம்: பராஹீனே காதிஆ: பக்கம் : 3**

தேவ்பந்திகளின் தானை தலைவர் மௌலவி இஸ்மாயீல் திஹ்லவி,

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு மூத்த சகோதரரின் மரியாதையைக் கொடுங்கள் என்றார்;

கலீல் அஹ்மது அம்பேட்டி அதையும் தாண்டி, அனைத்து மனித இனத்தையும் சமப்படுத்திக் கூறியுள்ளார்; இதில் முஸ்லிம் ,காபிர், முஷ்ரிக்,முனாபிக்,தோட்டி,கேடி போக்கிரி உள்ளிட்ட சகல மனித இனமும் உள்ளடங்கும்;

மௌலவி இல்யாஸும் தோட்டியும் சமம், றஷீத் அஹ்மது கங்கோஹியும் காவாலியும் சமம்! அஷ்ரப் அலிதானவியும் போக்கிரியும் சமம் என்றுயாராவது கூறினால் அதை அவர்கள் சகித்துக் கொள்வார்களா? இந்த வார்த்தைகளை மரியாதைக்குரியவையாக காண்பார்களா? சினத்தால் கண்கள் சிவந்து அக்கியைக் கக்காதா?

தாங்கள் மதிக்கின்ற வர்களை அடிமட்டத்திலுள்ளவரோடு சமப்படுத்துவதை சகிக்காதவர்கள் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் விடயத்தில் பொறுப்பற்று இருப்பது ஏன்?

இலங்கைக்கு பீ.ஜே. சில தடவைகள் வந்தார், முதல் தடவையில் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் உள்ளிட்ட வலிமார்கள்,இமாம்களை தாராளமாக தரம்தாழ்த்திப் பேசினார்; தப்லீக் ஜமாஅத்தினர்கள் உற்சாகத்தோடு அவர்

கூட்டங்களில் கலந்துசிறப்பித்து ஆறுதல் பெற்றனர்; பின்னர், இறுதியாக வந்த போது தப்லீக் ஜமாஅத்தின் வேதமாக வாசிக்கின்ற தப்லீக் நிஸாம் புத்தகத்தை விமர்சித்தார்;

தப்லீக் ஜமாஅத்தின் உயர்பீடம் தொட்டு அடிமட்டம் வரையிலுள்ள அனைவருடைய குருதிகளும் கொதித்தன; விழிகளில் அக்கினி ப்பொறி தெறித்தது! சில நாட்களுக்குள் பீ.ஜே.உயிருக்கு உத்தரவாதமில்லாமல் நாட்டை விட்டுவெளியேறினார்.

தப்லீக் ஜமாஅத்தினர்களின் மனதில் உள்ள ஈமானின் இலட்சணத்தைப் பார்த்தீர்களா?

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களுக்கு அதிஉச்ச மரியாதையை நாம் வழங்கினால் அன்னாரை அல்லாஹ்வின் அந்தஸ்தில் கொண்டு போய் நிறுத்தி விடுவதாக இவர்கள் கூப்பாடு போடுகின்றனர்;

قل هو الله احد

உலூஹியத்தில் அல்லாஹ் ஒருவன் என்பது எமது ஈமான்!

அவ்வாறே

قل هو محمد أحد صلي الله عليه وسلم اي في العبودية والمحبوبية

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் அடிமைத்துவத்திலும், இறையன்பிலும் ஏகனானவர்கள் என்பதுதான் எமது ஈமானாகும்;

வஹாபிகளும், தேவ்பந்திகளும் தங்கள் வாதத்திற்கு

قل انما أنا بشر مثلكم

**நான் உங்களைப் போன்ற மனிதர் என்று கூறுவீராக! என்ற திருமறை வசனத்தை மேற்கோள் காட்டுகின்றனர்;**

**அடுத்த வரும்** يوحي الي **எனக்கு வஹிவருகின்றது என்ற வாக்கியத்தை இருட்டடிப்பு செய்துள்ளனர்;**

**நபிமார்களை நம்மைப் போன்ற சாதாரண மனிதனாகப் பார்ப்பதும், கூறுவதும் வன் காபிர்களின் இயல்பாகும் ; முந்திய சமுதாயத்தில் வந்த அனைத்து நமிமார்களையும் அந்த சமுதாயத்திலுள்ள பிரமுகர்கள் இதே வசனத்தைக் கூறியே அவர்களை மட்டம் தட்டினார்கள்;**

**திருக்குர்ஆன் கூறுவதைக் கேளுங்கள்!**

**فقال الملا الذين كفروا من قومه ما نراك الا بشرا مثلنا**

**அவருடையசமுகத்தில் காபிரானவர்களான தலைவர்கள் (நூஹ் நபியை நோக்கி) உம்மை எங்களைப் போன்ற மனிதராகவே தான் பார்க்கின்றோம் என்று கூறினார்கள்,**

**11: 27**

**فقال الملؤا الذين كفروا من قومه ما هذا الا بشر مثلكم يريد أن يتفضل عليكم .**

**அவருடைய சமுகத்தில் காபிரான தலைவர்கள் இவர்(நூஹ் நபி அலைஹிஸ்ஸலாம்) உங்களைப்போன்ற ஒருமனிதரே அன்றி இல்லை; உங்களிடம் தனது மேன்மையை ல் தேடுகின்றார் என்றனர்.** **23: 24**

**وقال الملا من قومه الذين كفروا وكذبوا بلقاء الاخرة واطرفناه بالحياة  الدنيا ما هذا الا بشر مثلكم ياكل مما تاكلون منه ويشرب مما  تشربون ولئن اطعتم بشرا مثلكم انكم اذا لخاسرون.**

**அவருடைய கூட்டத்தாரிலிருந்து அவரை நிராகரித்து மறுமையின் சந்திப்பில் பொய்யாக்கி இவ்வுலக வாழ்வில் அவர்களுக்கு நாம் சுகமளித்தோமே அத்தகைய தலைவர்கள் "இவர் உங்களைப் போன்ற மனிதரே அன்றி இல்லை எதிலிருந்து நீங்கள் உண்ணுகிறீர்களோ அதிலிருந்து தான் இவரும் உண்ணுகிறார் நீங்கள் குடிப்பதிலிருந்துதான் இவரும் குடிக்கிறார் என்று கூறினார்கள்;**

**உங்களைப் போன்ற ஒரு மனிதருக்கு நீங்கள் வழிபட்டால் நிச்சயமாக நீங்கள் நஷ்டமடைந்தவர்கள் ஆவீர்கள்என்று கூறினார்கள் .23: 33:34**

**இதுபோன்று பல திருவசனங்களில் அக்கால சமுகத்தைச் சேர்ந்த காபிர்கள் நபிமார்கள் நம்மைப் போன்ற சாதாரணமான மனிதன் என்றுதான் கூறினார்கள்; தங்களுடைய கூற்றுக்கு ஆதாரமாக உண்பதும்,குடிப்பதும் நம்மைப் போன்றேதானிருப்பதாக காரணம் கூறினார்கள்;**

**அன்று காபிர்கள் கூறிய அதே குற்றச்சாட்டுக்களையே இப்போது வஹாபிகளும்கூறுகின்றனர்;**

**இதுவரை தோன்றிய அனைத்து நபிமார்களிலிருந்தும் வெளிவராத அதி அற்பதங்களை றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களில் மக்கள் பார்த்து முந்திய சமுகத்தார்களான யூத நஸாறாக்களைப் போன்றுஅல்லாஹ்!என்றோ,அல்லாஹ்வுடைய மகன் என்று**

கூறிவிடக் கூடாதென்பதற்காக முன்னெச்சரிக்கையாக தன்னைத்தாழ்த்தி பணிவை வெளிப்படுத்தி நானும் உங்களைப் போன்று மனித இனத்தில் உள்ள அல்லாஹ்வின் அடியார்தான் என்னுடையதும் உங்களுடையது மான இலாஹ் அல்லாஹ்தான்! ஆனால் ;, எனக்கு வஹி வருவதால் நான் உங்களை யொத்த தகுதியுடையவரல்ல! என்பதை கூறுமாறு அல்லாஹ் பணித்தான்;

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் சிறப்புக்கள் நிறைந்த திருவசனங்கள் அனைத்தையும் மறந்துவிட்டு நபிகள் கோமான் முஹம்மது முஸ்தபா ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களை தரம் தாழ்த்தி கூறுவதில் வஹாபிகள் இன்புறுகின்றனர்;

ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லமவர்களை ஏனைய நபிமார்களை போன்று சமப்படுத்தி கூறினாலும் கூட அவமானப்படுத்துவதாக அர்த்தப்படும், தவிர குப்றாகவும் ஆகிவிடும்.

அல்லாஹுத்தஆலா கூறுவதை பாருங்கள்!

افمن كان مؤمنا كمن كان فاسقا لا يستوون.

முஃமினும் ,பாவியும் சமமாவார்களா? 32:18

قل لا يستوي الخبيث وطيب

நபியே கூறுவீராக! பரிசுத்தமானதும் அசிங்கமானதும் சமனாகாது! 5:100

لا يستوي اصحاب النار واصحاب الجنة

**நரக வாதியும் சொர்க்க வாதியும் சமனில்லை, 59: 20**

وما يستوي الاعمي والبصير

**குருடனும் பார்வை உள்ளவனும் சமமில்லை 35:19**

قل هل يستوي الذين يعلمون والذين لا يعلمون

**அறிவுள்ளவனும், அறிவில்லாதவனும் சமனில்லை என்று கூறுவீராக!**

**மேற்கண்ட திருவசனங்கள் மனிதர்கள் எல்லோரும் சமனானவர்களில்லை என்பதை தெளிவாக எடுத்துக் கூறுகின்றன; அப்படி இருக்க,**

**வையகக் காரணி மனிதகுலத்தின் மாணிக்கம் வேந்தர் முஹம்மது முஸ்தபா ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் மற்றவர்களைப் போன்று சமமாவார்களாக எப்படி இருக்க முடியும் என்பதை ஆழ்ந்து சிந்தித்துப் பாருங்கள்!**

**தப்ஸீர் கபீரில் பின்வருமாறு எழுதப்பட்டுள்ளது;**

واعلم تمام الكلام في هذا الباب ان نفس القدسية النبوية مخالفة بماهيتها لسائر النفوس،

تفسير كبير ،ج:٢ص:٤٤٠

**நபித்துவத்தின் புனித ஆத்மா ஏனைய ஆத்மாக்களை போன்றில்லாமல் இயல்பில் மாறுபட்டதாகும்.**

**ஆதாரம்: தப்ஸீர் கபீர்: பா:2 பக்:449**

**மனித இயல்பிலேயே ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லமவர்களுடைய தன்மை முற்றிலும் வேறுபட்டதாக இருக்கும் பொழுது எப்படி மற்றவர்களோடு சமத்துவம் வரமுடியும்.?**

**وذكر الحليمي في كتاب المنهاج : ان الانبياء عليهم الصلاه والسلام لابد وان يكونوا مخالفين لغيرهم في القوى الجسمانية والقوي الروحانية وقوله صلى الله عليه وسلم زويت لي الارض واريت مشاركها ومغاربها وكان صلى الله عليه وسلم اقيموا صفوفكم وتراصوا فاني اراكم وراء ظهري**

**تفسير كبير : ج٣ ص: ٤٣٩**

**நபிமார்கள் உடல் பலத்தாலும் ஆத்மீக பலத்தாலும் அவர்கள் அல்லாதவர்களை விட வேறுபட்டு இருப்பது அவசியமாகும். ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்; பூமி எனக்கு சுருட்டப்பட்டது ! அதன் கிழக்கையும் மேற்கையும் எனக்கு எடுத்துக் காட்டப்பட்டது.**

**இன்னும் ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்.**

**தொழுகையில் உங்களுடைய வரிசையில் சேர்ந்து ஒழுங்கு படுத்தி நில்லுங்கள்! நிச்சயமாக தன்னுடைய முதுகுக்குப் பின்னாலிருப்பதை நான் பார்க்கிறேன்.**

**ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தொடர் நோன்பு நோற்பதைப் பார்த்த சஹாபாக்கள் அவர்களும்**

அவ்வாறு வைப்பதை விரும்பினார்கள் ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள்மற்றவர்கள் அவ்வாறு செய்வதை தடுத்தார்கள்; காரணம் கேட்டபோது,

நான் உங்களை போன்ற ஒருவர் அல்ல! நான் உணவளிக்க படுகின்றேன், குடிப்பாட்டப்படுகின்றேன்

ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் பிறந்ததிலிருந்து மறையும் வரையில் உள்ள அன்னாரின் ஒவ்வொரு அசைவும் அன்னாருடைய ஒவ்வொரு உறுப்பும் அதி அற்புதமானவை. அன்னாரின் உடலில் இருந்து வெளியேறும் வியர்வை கஸ்தூரியை விட நறுமணமிக்க வை, அன்னாரின் மலம் சலம் குருதி உள்ளிட்ட அனைத்து கழிவுகளும் பரிசுத்தமானவை! இப்படி இருக்க, அன்னார் மனிதர்களை போன்று சாதாரணமானவர் என்று ஒரு முஃமினின் வாயால் எப்படி வரும்.?

புகாரி ஷரீபின் விரிவுரையாளர் அல்குத்பு இமாம் கஸ்தலானி ரஹ்மத்துல்லாஹி அலைஹி கூறுகின்றார்கள்.

اعلم من تمام الايمان به صلى الله عليه وسلم الايمان بالله تعالى بانه جعل خلق بدنه الشريف على وجه لم يظهر قبله ولا بعده خلق ادمي مثله

مواهب اللدنية :. ج١ ص: ٢٤٨

அறிந்து கொள்ளுங்கள்! றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களோடு உள்ள பூரணமான ஈமான் என்பது.

**அல்லாஹுத்த ஆலா பூமியில் அண்ணலெம் பெருமானார் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் திருமேனியைப் போன்ற கோலத்தை அவர்களுக்கு முன்போ, அவர்களுக்குப் பின்போ அவர்களைப் போன்ற ஒரு மனிதனை அல்லாஹ் படைக்க வில்லை என்று ஈமான் கொள்வதாகும்.**

**ஆதாரம்: மவாஹிபுல் லதுன்னியா, பாகம்:1 பக்:248**

**ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் அதி அற்புதங்கள் அன்னாரின் தனித்துவம் புகழ், தனிச்சிறப்புக்கள் உள்ளிட்ட அனைத்தையும் பக்கம் பக்கமாக இமாம்கள் எழுதி வைத்திருக்கின்றனர்; அவை அனைத்தையும் பார்த்த பின்பும்வஹாபிகளும், தேவ் பந்து குருபீடங்களும் ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லமவர்களை தரம் தாழ்த்தி நம்மோடு ஒப்பிட்டுக் கூற துணிகிறார்கள் என்றால் ,அவர்கள் ஈமான் கெட்ட வேறு சாதியாகிவிட்டார்கள் என்பது தவிர வேறு எவ்வாறு தான் கூற முடியும்?**

**தேவ் பந்து குரூபீ டங்களின் மனதில் ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களைப் பற்றி எவ்வாறான வெறுப்புக்கள் நிறைந்திருக்கின்றன என்பதனை அடுத்தடுத்து வரும் தொடர்கள் மூலம் நீங்கள் தெரிந்து கொள்ள முடியும்! இன்ஷா அல்லாஹ்!**

**இந்த அபத்தமான அசிங்கமான குப்ரியாத்துக்களை பரப்புவதற்காகத்தான் வஹாபிகள் தப்லீக் வேஷம் போட்டு மக்களுக்கு மத்தியில் வந்திருக்கிறார்கள் என்று ஷைகுனா ஸூபிஹளறத் நாயகமவர்கள் எச்சரித்துக் கூறினார்கள்;**

**அன்னார் கூறியவாறு வஹாபிசம் தப்லீக் ஜமாத் போர்வையில் ஒவ்வொரு வீட்டின் கதவையும் தட்டி இப்பொழுது அங்கே அக்கிரமம் செய்யவில்லையா? அன்று தப்லீக் ஜமாத்திற்கு வெள்ளை விரித்து அழகு பார்த்தவர்கள் இப்போது எங்கே?**

**இலங்கை தப்லீக்கில் வஹாபிஸம் வந்தால் அதைக் நாங்களும் சேர்ந்து முன்னின்று எதிர்ப்போம் என்று உரத்துக் கூறியவர்களில் ஒருவராவது இப்போது இருக்கின்றார்களா? இல்லை; ஆனால் , அவர்களால் வளர்க்கப்பட்ட வழிகேடு இப்போது ஒவ்வொரு வீட்டையும் பலமாகத் தட்டிக் கொண்டிருக்கின்றது!**

**இதற்கான விளைவை நிச்சயம் மறுமையில் அவர்கள் சந்தித்தே ஆகவேண்டும்!**

**தொடரும்....**

**Part- 29**

**றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு நிகரான இன்னுமொருவர் பிறப்பது சாத்தியம்!**

**தேவ்பந்தி ஷைகுமார்களின் நூற்களை கூர்ந்து கவனித்துக் பார்த்தால் , நபிமார்கள், வலிமார்கள்,குறிப்பாக றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி உள்ளிட்டவர்களை இழிவுபடுத்தும் கருத்துக்கள் நிறைந்திருப்பதை அவதானிக்க முடியும்;,**

**தேவ் பந்திகளின் தானைத்தலைவர் இஸ்மாயீல் திஹ்லவியின் தக்வியத்துல் ஈமான் என்ற நூல் தேவ் பந்தி களுக்கு மத்தியில் திருக்குர்ஆனை விட மதிப்புமிக்கதாக விளங்குகின்றது!**

ஆகவே தான் "தக்வியத்துல் ஈமானை" வீட்டில் வைத்திருப்பதும், அதன்படி அமல் செய்வதும், "ஐனுல்ஈமான்" அதுவே ஈமான என்று றஷீத்அஹ்மத் கங்கோஹி கூறினார்.

றஷீத்அஹ்மத் கங்கோஹி கலப்பற்ற ஈமான் என்று குறிப்பிட்ட விடயங்களில் ஒன்றுதான் ", றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு நிகரான ஒருவர் பிறக்கமுடியும் ?,என்ற கூற்றுமாகும்;

இஸ்மாயீல் திஹ்லவி தக்வியத்துல் ஈமான் பக்கம் 31ல் பின்வருமாறு எழுதுகின்றார்.

"அந்த இறைவனோ ஒரு நொடியில் "ஆகு" என்ற தன்னுடைய ஆணையால் கோடிக்கணக்கான நபிமார்களையும், வலிமார்கள், ஜின்கள், மலக்குகள், ஜிப்ரயீல் இன்னும் முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு சமமானவர்களேயே படைக்க ஆற்றலுடையவன்.

ஏகத்துவமும், இணைவைத்தலும்

(தக்வியத்துல் ஈமான் தமிழ் மொழிபெயர்ப்பு) பக்கம்:66- 67.

தேவ்பந்தி , வஹாபிகள் உள்ளிட்டவர்களின் அகீதாவில் ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுக்கு நிகரான பலகோடி பேர்களை படைப்பதற்கு அல்லாஹ் ஆற்றல் உள்ளவன் என்பது இவர்களுடைய கொள்கையில் முக்கியமான ஒன்றாகவும் கருதப்படுகிறது!

இதற்காகத்தான் அல்லாஹுத் தஆலா தனது வாக்குக்கு மாறு செய்யவும் ஆற்றல் பெற்றவன் என்று கூறி தங்களுடைய மனதில் கிடந்த ஆசைகளை வெளிப்படுத்த வழி தேடினார்கள்; இதன்படி ,அவர்கள் மனதுக்குள் கிடந்த நபித்துவ ஆசைகளை கட்டங்கட்டமாக வெளிப்படுத்த ஆரம்பித்தார்கள்.

தேவ்பந்து மதரஸாவின் நிறுவனர் மௌலவி காசிம் நானூத்தவி ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் இறுதி நபி என்பதை மறுத்து அவர்களுக்கு பின்னாலும் நபி வரலாம் என்று வழி சமைத்துக் கொடுத்தார்;

இதனைப் பயன்படுத்தி மிர்சா குலாம் அஹ்மது காதியானி தன்னை நபி என்று வெளிப்படுத்தி பிரகடனப்படுத்தினான்; அதைத்தொடர்ந்து அஷ்ரப் அலி தானவி ஒரு ஷைத்தானியத்தான கனவுக்கு பதில் கூறி தனது நபித்துவ ஆசையை வெளிப்படுத்தினார்;

அதன்பின் தப்லீக் ஜமாத்தின் நிறுவனர்மௌலவி இல்யாஸ் மக்களுக்கு தான் நபிமார்களை போன்று அனுப்பப்பட்டு இருப்பதாக கூறி தன்னுடைய ஆசையையும் வெளிப்படுத்தினார்.

இந்த சண்டாளக் கூட்டம் கூறுவது போன்று ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு நிகரான யாராவது ஒருவர் பிறக்க முடியுமா? அவ்வாறு முடியும் என்று கூறினால், அவருக்கான மார்க்கத் தீர்ப்பு என்ன? என்பதனை திருக்குர்ஆன், திருநபி மொழிகள்,சான்றோர் கூற்றுக்கள் மூலம் கவனித்து பார்ப்போம்!

**அல்லாஹுத்தஆலா கூறுகிறான்.**

**ما كان محمد ابا احد من رجالكم ولكن رسول الله وخاتم النبيين،**

1- **முஹம்மத் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள்) ஆண்களாகிய உங்களில் எவருடைய தந்தையாகவும் இல்லை; ஆயினும் அவர் அல்லாஹ்வுடைய திருத்தூதரும் இன்னும் நபிமார்களில் முத்திரையாகவும் உள்ளார்கள்.33:40**

**மேற்கண்ட திரு வசனத்தின்படி, ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் நபிமார்களில் இறுதியானவர்கள் என்பதும், அன்னாருக்குப்பின் மற்றுமொரு நபி வரமாட்டார், வரமுடியாதுஎன்பதும் தெளிவு!**

**இந்தக் கருத்தை அனைத்து இஸ்லாமிய மக்களும் ஒட்டுமொத்தமாக இஜ்மாஃஆகக் கூறியுள்ளனர்.**

**இந்தக் கூற்று அல்லாஹுத்தஆலா உடைய கட்டளையாகும்; அல்லாஹுத்தஆலா இந்த கட்டளைக்கு ஒருபோதும் மாற்றம் செய்ய மாட்டான்; அப்படி இருக்க ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுக்கு நிகரான ஒருவர் எப்படி பிறக்க முடியும்?**

**நாம் நம்புகின்ற அல்லாஹ் வஹாபிகள் நம்புகின்ற அல்லாஹ் அல்ல! அவர்களுடைய அல்லாஹ் பொய் சொல்லவும், வாக்கு மாறு செய்யவும் ஆற்றல் உள்ளவன் ஆகவே,, அவர்களுடைய அல்லாஹ் அவர்களின் ஆசைகளை நிறைவேற்றி கொடுப்பான் என்பது அவர்கள் நம்பிக்கை!**

قل يا ايها الناس اني رسول الله اليكم جميعا

2- **நபியே ( உலகத்தில் உள்ள மனிதர்களுக்குக்) கூறுவீராக! உங்கள் அனைவருக்கும் (கியாமத் நாள் வரை) அல்லாஹ்வின் றஸூலாக இருக்கின்றேன்.** **7: 158.**

**ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கியாமத்து நாள் வரை ரசூலாக இருக்கிறார்கள் என்றால், அவர்களுக்கு நிகரான ஒருவர் எப்படி வரமுடியும்?**

**நிகரான ஒருவர் பிறக்க முடியுமென்றால் ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அனைத்து மனிதர்களுக்கும் றசூலாக எப்பொழுது ஆனார்கள்? அவ்வாறுதான் ஒருவர் வந்தாலும் அவருக்கும் ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் நபியாகவும் றஸூலாகவுமாகத்தானே இருப்பார்கள் அவரும் கூட நபியவர்களின் உம்மத்தில் ஒருவராகத்தானே இருப்பார் அப்படியிருக்க எப்படி நிகரானவர் ஆக முடியும்?**

وما ارسلناك الا كافة للناس بشيرا ونذيرا

3- **(கியாமத் நாள் வரையிலான)அனைத்து மனிதர்களுக்கும் (சொர்க்கத்தைக் பற்றி)நற்செய்தி கூறுபவராகவும், (நகரத்தைப் பற்றி) அச்சமூட்டி எச்சரிப்பவராகவுமே அன்றி உம்மை நாம் அனுப்பவில்லை;** **34:28**

وارسلناك للناس رسولا

4- உம்மை ( கியாமத் நாள் வரைஉள்ள அனைத்து) மனிதர்களுக்கும் றஸூலாக அனுப்பியுள்ளோம். 4: 79.

اليوم اكملت لكم دينكم واتممت عليكم نعمتي .-5

5- இன்றைய தினம் உங்களுடைய மார்க்கத்தை உங்களுக்கு பூரணமாக்கி விட்டோம்; இன்னும் நமது நிஃமத்தை உங்கள் மீது சம்பூரணமா க்கிவிட்டோம். 5:3.

மேற்கண்ட அனைத்து திரு வசனங்களிலும் ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் இந்த உலகத்தில் உள்ள அனைவருக்கும் றசூலாக அனுப்பப்பட்டு இருப்பதாகவும் அன்னாருக்கு வழங்கப்பட்ட மார்க்கம் பூர்த்தியாக்கப் பட்டுள்ளதாகவும் இதற்குப் பின் இன்னுமொரு மார்க்கம் வரப்போவதில்லை என்றும் மிகத் தெளிவாக கூறுகின்றன;

இந்தக் கூற்றுக்கள் அல்லாஹ்வின் மாற்றமுடியாத கட்டளைகளாகும். அப்படியிருக்க, அல்லாஹுத் தஆலா தனது கட்டளையில் மாற்றம் செய்து இந்த மார்க்கத்தை குறைபாடு உள்ளதாக ஆக்குவானா? தனது அருட்கொடையை பின்னர் பூரணம் இல்லாமல் குறைபாடு உள்ளதாக ஆக்குவானா? நிச்சயமாக இல்லை!

ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு நிகரான ஒருவர் தோன்ற முடியாது என்பதற்கான திருக்குர்ஆன் வசனங்களை மேலே பார்த்தீர்கள்!

இப்பொழுது ஹதீது ஷரீபுகளை கவனியுங்கள்.!

عن جابر بن عبد الله قال قال النبي صلى الله عليه وسلم مثلي ومثل الانبياء كرجل بني دار فاكملها واحسنها الا موضع لبنة فجعل الناس يدخلونها ويتعجبون ويقولون لولا موضع اللبنة ..

**ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்:**

**எனக்கும், நபிமார்களுக்கும் உள்ள உதாரணம் ஒரு மனிதனைப் போன்று; அவர் ஒரு வீட்டை கட்டினார்; ஒரு கல் இடைவெளியை விட்டு விட்டுஅதனை அழகிய முறையில் பூரணமாக்கினார்; மனிதர்கள் அதனை சுற்றி பார்த்து ஆச்சரியப்பட்டு ஒருகல்லுக்கான இந்த இடத்தை ஏன் விட்டார் என்று கூறினர் ( அந்த கல்லுக்கான இடத்திற்குரியவர் நானாகும்)**

**புகாரி ஷரீப்.**

عن ابي هريرة رضي الله عنه ان رسول الله صلى الله عليه وسلم قال مثلي ومثل الانبياء من قبلي كمثل رجل بني بيتا واحسنه واجمله الا موضع لبنة من زاوية فجعل الناس يطوفون به ويعجبون له ويقولون هل وضعت هذه اللبنة قال انا اللبنة وانا خاتم النبيين.

**அபூஹுரைரா ரலியல்லாஹு தஆலா அன்ஹு கூறுகிறார்கள்;**

**ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறுவதை நான் காதால் கேட்டேன்;**

**எனக்கும், எனக்கு முன்னால் வந்த நபிமார்களுக்கும் உள்ள உதாரணம் ஒரு மனிதனைப் போன்று! அவர் ஒரு வீட்டை கட்டி ஒரு மூலையில் ஒரு கல்லைத் தவிர மிக சிறந்த முறையில் அதனை அழகு படுத்தினார் ; பின்னர் அந்தக்கல் நானே ஆகுவேன்**

; எனக்குப் பின் வேறுஒரு ஒரு நபி பிறக்க முடியாது என்று கூறினார்கள்.

புகாரி ஷரீப்.

3- عن ابي هريرة رضي الله تعالى عنه قال سمعت رسول الله صلى الله عليه وسلم يقول لم يبقى من النبوة الا المبشرات قالوا وما المبشرات قال الرؤياء الصالحة : بخاري شريف ،

ஹளரத் அபூஹுரைரா ரலியல்லாஹுதஆலா அன்ஹு அறிவிக்கின்றார்கள்;

ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறியதை காதால் கேட்டேன்;

நபித்துவம் முடிந்துவிட்டது! சுப சோபனம்களைத் தவிர, சுப சோபனம் என்பது என்ன? என்று ஸஹாபாக்கள் கேட்டதற்கு நல்ல கனவுகள் என்று ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்.

புகாரி ஷரீப்.

மேற்கண்ட அனைத்து ஹதீதுகளின்படி,ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கடைசி நபி! கியாமத் நாள் வரை அவர்களைப் போன்ற ஒரு நபி வரமாட்டார் என்பதையும்,தெளிவாகக் கோடிட்டு காட்டுகின்றன;

ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுக்கு நிகராகவோ, அல்லது அவர்களைப் போன்றோ யாரும் பிறக்கப் போவதில்லை அவ்வாறுவர முடியும் என்று யாராவது கூறினால், அவன் தஜ்ஜாலாகவே இருப்பான்.

**ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுக்கு நிகராக யாராவது வருவார்கள் என்று யாராவது கூறினால் அவருக்கான சட்டம் என்ன என்பதனை அறிஞர்களின் பின்வரும் கூற்றுக்கள் தெளிவுபடுத்துகிறன;**

1- **யாராவது ஒருவர் ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு நிகரானவர் அல்லது அவர்களை போன்றவர் என்று கூறினால் அவர் காபிராகி விடுவார்.**

**ஆதாரம்: முஃதமது ஃபில் முஃதமத் : பக் 97**

2- **ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் நபிமார்களுக்குப் பிறகுஇறுதிநபியாக வந்தார்கள்; அவர்களுடைய காலத்திலோ, அல்லது அன்னாரின் காலத்திற்கு பின்போ கியாமத்து நாள் வரை எந்த ஒரு நபியும் வரமாட்டார்; யாராவது ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்குப் பின் வேறு ஒருவர் நபி இருக்கிறார் என்றோ அல்லது வருவார் என்றோ அல்லது அன்னாருக்கு பின் ஒரு நபி வருவது சாத்தியம் என்றோகூறுவாராயின் ,அவர் காபிராகி விடுவார்,**

**ஆதாரம் : தக்தீஸுல வகீல் .. பக்கம் :, 166**

**றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி அவர்களைப் போன்ற ஒருவரை எந்த ஒரு பெண்ணும் பெற்றது கிடையாது என்று ஹளறத் ஹஸ்ஸான் இப்னு தாபித் றழியல்லாஹு**

அன்ஹு அவர்கள் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு முன்னாலேயே பாடினார்கள்;

இதுவரை உலகில் உள்ள அனைத்து இஸ்லாமிய அறிஞர்களும் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அனைத்துப் படைப்புகளிலும் மேலானவர்கள்; அவர்களை போன்ற ஒருவர் இந்த உலகில் இதுவரை பிறந்ததும் இல்லை; இதற்குப்பின் பிறக்கப் போவதுமில்லை என்று அறுதியிட்டு கூறியுள்ளனர்;

ஆனால்; இந்தக் கூற்று தேவ்பந்து உலமாக்களுக்கு ஏற்புடையதாக இல்லை! அவர்களுக்கு மத்தியில் ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லமவர்களைப் போன்று ஒருவர் அல்ல பல கோடி பேர் வருவதற்கு சாத்தியம் என்று ஈமான் கெட்டு கூறுகின்றனர்;

இந்த சாக்கடை கொள்கைகளை மக்கள் மத்தியில் பரப்ப தப்லீக்ஜமாஅத் என்ற பெயரில் வேஷம் போட்டுசுன்னத்வல் ஜமாஅத் மக்களுக்கு மத்தியில் ஊடுருவி வந்திருக்கிறார்கள் என்று ஆணித்தரமான ஆதாரங்களோடு ஷைகுனா ஸூபி ஹளறத் நாயகமவர்கள் உரத்துக் கூறியபோதும் இலங்கையில் அப்போதிருந்த உலமாக்கள், ஷைகுமார்கள்என்று கூறிக்கொண்டு வலம் வந்த மேதைகளுக்கு இதன் விபரீதம் புரியவில்லை;

தப்லீக் ஜமாஅத்திற்கு கண்மூடித்தனமாக ஆதரவு கொடுத்த உலமாக்களின் இறையச்சத்தின் கையறு நிலையை எடை போட்ட தப்லீக் மேலிடம் தங்களுடைய சாக்கடை கொள்கைகளை மிக மலிவாக இறக்குமதி செய்து மக்களுடைய ஈமானை பிடுங்கி சென்றது;

**இந்தக் கேடுகெட்ட அத்தனை சீரழிவுக்கும் ஆரம்பத்தில் தப்லீக் ஜமாத்திற்கு ஆதரவு கொடுத்தவர்களும், இப்போது ஆதரவு கொடுப்பவர்களும் தான் மறுமையில் பதில் சொல்லியே ஆகவேண்டும்;**

**ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களின் கண்ணியத்தை மரியாதையை குறைத்து அன்னாரை இழிவு படுத்தியவர்களை சங்கை படுத்தியவர்கள் நாளை மறுமையில் ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களுக்கு முன்னால் எந்த முகத்தோடு முன் நிற்க முடியும் என்பதனை சிந்தித்து பார்க்கவேண்டும்.!**

**அந்த இழிநிலை இப்போது இருக்கின்றவர்களுக்கும் வரக்கூடாது என்றால் இப்போதே அந்த கேடுகெட்ட கொள்கையிலிருந்து தவ்பாச் செய்து , இதய சுத்தியோடு சுன்னத் வல் ஜமாஅத்தின் அழகிய பாதையில் நடைபோட முன்வர வேண்டும்.**

**தொடரும்....**

## Part – 30

**றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் பேரில் மௌலிது ஓதுவதும், மௌலிது சபையில் எழுந்து நிற்பதும், கெட்ட பித்அத்தும், ஷிர்க்கும், கன்யா பிறப்பு சடங்கு போன்றதுமாகும் என்று தேவ் பந்தின் ஞானபீடம் றஷீத் அஹ்மத் கங்கோஹி தனது பதாவா றஷீதியாவில் கூறுகின்றார்;**

**அவர் கூறுவதை இதோ கேளுங்கள்!**

پس یہ ہرروز کا اعادہ ولادت تو مثل ہنود کے ہے کہ سانگ کنھیا کی ولادت کا ہر سال کرتے یا مثل روافضکےہے کہ شہادت اہل بیت ہر سال بناتے ہیں معاذاللہ سانگ آپ کی ولادت کا ٹہیرا یہ خود قبیحہ قابل لوم وحرام وفسق ہے بلکہ یہ لوگ اس قوم سے بڑکر ہوئے وہ تاریخ معینہ پر کرتے ہیں ان کے یہاں کوئی قید نہیں جب چاہے یہ خرافات بناتے ہیں

فتوی رشید احمد مطبوعہ لکھنؤ ذی قعدہ 1332

ஒவ்வொரு நாளும் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் பிறப்பு செய்தியை ஓதுவது ஹிந்துக்கள் ஒவ்வொரு வருடமும் மேற்கொள்ளும் ஸான்ங் கன்யா சடங்கிற்கு ஒப்பாகின்றது; அல்லது றாபிழிகள் ஒவ்வொரு வருடமும் அஹ்லுல் பைத்களின் ஷஹாதத்தை பிரதி செய்து நடாத்துவது போன்றுள்ளது; ம ஆதல்லாஹ்! ஜான்சன்கன்யா சடங்கில் தரத்தில் அண்ணலாரின் பிறப்புநிகழ்ச்சியை நிறுத்தியுள்ளார்கள்;இது இழிவான பழிப்புக்குரிய செயலும் ஹறாமும்,குற்றமுமாகும்;

எனினும், இந்தக் கூட்டத்தினர் அவர்களை விடவும் மிகைத்து விட்டார்கள்; அவர்கள் குறிப்பிட்ட திகதியில் செய்கின்றார்கள்; இவர்களிடத்தில் எந்தவிதமான கட்டுப்பாடும் கிடையாது! எப்போது நாடுகிறார்களோ அப்போதெல்லாம் இந்த வீணான கற்பனை வேலையைச் செய்கின்றார்கள்.

பத்வா றஷீத் அஹ்மத்.

ஹி: 1332ல் லக்னோவில் பதிப்பிக்கப்பட்டது.

இதனை கலீல் அஹ்மத் அம்பேட்டி பறாஹீனே காதிஆவில் பக்கம் 148ல் பதிவு செய்துள்ளார்.

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின்புனித பிறப்பு செய்தியை ஹிந்துக்களின் கன்யா பிறப்பு சடங்கிற்கு ஒப்பிட்டு எழுதியதற்கான காரணத்தையோ, அல்லது அதற்கான ஆதாரத்தையோ அவர் முன்வைக்க வில்லை;

றஷீத் அஹ்மத் கொங்கோஹி உதாரணம் கூறிய ஹிந்துக்களின் கன்யா சடங்கு என்பது, வளர்பிறை அல்லது தேய்பிறை யில் எட்டாவது நாளை அஷ்டமி நாள் என்பார்கள், அந்த நாளின் இரவில் ஒரு கக்கரிக்காயை எடுத்து அதன் உட்பகுதி களை நீக்கிய பின், அதற்குள் கிறிஷ்ணன் ,அல்லது கன்யாவின் சிலையை உள்ளே வைப்பார்கள்; பின் விடியற்காலையில் அந்த கக்கரிக்காயின் வயிற்றிலிருந்து வெளியிலெடுப்பார்கள்; அப்போது கன்யா பிறந்து விட்டது,அல்லது கன்யாவின் பிறப்பு நடந்துவிட்டது என்பார்கள்; இதுதான் கன்யாவின் ஜனனமாகும்;

இந்த கன்யா ஜனனத்தை றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் புனித பிறப்புநிகழ்ச்சியான மீலாது ஷரீபுக்கு ஒப்பிட்டுப் கூறியுள்ளான் இந்த சண்டாளன்;

இவ்வாறு உலகில் எந்த ஒரு முஸ்லிமாவது கூறியிருக்கின்றார்களா?

ஷீஆக்கள் ஹளறத் ஹுஸைன் றழியல்லாஹு அன்ஹு அவர்கள் ஷஹீதான தினத்தில் துக்க சடங்கை ஏற்படுத்துவார்கள் ; அவ்வாறுமீலாத் அன்று முஸ்லிம்கள் செய்கின்றார்களா?

எதற்காக மீலாத் மௌலித் நிகழ்ச்சியை கன்யா சடங்கிற்கும், ஷீஆக்களின் தஃஸியா சடங்கிற்கும் ஒப்பிட்டுப் கூறினார்;

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் மீதுள்ள வெறுப்பின் உச்சத்தை வெளிப்படுத்திய சாக்கடை வசனமாக இல்லாமல் வேறு எவ்வாறு இது இருக்க முடியும்?

வரலாற்றில் மீலாத் நிகழ்ச்சியை சடங்காக முதன்முதலில் கொண்டாட்டமாக வருடாவருடம் செய்தவர் ஹிறபல்நாட்டு அரசர்முழப்பர் ஆவார்;

அவர் இதனை அரசவிழாவாக பெரும் செலவில் கொண்டாடினார் ; அந்த கொண்டாட்ட சபைக்கு அக்காலத்தில் வாழ்ந்த பிரபலமான அறிஞர்கள்,ஷைகுமார்கள்,சிற்றரசர்கள், சான்றோர்கள் உள்ளிட்ட அனைவரும் நன்மையையும், பறக்கத்தையும்நாடி கலந்து கொண்டார்கள்;

ஹாபிழ் இமாம் ஜலாலுத்தீன் ஸுயூத்தி றஹ்மத்துள்ளாஹி அலைஹி அவர்கள் கூறுகின்றார்கள்;

.

احدثه ملك عادل وعالم وقصد به التقرب الى الله عز وجل عنده فيه العلماء من غير نكير

: حسن المقصد في عمل المولد

الحاوي للفتاوى ج،٢ص, ٢٢٥

மௌலிது நிகழ்ச்சியை அரசரும் நீதியான வரும் ஆலிமானவருமே ஆரம்பித்தார்;

அதன்மூலம் அல்லாஹ்வுடைய நெருக்கத்தை நாடினார்; அந்த சபையில் அறிஞர்களும், சாலிஹான நல்லோர்களும் மறுப்பில்லாமல் கலந்துகொண்டனர்.

ஆதாரம் :அல்ஹாவி லில் பதாவா: :2 பக் 225

அல்லாமா முல்லா அலீ காரி ரஹ்மத்துல்லாஹ் கூறுகின்றார்.

ثم لا زال اهل الاسلام في سائر الاقطار والمدن والكبار في شهر مولده ويعتون بقرابة مولده الكريم ويظهر عليهم من بركاته كل فضل عميم

இஸ்லாத்தை சேர்ந்த அனைவரும் சகல ஊர்களிலும், நாடுகளிலும், பெரும்பெரும் நகரங்களிலும் மௌலிது ஷரீபின் மாதமாகிய ரபியுல் அவ்வலில் எப்போதும் கொண்டாடியே வந்து உள்ளனர்; இன்னும் மௌலிது ஷரீபுக்கு முக்கியத்துவம் கொடுத்து பிரியத்துடன் அதனை ஓதி வந்தனர்; அதன் பறக்கத்தினால் சகலவிதமான சிறப்புகளும் கருணைகளும் அவர்களுக்குக் கிடைத்தன.

ஆதாரம்: மௌலிதுர் றவிய்யி நீ மௌலிதி நபிய்யி: பக்கம்,4,5

அல்மவாஹிபுல் லதுன்னியா: பா:1பக் : 148.

இது போன்று ஏராளமான அறிஞர்களின் கூற்றுக்கள் மூலம் அதன் சிறப்பையும் அதனால் கிடைக்கும் நன்மைகளையும் கோடிட்டு காட்டுவதை அறிய முடிகின்றன.

இந்தபுனித மீலாத்,மௌலிது சபையில் கலந்துகொண்ட எவருக்கும் ஹிந்துக்களின் கன்யா சடங்கைப்பற்றியோ, ஷீஆக்களின் தஃஸியாவைப்பற்றிய பேச்சோ அங்கு இருக்கவில்லை; அப்படியிருக்க இந்த கீழ்தரமான செயலை புனித மௌலிது , மீலாதுக்கு எவ்வாறு ஒப்பிட்டுக்கூறினார்?

அறிஞர்கள் புடைசூழ அருள் நாடி கலந்து கொண்ட அத்திருசபையில் கலந்து கொள்வது ஹறாம் பாவமான கற்பனையான வீண்வேலை என்று எவ்வாறு தீர்ப்புக் கூறினார்?

உண்மையில் இச்செயலை ஹறாம் ,ஷிர்க் என்பதோடு நிறுத்திக் கொள்ளாமல் இவர்கள் காபிர்களைவிடவும் மோசமானவர்கள் என்று கூறி தனது மனதிலிருந்த நயவஞ்சகத்தனத்தை வெளிப்படுத்தியுள்ளார்.

றஷீத் அஹ்மத் கங்கோஹியின் தீர்ப்பின்படி, மௌலிது ஷரீப் ஓதுபவர்கள் அச்சபையில் கலந்து கொள்பவர்கள் , மரியாதைக்காக எழுந்து நிற்பவர்கள் யாராக இருந்தாலும் எங்கிருந்தாலும் அவர்கள் அனைவரும் காபிர்களைவிடமோசமானவர்களாகும்; ந ஊதுபில்லாஹ்!

கேடுகெட்ட இந்த அருவருப்பான கருத்தைக் கூறிய றஷீத் அஹ்மத் கங்கோஹியின் கூற்றினால் ஹி,ஏழாம் நூற்றாண்டிலிருந்து இதுவரையுள்ள முஸ்லிம்கள்அனைவரையும் காபிராக்கி விட்டார்.

றஷீத் அஹ்மத் கங்கோஹிக்கு ஹறாமாகவும், ஷிர்க்காகவும் , ஹிந்துக்களின் ஸாங்கா கன்யா ஜனனத்தை விட

**கேவலமானதாகவும் தெரிந்து மௌலித் மீலாத் நிகழ்ச்சியை இஸ்லாமிய அறிஞர்கள் எவ்வாறு நோக்குகின்றார்கள் என்பதைக் கவனியுங்கள்!,**

**وقد قال ابن حجر الهيتمي**

**الحاصل ان البدعة الحسنة متفق على ندبها وعمل المولود واجتماع الناس له كذالك اي بدعة حسنة**

**سيرة الحلبية :, ص، ١١٤**

**நல்ல பித்அத்தைச்செய்வது ஸுன்னத் என்பதில் அறிஞர்கள் அனைவரும் கருத்தொற்றுமையாகியுள்ளனர்; மௌலித் நிகழ்வும் , அதற்காக ஒன்று கூடுவதும் இவ்வாறான நல்ல பித்அத்தாகும்.**

**ஆதாரம் : ஸீரத்துல் ஹலபிய்யா: பக்: 114**

**ஹாபிழ் இப்னுஹஜருல் அஸ்கலானி றஹ்மத்துள்ளாஹி அலைஹி அவர்களும் இதே கருத்தை கூறியதாக மேற்படி நூலில் அதே பக்கத்தில் வரையப்பட்டுள்ளது;**

**கங்கோஹிக்கு ஹறாமாகவும் , ஷிர்க்காகவும் தெரிந்த மௌலிது, மீலாத் நிகழ்வு ஸுன்னத் தான, பறக்கத் பொருந்திய அல்லாஹ்வின் நெருக்கத்தை ஈட்டித்தரக் கூடிய பூண்ணியமான நல்ல செயல் என்று உலகம் முழுவதும் ஏற்றுக்கொண்ட அறிஞர்கள் கூறுகின்றனர்;**

**இதனால்தான் உலகமுழுவதிலுமுள்ள முஸ்லிம்கள் மௌலிது மீலாத் நிகழ்ச்சியை கண்மணி நாயகம் முஹம்மது முஸ்தபா ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் பேரில் பேருவகையோடு அதனை தொடர்ச்சியாகச் செய்து வருகின்றனர்.**

மௌலிது , மீலாத் நிகழ்வை ,ஹிந்துக்களின் ஸாங்கா கன்யா ஜனனத்திற்கும், றாபிழிகளின் தஃஸியாவுக்கும் ஒப்பிட்டுக்கூறியவருக்கான சங்கை மிகு உலமாக்களின் தீர்ப்பு என்ன? என்பதைக் கவனியுங்கள்!

ஹளறத் மௌலானா ஷாஹ் ஸலாமத்துள்ளாஹ் றஹ்மத்துள்ளாஹி அலைஹி அவர்கள் கூறுகின்றார்கள்.

றபீஉல்அவ்வல் மாதத்தில் நடக்கக்கூடிய மீலாத் மஜ்லிஸை ஒழுக்கம் கெட்ட சிலர் கன்யா ஜனனத்திற்கு ஒப்பிட்டுப் கூறி தனது வெள்ளை முகத்தை தன்னுடைய பெயரையும் செயலையும் போன்று கறுப்பாக்கி விட்டனர்; இன்னும் அதிஉச்ச ஒழுக்கக் கெட்ட வேலையையும் செய்து விட்டனர்;

அசிங்கமான இந்தக் கூட்டத்தினர் ஹஜறுல் அஸ்வத் கல்லை முத்தமிடுவதையும், புனித கஃபாவைத் தவாபு செய்வதையும் ஹனுமான், நாவாய் மஹால் உள்ளிட்டோருக்கு வணக்கம் செய்வதை ஒப்பிட்டுப் கூறினாலும் ஆச்சரியமான ஒன்றல்ல! இந்த கேடுகெட்ட குப்றியத்தான பேச்சிலிருந்து எம்மை அல்லாஹ் பாதுகாப்பானாக!

மீலாத் சபைகளை கன்யா ஜனனத்திற்கு ஒப்பிட்டுப் கூறுவது எந்தவிதமான சிரமமுமில்லாமல் நரகத்தின் வாசலைத்திறப்பதாகும்.

ஆதாரம்: கிதாப் தஹ்கீகுல் ஹக் : பக்கம்: 26

إذا عاب الرجل النبي صلي الله عليه وسلم في شيئ كان كافرا

فتاوي قاضي خان :

ج٣ص,٥٧٤حاشيةفتاوي عالم گير

யாராவது ஒரு நபர் றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் ஏதாவது ஒருவிடயத்தைக்குறைகண்டால் திட்டவட்டமாக காபிராகிவிடுவான்.

ஆதாரம் :பதாவா காழிகான் (பதாவா ஆலம் கீர் ஓரம்)

பாகம்: 3, பக்கம்:574

றஷீத் அஹ்மத் கொங்கோஹி யின் மேற்படி கூற்றைக்கண்டித்து இந்தியாவில் பல ஃபத்வா க்கள் வெளிவந்தன ; விரிவஞ்சி தவிர்த்துள்ளோம்;

இதுதான் தேவ் பந்தி முனாபிக்குகளின் மனதிலுள்ள நயவஞ்சகமாகும்; இந்த நயவஞ்சகத்தின் சாயல் இப்போது தப்லீக் ஜமாஅத் தாரின் உள்ளங்களில் ஊடுருவிட்டது!

ஆகவேதான் இலங்கையில் அனைத்து பள்ளிவாசல்களிலும் குதூகலத்தோடு கொண்டாடி வந்த மீலாத் நிகழ்ச்சிகளும், பள்ளிவாசல்களிலும் , வீடுகளிலும் பக்திப் பரவசத்தோடு ஓதிவந்த மௌலிது சபைகளும் இடம் தெரியாமல் மறைந்து விட்டன;

தேவ்பந்தி வஹாபிகளின் இந்த அபத்தமான கொள்கைகளைக் கோடிட்டுக் காட்டி 1966ல் இள்ஹாறுல் ஹக் -சத்தியப்பிரகடனம்! என்ற பெயரில் ஷைகுனா ஸூபி ஹளறத் நாயகம்

கத்தஸல்லாஹு ஸிர்ரஹுல் அஸீஸ் அவர்கள் ஒரு அருமையான ஒரு நூலை வெளியிட்டார்கள்;

கல்புகள் இருண்டு போன ஆலிம் களுக்கு எதுவுமே தெரியவில்லை; எப்படியான அசிங்கமான வார்த்தைகளை கண்மணி றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் பேரில் கூறினாலும் அதை ஒருபக்கம் ஓரமாக்கி விட்டு இவர்களை குத்பு , முர்ஷிது , ஆலிமுர்றப்பானி என்று கூறுவதிலேயே கவனம் செலுத்தினார்கள்;

இந்த கேடுகெட்ட வர்களை வாழ்த்திக்கொண்டே வெட்கம் கெட்ட தனமாக மௌலிது மஜ்லிஸுகளில் கலந்து இராகம்பாடி ஓதிவிட்டு வயிறு முட்ட சாப்பிட்டு பணமும் பெற்றுச் சென்றனர் இவர்கள் அனைவரும் நாளை மறுமையில் அவமானத்தோடு தலைகவிழ்த்து முழந்தாலிட்டு நிற்பார்கள் ;

அப்போது இவர்களைக் காப்பாற்ற எந்த ஒரு பணமுதலைகளோ, அமீர்களோ, தனது செல்வாக்கோ வரமாட்டாது!

றஸூலுள்ளாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களைக் குறை கண்ட இக்கேடு கெட்ட கூட்டத்தின் வாடை கூட நம்மிலும் நமது பிள்ளைகள் குடும்பம் அன்பர்கள் மற்றும் சகல முஃமின்களிலும் படாமல் பாதுகாப்பானாக!, ஆமீன்!